பெட்டகம் 1

என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர்

பெட்டகம் - 2
கேட்டு வாங்குங்கள்

ரூ.15/-

## பணம் பண்ணலாம் வாங்க!



# தேன் துளிகள்...





– பக். 40

## உழைப்போம்; உயர்வோம்

நான் ரசித்த காட்சி - 33
வாய்ப்புகள் வானம் வரை.. - 60
பயிற்சிக் களங்கள் பாடம் பயின்ற இடங்களே - 105
ஸ்மைல் ப்ளீஸ்! - 136
முயற்சி திருவினையாக்கும் - 143
உழைக்கு பெண்களே, உருவாக்கும் கைகளே - 148

## சேமிப்போம், வளர்வோம்

பணம் பண்ணலாம் வாங்க - 28
பணத் துணைவன் - 52
வங்கிக் கணக்கில் விழிப்புணர்வு - 57
பங்குச் சந்தையின் மூலம் சொத்து சேர்க்கலாம் - 97

## புதிய பகுதி

கைவேலை - 12

## பாடமும், கதையும்!

எதிலும் தேடு
புதிய கோணம்! - 90
அப்பாவி
(அப்பா+ஆவி) - 156



– பக். 129





& MILKA WONDER CAKE and New Wonder Bread

இணைந்து வழங்கிய
கோவையில் கனிவித் திருவிழா!
– பக். 100



– பக். 100

அடுத்த
வெள்ளி விழா
பாடடுங்க
பக்கம் - 120

மலர் : 25
இதழ் : 6

மங்கையர் மலர்



ஹாய் பிரெண்ட்ஸ்,
சொன்னதைச் சொல்லும் கிளிப்
பிள்ளைதானே நான். ஆனா பாருங்க. கல்லூரி விடுமுறை,
செமஸ்டர் எக்ஸாம்ஸ், குளுகுளு ட்ரிப்பு இதுகளெல்லாம்
எஸ்கேப். அதனால் இந்தத் தடவை (மட்டும்) 'கணினி ஹனி'
க்கு விடுமுறை சரியா? கீகீ... கீகீ... கீகீ.
கிளியக்கா.

**முத்தான மூன்று!**

**ஆகஸ்ட் மாதம் 3 புத்தகங்கள் உங்களைத் தேடி!**


**Exclusive**

தமிழக முதல்வருக்கு ஒரு வேண்டுகோள்! - 129

**என்ன கோர்ஸ், எங்கு படிக்கலாம்?**

இனி ஒரு விதி செய்வோம்! - 17

**அந்த நாள் ஞாபகம்**

நான் பேச நினைப்பதெல்லாம்... - 141

**மேலும் கதைகள்**

தேன் நிலவு (தொடர் கதை) - 72
கர்ணன் (சிறப்புச் சிறுகதை)- 168

**தெரிந்து கொள்வோமே!**

சீப்பிற்குப் பின் இத்தனை விஷயங்களா? - 36
இதுவும் ஓர் இறைவழிபாடுதான் - 109
வெட்டிவேர் வாசம்! - 153
மருந்துகள் தேவை கவனம்! - 163

**தொடரும் தொடர்கள்...**

உடல் தானம் - 10
நியூஸ் சாலட் - 21
இந்த மாதம் எப்படி? - 81
கூடி விளையாடு பாப்பா - 133
பொன் மழை பொழியத் துதி - 160
இம்மாத இல்லத்தரசி - 177

**ரேவதி சங்கரனின்...**

உங்களுடன்... - 5
ஈச்வரி ஜெகதீச்வரி - 40
அன்பு வட்டம் - 68
அம்மா சொல்லுங்களேன்... - 117

**KGEYES வழங்கும் வீடு!** - பக். 8

**இந்த மாத விழா மங்கை** - பக். 79

**மெகா போட்டி** - பக். 127

**போஸ்ட் கார்டு கட்டுரை** - பக். 125

OKJ **மணிமங்கை ரூ .25,000/- தங்க நகை யாருக்கு...** - பக். 113

More than 25 Models

Sofa Sets





More than 25 Models

Bedroom Sets



## Almirahs



More than 100 Models

# Quality. Trust. Excellence.




## Furniture World

Since 1968

Lifetime Investment

*One of India's Biggest Furniture Showroom*

H.O : Mylapore ( 20,000 sq.ft ) 139, R H Road,
Next to Sanskrit College, Ch-4. **Ph : 24982930 / 31**

**Anna Nagar ( West )**
DABC Bldg.,
6, M T H Road, Padi,
Opp. TVS, Padi, Ch-50.
**Ph : 52155929**

**Velachery**
Paramount Park,
358, Velachery-Tambaram
Main Rd, Ch-42.
**Ph : 52144929**

**Poonamallee**
58, Poonamallee
High Road,
Near Bus Stand, Ch-56.
**Ph : 98414 29129**

**Coimbatore**
266, Mettupalayam Road,
Near Saibaba Temple
Bus Stop, Cbe - 43.
**Ph : 2452929 / 30**

## Computer Tables



More than 25 Models

## Entertainment Sets



More than 10 Models

## Also Available

Institutional Furniture
Slotted Angle Racks
Industrial Lockers
Kitchen Cabinets
Filing Cabinets
Book Case

We also undertake all kinds of Interior Works

Exchange Option available for Old Furniture

**Major Credit Cards accepted**



More than 25 Models

Dining Sets

## Sofa-cum-Beds



More than 10 Models

## Wardrobes



More than 10 Models

# உங்களுடன்...

இன்றைய வாழ்க்கை எப்படி இருக்கிறது என்று கேட்டால், ''என்னவோ தலைதெறிக்கும் அவசரமாக இருக்கிறது'' என்றுதான் சொல்லத் தோன்றுகிறது!

கேட்பவை, பார்ப்பவை, அனுபவத்தால் உணர்கின்றவை எல்லாவற்றிலும் ஆதாரமான சுருதி குறைகின்றதே! அந்த அபஸ்வரத்தின் காரணம் என்ன? வெள்ளியப்பன் என்று விளையாட்டாகச் சொல்வார்களே அந்த 'உருண்டோடிடும் பணம் காசெனும் உருவமான பொருளே!' - அதுதான். அதுவும் அண்மையில் கண்டவை உள்ளத்தை உலுக்கி விட்டது.

இயற்கை அளித்த கொடை என்று நாம் மகிழ்ந்த பழங்களுக்கு மருந்து தெளித்துப் பழுக்க வைக்கிறார்களாம். தர்பூசணிப் பழத்தில் கண்ட தண்ணீரில் கரைத்த சாக்கரினை ஊசி மூலம் ஏற்றி விடுகிறார்களாம். தக்காளிப் பழத்தின் மீது வர்ணப் பொடியைத் தடவுகிறார்களாம். அதுவும் உடலுக்கு ஊறுவிளைவிக்கும் என்று தெரிந்தேதான்! பிஞ்சுக் குழந்தைகளுக்குப் பழம் ஊட்டுவதாக நஞ்சையல்லவா ஊட்டுகிறோம்.

மாட்டுக்குப் பால் சுரக்க ஊசிபோடுகிறார்களாம், அந்தப் பாலைக் குடிக்கும்

# எல்லாமே காசுக்கா?

குழந்தைகளுக்குக் கிடைப்பது பாலின் நன்மையா? ஊசி மருந்தின் தீயவிளைவா? அன்றும் 'திரைகடலோடித் திரவியம் தேடினார்கள்' - நியாய தர்மத்துக்குப் பயந்து - இன்று வியாபாரம் என்பது கண்கட்டு வித்தையாகி விட்டது ஏன்? எல்லாம் காசுக்கு!

செயற்கையாக மழை பெய்யச் செய்யலாம் என்று மேகத்தினூடே சில்வர் அயோடைடு தூவி ஏமாந்தோமே அதுவும் காசுக்காக! மற்ற நாடுகள் கைவிட்டதை ஏற்றுக் கொண்டு ஏமாறுவதே நமக்கு வழக்கமாகி விட்டது. யூகலிப்டஸ் மரத்தால் மழைக்காடுகள் விளைவிக்கலாம் என்று விற்கப்பட்ட கருத்தை உடனே சிரமேற்கொண்டு மலைக்காடுகளாக வளர்த்த பின்னர் மற்றுமொரு பேருண்மை தெரிவிக்கப்படுகிறது. யூகலிப்டஸ் வளர்த்தால் நிலத்தடி நீர் உறிஞ்சப்படும் என்று! உறிஞ்சப்பட்டது நமது நெஞ்சிலிருந்த ஈரமும்தானே!

பெற்ற குழந்தைகள் விற்கப்படுவது, மதிப்பெண்கள் மிதிக்கப்படுவது,

**ரேவதி சங்கரன்**

**மங்கையர் மலர்**
(கல்கி நிறுவன வெளியீடு)

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர் :
கி.ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை -32

ஆசிரியர் :
ரேவதி சங்கரன்

உதவி ஆசிரியர் :
சாந்தி ரங்கராஜன்

தொலைபேசி :
22251522, 22250623,
22251324
தொலைநகல் :
044 - 22251021
மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
mangayarmalar@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
மங்கையர் மலர்
இன்டர்நெட் முகவரி :
www.mangayarmalaronline.com
சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.190/-
ஆறு மாதம் : ரூ.95/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 37 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.900/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

இந்தியாவின் நெ.1 மகளிர் இதழ் : மங்கையர் மலர்

*தகுதியிருந்தும் கல்வி எட்டாக்கனி ஆவது, ஆலயங்களிலும் சிலருக்கு மட்டுமே முதல் மரியாதை கிடைப்பது, பத்துவிரல் மோதிரம் போட்டவருக்குப் பின்னால் பத்துப் பேர் ஓடுவது, கடவுளை நம்பாதவனும் அக்ஷயமாகப் பொன்மழை பொழியும் என நம்புவது, மலிந்துவிட்ட கொலை, கொள்ளை இப்படிப் பொருமிக் கொண்டே பட்டியலைப் போட்டுப்*

## அறிவிப்பு

**ப**த்திரிகைக் காகிதம், மேலட்டைக்கான ஆர்ட் காகிதம் மற்றும் பத்திரிகை அச்சாவதற்கான இதர பொருள்கள் ஆகிய அனைத்தின் விலைகளும் அதிக அளவில் உயர்ந்துவிட்ட போதிலும், ''மங்கையர் மலர்'' விலையை வாசகர் நலன் கருதி உயர்த்தாமலே இருந்து வந்தோம். ஆனால், தற்போது வேறுவழியின்றி நாலரை ஆண்டுகளுக்குப் பிறகு விலை உயர்வு அறிவிக்க வேண்டிய நிர்ப்பந்தத்துக்கு உள்ளாகியிருக்கிறோம். 2005, ஆகஸ்டு இதழ் முதல், ஒரே ஒரு ரூபாய் விலை உயர்வை பெரிதாக எண்ணாமல் வாசகர்கள் தொடர்ந்து நல்லாதரவு அளித்து வருமாறு கோருகிறோம்.

2005 ஆகஸ்டு இதழ் முதல் மங்கையர் மலர் தனிப் பிரதி விலை ரூ. **16/-**

பதிப்பாளர்,
கல்கி நிறுவனப் பத்திரிகைகள்.

*பார்த்தால் இத்தனைக்கும் பின்னணியில் கேட்கும் கொக்கரிப்பு பணம் என்னும் பேயினுடையது! பணம் தேவைதான்! மற்றவரது கண்ணீரில் விளைந்த சாதனையும் சம்பாத்தியமும் கண்முன்னே கரைந்து விடும் அல்லவா? காசை வேசாக எண்ணி அறிவை விற்றுவிடாதே என்பதாகக் 'காசா வேசா' என்று சொல்லி வைத்தார்கள். இன்று 'காசாபே சாகிறோம்!' காப்பாற்றப் போவது யார்?*

## போட்டி விதிமுறைகள் :

- மாதம் ஒரு போட்டித் தலைப்பும், மாதம் ஒரு கூப்பனும் 10 மாதங்களுக்கு தொடர்ந்து இங்கு இடம்பெறும்.
- வாசகிகள் பத்து மாதங்களும் தொடர்ந்து இப் போட்டியில் கலந்து கொள்ள வேண்டும்.
- பத்தாவது மாத இறுதியில் அனைத்துப் போட்டிகளுக்கும் உண்டான விடைத்தாள்களையும் மொத்தமாக அறிவிக்கப்படும் கடைசி தேதிக்குள் அனுப்ப வேண்டும்.
- போட்டியில் வழங்கப்பட்டிருக்கும் KGEYES போட்டிக் கூப்பனையும் சேர்த்து வைத்து கூப்பனில் கேட்கப் பட்டிருக்கும் கேள்விக்கான பதிலையும் அதிலேயே நிரப்பி மொத்தக் கூப்பன்களையும் பத்தாவது மாத முடிவில் அறிவிக்கப்படும் இறுதி தேதிக்குள் விடைத்தாள்களுடன் இணைத்து அனுப்ப வேண்டும்.
- போட்டியும் பரிசும் வருமான வரி விதிமுறைகளுக்கு உட்பட்டது.
- தேர்வு செய்யப்படும் விடைத்தாள்களிலிருந்து 5 இல்லத்தரசிகளின் வீட்டிற்கு மங்கையர் மலர் மற்றும் KGEYES குழு படையெடுக்கும்.
- இறுதியாக ஒருவர்க்கு மட்டும் வீடு பரிசு!
- பரதன் பப்ளிகேஷன்ஸ் நிறுவனத்தில் பணிபுரியும் ஊழியர்கள் மற்றும் அவர்தம் உறவினர்கள் இந்தப் போட்டியில் பங்குகொள்ள வாய்ப்பில்லை.
- ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர்



# KGEYES

KGEYES RESIDENCY PVT LTD.

இணைந்து வழங்கும்

10 மாதப் போட்டி

# என் இனிய இல்லம்

போட்டி 4

## போதுமோ இந்த இடம்?

தேவைகளுக்காகப் பொருள்களை வாங்கிக் குவித்து விடுகிறோம் - ஆனால் அவைகளை வைக்க இடம் தேடித் தவிக்கிறோம். - சரி! இடப்பற்றாக்குறையைச் சமாளிக்க உங்கள் கருத்துக்களை எழுதலாமே!

என்றும் உங்களுடன்
மங்கையர் மலர்
கோலாகல வெள்ளி விழா





 KGEYES

KGEYES RESIDENCY PVT LTD.

**கேள்வி**

எதிர் பக்கப் படத்தில் காணப்படும் ஏதேனும் 5 தூண்கள், எந்த கோவில் மற்றும் அரண்மனையைச் சார்ந்தது என்று குறிப்பிடவும்.

| | |
|---|---|
| 1. ☐ மதுரை நாயக்கர் மஹால் | ☐ மீனாட்சி அம்மன் கோவில் |
| 2. ☐ மைசூர் அரண்மனை | ☐ சாமுண்டீஸ்வரி கோவில் |
| 3. ☐ கேரளா பத்மநாபபுரம் அரண்மனை | ☐ சோட்டானிக்கரை பகவதி ஆலயம் |
| 4. ☐ காரைக்குடி செட்டிநாட்டு அரண்மனை | ☐ தூத்துக்குடி எட்டயபுரம் அரண்மனை |
| 5. ☐ தஞ்சாவூர் அரண்மனை | ☐ பாஞ்சாலங்குறிச்சி கோட்டை |
| 6. ☐ ஸ்ரீரங்கம் கோவில் | ☐ திருப்பரங்குன்றம் கோவில் |
| 7. ☐ ஜெய்பூர் அரண்மனை | ☐ உதய்பூர் அரண்மனை |

பெயர் : .................................................... வயது : ....................

முகவரி : ................................................................................

தொலைபேசி : ................................ மின்னஞ்சல் : ................................

அனைத்து வசதிகளுடன்.... சென்னையில்... காத்திருக்கிறது.

# நினைக்கத் தெரிந்த மனமே...

டாக்டர். என். ராமகிருஷ்ணன்



ஜூன் மாதம் மங்கையர் மலர் பிரசுரமான நாள். காலை 8 மணிக்கு என் அண்ணன் மோஹனகிருஷ்ணன் தொலைபேசியில் அழைத்து, "மங்கையர் மலர் படித்து விட்டாயா?" என்று கேட்டார். "வேலைக்குக் கிளம்புமுன் அவசரமாகப் புரட்டினேன்" என்று நான் கூற, "125-ஆம் பக்கத்தில் வெளிவந்திருக்கும் விஷயத்தை உடனடியாக நான் உனக்குப் படித்துக் காட்ட வேண்டும்" என்று கூறி, "விளக்கேற்ற வருவாள்" என்று வாசகர் குணா அச்சுதன் வெளியிட்டிருந்த உணர்ச்சிகளின் வடிவத்தைப் படித்துக் காட்டினார். "உன் கட்டுரையால் ஒருசிலரின் வாழ்க்கையில் ஏற்படும் நன்மையை நினைத்தால் சந்தோஷமாக இருக்கிறது. வாசகர்களின் சந்தேகங்களை நேரடியாகத் தெளிவுபடுத்தினால் நன்றாக இருக்குமே" என்று கூறினார். நான் அன்றே ஆசிரியர் ரேவதி சங்கரனிடம இதைப் பற்றி ஆலோசிக்க அவரும் ஒரு நிமிடம் கூடத் தாமதிக்காமல் "உதானம் போன்ற உன்னதமான விஷயங்களைப் பற்றி விழிப்புணர்ச்சி ஏற்படுத்த எங்களால் இயன்ற எந்த உதவியும் செய்யத் தயாராக இருக்கிறோம்" என்று என்னை ஊக்குவித்தார்.

இந்தப் பக்கத்தை ஒரு கேள்வி பதில் பகுதியாக நான் மாற்ற விரும்பவில்லை. வாசகர்களின் உறுப்பு தானம் சம்பந்தப்பட்ட எந்தச் சந்தேகத்தையும் தெளிவுபடுத்தத் தயாராக இருக்கிறேன். மேலும் உதானம் சம்பந்தப்பட்ட எந்த ஒரு நிகழ்ச்சியும் பகிர்ந்து கொள்ள இது ஒரு வாய்ப்பாக இருக்க வேண்டும். இதன் மூலம் பலர் பயன்படுவர். "சாரிட்டி பிகின்ஸ் அட் ஹோம்" என்று கூறுவார்கள்.

இது என் குடும்பத்திற்கு உதானம் விஷயத்திலும் பொருந்துகிறது. எண்பது வயதாகும் என் பாட்டி நிறைய புத்தகங்களையும், பத்திரிகைகளையும் இன்றும் விடாமல் படித்துக் கொண்டிருக்கிறார். உதானம் தொடரைப் பற்றி பாராட்டுவதோடு நிற்காமல், "நான் உன்னிடம் இப்பொழுதே தெளிவாகச் சொல்லி விடுகிறேன் - என்னுடைய உயிர் பிரியும் போது எந்த உறுப்பு யாருக்கு பயன்படுமென்றாலும் தயவு செய்து கொடுங்கள். அப்படி இந்த வயதில் உறுப்புகள் உபயோகப்படாவிட்டால் முழு உடலையும் மருத்துவக் கல்லூரிக்கு வேண்டுமானாலும் கொடுங்கள். உயிர் போன பிறகு எந்த விதத்திலாவது பிறருக்கு உபயோகமாக இருந்தால் சந்தோஷம்தான்" என்று அவர் கூறியபோது எனக்குப் பெருமையாக இருந்தது. ஜனனமும் மரணமும் தவிர்க்க முடியாத இயற்கையான விஷயம்தான் என்பதை உணர்ந்தும் மரணத்தைப் பற்றி வெளிப்படையாகப் பேசத் தயங்கும் நம் கலாசாரத்தில் இத்தகைய வெளிப்பாடுகள் ஒரு பெரிய மாற்றம்தான்! நெருப்பென்றால் வாய் சுட்டு விடாது என்பதுதானே உண்மை!

"நினைக்கத் தெரிந்த மனமே உனக்குக் கொடுக்கத் தெரியாதா?" என்பது போல் கொடுக்க நினைத்தாலும் அதை முறையாக எப்படிச் செய்வது என்பதை வரும் இதழ்களில் பார்க்கலாம்.

(உதானம் தொடரும்)

புதிய பகுதி

# அழகாய் வரவேற்கும் மிதியடி!














**கா**ல் மிதிகள் இப்போது பல மாடல்களில் பல வகையான துணி, கயிறு, ரப்பர் போன்ற பல ரகங்களில் பல டிசைன்களில் (வடிவங்கள்) கிடைக்கின்றன.

சில வீடுகளில் கோணித் துணியை வாங்கிக் கால் மிதிகளாகப் பயன்படுத்துவர். எவ்வளவு விதமான கால் மிதிகள் இருந்தாலும் கோணித் துணிக்கு நிகர் ஆகாது. ஏனென்றால், முதலாவதாக இதன் விலை மலிவு, அடுத்தது ஈரத்தை எளிதில் உறிஞ்சிக் கொள்ளும் தன்மையுடையது மூன்றாவது நம் கால்களை கோணித் துணியில் துடைக்கும் போது மண், தூசு, ஈரம் போன்றவை சுத்தமாக துடைக்கப்படுகின்றன.

அந்தக் கோணித் துணியை நம் ரசனைக்கு தகுந்தாற்போல் அலங்கரித்துப் போட்டால் பார்ப்பவர்கள் இதை எங்கே வாங்கினாய் என்று கேட்கும் விதத்தில் இருக்கும். பார்ப்பதற்கு விலை உயர்ந்ததாகத் தெரிந்தாலும்









அனல் பறக்கும் விவாதங்கள்.
சுட்டெரிக்கும் கேள்விக்கணைகள்.
வியர்க்க வைக்கும் வேலை.

இத்தனைக்கும் நடுவே
நீங்கள் பட்டுப் புடவையில்
புன்னகைப்பதுதான் எப்படி?

வேலைக்குச் செல்லும் நவ நாகரீக மங்கையருக்காக, சேகர் எம்போரியம் பெருமிதத்துடன் வழங்குகிறது 9-to-5 பட்டுப் புடவைகள். பாரம்பரிய பட்டின் உயர் தரமும், புது யுக டிசைன்களும் சங்கமிக்கும் இந்த மெல்லிய ரக காட்டன் பட்டுப் புடவைகள், பொலிவான தோற்றத்தைத் தருவதோடு, நாள் முழுவதும் உங்களை முகம் மலர்ந்து இருக்கச் செய்யும்.



- காட்டன், சிந்தடிக் புடவைகள்
- சுடிதார், சல்வார் கமீஸ்
- சூட்டிங், சர்ட்டிங், ரெடிமேட்ஸ்
- மேற்கத்திய ஆடைகள்
- சிறுவர்களுக்கான புது ஸ்டைல்கள்

**சேகர் எம்போரியம்**

வாழ்வின் வண்ணங்கள்

22, ஆற்காடு சாலை, கோடம்பாக்கம், சென்னை - 600 024. போன்: 2483 8035/ 2483 2075/2483 2076

www.sekar-emporium.com E-mail: sekaremporium@yahoo.com



**பித்தான் துவாரத் தையல்**

1. துணியில் ஊசி குத்தி நூலை இழுத்து மறுபடியும் 2 என்ற இடத்தில் குத்தி 3 என்ற இடத்திலிருந்து ஊசியை வெளியே கொண்டு வர வேண்டும். ஊசிக்கு அடியில் நூல் இருக்க வேண்டும்.



**சங்கிலித் தையல்**

படத்தில் உள்ளது போல் 1 என்ற இடத்தில் ஊசி குத்தி நூலை வெளியே இழுத்து மறுபடியும் அதே இடத்தில் குத்தி சிறிது தள்ளி எடுத்து ஊசிக்கு அடியில் நூல் வரும்படி இழுக்க வேண்டும்.

நாமே செய்வதால் மிக மலிவாகச் செய்ய லாம்.

## கோணித் துணியில் கால் மிதி தயாரிக்கும் விதம் :

**தேவையான பொருள்கள் :**

கோணித் துணி - 1 மீட்டர் (அடர்த்தியான)
உல்லன் நூல் - இரண்டு உருண்டை,
குரோஷா ஊசி - 1,
சாதாரண கோணி தைக்கும் ஊசி - 1

**செய்முறை :**

முதலில் கோணித் துணி அடர்த்தி உள்ளதாக (அதாவது திக்காக) பார்த்து வாங்கிக் கொள்ள வேண்டும். அதன் அகலம் 36" (அங்குலம்)தான் இருக்கும். கால் மிதியின் நீளத்தை நம் வாசலுக்குத் தகுந்தாற்போல் வெட்டிக் கொள்ளவும். அதனை நீளவாக்கில் இரண்டாக மடித்து சரியான நடுப்பாகத்தில் இரண்டு பக்கமும் சிறிய கோலம் அல்லது டிசைன் (அ) Welcome, Use me என்று வரைந்து கொள்ள வேண்டும். அந்தக் கோலத்தை (செயின்) சங்கிலித் தையல் மூலம் தைத்து முடிக்கவும். பின் அதை ராங்சைடில் திருப்பி மூன்று பக்க ஓரங்களை மிஷின் அல்லது கெட்டி கைத் தையல் மூலம் தைத்து அதைத் திருப்பி அதன் வாய் பாகத்தையும் தைத்து இழுக்கவும்.

அதன்பின் ஓரங்களை பித்தான் துவாரம் தையல் அல்லது குரோஷா தையல் மூலம் அலங்கரித்து முடிக்கவும்.

இப்போது பார்க்க மிக அழகான கால் மிதி ரெடி. நம் கண்ணே பட்டுவிடும் போல் இருக்கும்!

சங்கிலி, குரோஷா தையல் தெரியாதவர்கள் இங்கு கொடுத்துள்ள தையல் செய்முறையைப் படித்துத் தெரிந்து கொண்டு தைக்கலாம். இந்தத் தையல்கள் மிக எளிமையானவை. எல்லோரும் எளிதாகச் செய்யக்கூடியவை.

கோணித் துணி ஒரு மீட்டர் - ரூ. 20/-
உல்லன் பால்ஸ் (3) - ரூ. 30/-
செலவு - ரூ. 50/-
100-லிருந்து 150 வரை விற்கலாம்.

**- ஹபீப் உன்னிஸா பீகம்**

**ஹபீப் உன்னிஸா பீகம் இதுவரை 500 வகை எம்பிராய்டரிகளும், 200 வகை கைவினைப் பொருட்களும் செய்யக் கற்றுக் கொண்டு சென்னை தொலைக்காட்சியில் 40க்கும் மேற்பட்ட நிகழ்ச்சிகளைத் தந்துள்ளார். இவருடைய கைவினைப் பொருட்கள் பெரும்பாலும் வீணாகி குப்பைத் தொட்டிக்குச் செல்லும் பொருட்களைக் கொண்டே செய்யப்படுகிறது. இனிவரும் இதழ்களில் மலர் வாசகிகள் நிறைய கைவேலைகளைக் கற்றுக் கொள்ளலாம்.**

# Angels®

Advanced Clinic (P) Ltd

**hair, skin & body care**

***Since 1991***

*Website: www.angelsadvancedclinic.com*
*Email: angels@angelsadvancedclinic.com*



**Dr. Radhika Reddy M.A., Ph.D.,**
Doctor of Philosophy in Cosmetology
Recipient of Indira Gandhi Priyadarshini Award, Member of International Aestheticians, **ENGLAND** (1997)
Member of British Association of Beauty Therapy & Cosmetology, UK.

## தேவையற்ற ரோமங்களுக்கு ஏஞ்சல்ஸ் தரும் விசேஷ சிகிச்சை

தேவையற்ற ரோமங்களை நீக்குவதற்கு தற்காலிகமான முறைகள் Shaving, Threading, Plucking, Bleaching, Waxing, Removals முதலியன. இவைகளை உபயோகப்படுத்தி பலன் இல்லை என்று வெறுப்படைந்து விட்டீர்களா ? கவலையை விடுங்கள். அப்படியென்றால் அறிமுகப்படுத்துகிறோம் ஏஞ்சல்ஸ் தருகிற Lyra I NDYAG லேசர் சிகிச்சை உங்களுக்காகவே ! இச்சிகிச்சை Advance Technology மூலம் செய்யப்படும் ஓர் அற்புதமான சிகிச்சை. இச்சிகிச்சையின் மூலம் தேவையற்ற ரோமங்களை நிரந்தரமாக நீக்கி விடலாம். எந்த விதமான பக்க விளைவு இல்லாத முழுமையான non-surgical சிகிச்சை. இந்த Lyra I NDYAG Laser பற்றி நன்றாக தெரிந்து கொள்வதற்காக ஏஞ்சல்ஸ் Managing Director, Dr. Radhika Reddy யை அணுகினோம். அவர் கூறியதாவது:-

**கேள்வி:** Lyra I ND YAG லேசர் சிகிச்சை என்றால்?

**பதில்:** மிகச்சிறந்த புதுமையான டெக்னாலஜி. இது மென்மையான, பாதுகாப்பான சிகிச்சை முறை. மற்ற லேசரைவிட வெகு நன்மையான லேசர் சிகிச்சை முறை என்பதால் அதிகபடியான நன்மைகள் இருக்கிற சிகிச்சை ஆகும்.

**கேள்வி:** எந்தெந்த இடத்தில் சிகிச்சை செய்யலாம்?

**பதில்:** பெண்களுக்கு வருகிற தேவையற்ற ரோமங்கள் மேல் உதடு, கீழ்தாடை, மார்பகம் மற்றும் உடலில் எந்த பாகத்திலும் வருகின்ற தேவையற்ற ரோமங்களை (Under Arms, Legs, Hands, Shoulders, Stomach) சிகிச்சை மூலம் அகற்றலாம்.

**கேள்வி:** இச்சிகிச்சையினால் பக்க விளைவுகள் ஏதேனும் இருக்குமா?

**பதில்:** ஏஞ்சல்ஸ் Lyra I NDYAG லேசர் மூலம் எந்தவித பக்க விளைவுகள் இருக்காது. சருமம் கூட மென்மையாகவும், கன்னி



ஆகாமலும் இருக்கும். சிகிச்சை நேரத்தில் எந்த விதமான anasthesia-வோ pain killer-யையோ தரப்படுவதில்லை. இது முழுமையாக externel ஆக தருகிற சிகிச்சை.

**கேள்வி:** எத்தனை சிட்டிங்கில் சிகிச்சை கொடுக்கப்படும்?

**பதில்:** சருமத்தின் தன்மை மற்றும் தேவையற்ற ரோமங்களுக்கான பிரச்சனை அதற்கு உண்டான காரணங்களை ஆராய்ந்து எவ்வளவு வேகமாக முடி வளர்கிறது. அல்லது இதற்கு முன்னால் ஏதேனும் தற்காலிகமான முறைகளை பின்பற்றினார்களா? என்பதை ஆராய்ந்து சிகிச்சை ஆரம்பிக்கப்படும். வாடிக்கையாளரின் முடியை அது வரைக்கும் Disturb செய்யாமல் இருந்தால் 3 லிருந்து 5 சிட்டிங்கில் சிகிச்சை முடிவடையக்கூடும்.

**கேள்வி:** Electrolysis சிகிச்சை உத்திரவாதமா ? அல்லது லேசர் சிகிச்சையா?

**பதில்:** Lyra I NDYAG சிகிச்சை வந்த பிறகு Electrolysis சிகிச்சை எடுப்பதற்கு யாருமே முன்வருவதும் இல்லை, விரும்புவதும் இல்லை. Electrolysis சிகிச்சை 30 லிருந்து - 40 சிட்டிங்கில் பலன் தருகிற நீண்ட சிகிச்சையாகும். ஒரு சமயத்தில் Electrolysis சிகிச்சையை தவிர வேறு சிகிச்சை கிடையாது. ஆகவே வேறு வழியின்றி அச்சிகிச்சையை மேற்கொண்டனர். இப்போது அப்படி இல்லை.

<u>மேலும் விவரங்களுக்கு அணுகவும்:</u>

**2B, 3rd Avenue, T-53/99, (Opp. 14 Shops)**
**Rajeshwari Mansion, Anna Nagar Chennai - 40.**

**Cell: 98400 46599 Ph: 044 - 52176679 / 26212547 / 26213468**

● Hyderabad - (040)23222111, 55368999 ● Vijayawada - (0866)2477149 ● Vizag - (0891)2598697
● Rajahmundry - (0883)2461007 ● Bangalore - (080)51153995




# வாழ்க நலமுடன்

**ஆகஸ்ட் முதல் வாரம் வெளியாகிறது**

'வாழ்க நலமுடன்' 'கல்கி' 2003 மருத்துவ மலருக்கு நீங்கள் கொடுத்த ஏகோபித்த வரவேற்பின் பிரமிப்பு நீங்காமலேயே, அடுத்த மருத்துவ மலருக்கு அடிக்கல் நாட்டிவிட்டோம்.



# கல்கி மருத்துவ மலர் 2005

அந்தக் குட்டிப் பயலுக்கு, ஒரு பட்டுத் தங்கை போல.. தட்டுத் தட்டாக மருத்துவத் தகவல்களுடன்...

**விலை ரூ.25/- மட்டுமே**

## சந்தாதாரருக்குப் பரிசு!

'கல்கி' பத்திரிகைக்கு ஆறு மாதச் சந்தா ரூ.165/- கட்டினால் ரூ.25/- பெறுமானமுள்ள **கல்கி மருத்துவ மலர் - 2005** இலவசம்! முந்துங்கள். உடனடியாகச் செயல்பட்டா, 'அடடா... மிஸ் ஆயிடுச்சே'னு ஏமாறாம இருக்கலாம். ஏற்கெனவே, எங்களோட நேரடி சந்தாதாரராதான் இருக்கீங்களா! நோ ப்ராப்ளம்! ஆறு மாத சந்தாத் தொகையை அனுப்பி, உங்கள் சந்தாவை நீடிக்கச் செய்து பரிசைப் பெறலாம்.

**கடைசி தேதி: ஜூலை 15, 2005**

# இனி ஒரு விதி செய்வோம்!

பி.ஈ. படிப்பதுதான் கௌரவம், வேலை கிடைக்கும் என்கிற காலமெல்லாம் பஞ்சாய்ப் பறந்து விட்டது இன்று. இப்பொழுது பி.ஈ. படிக்க ஆளில்லாமல் நிறையக் கல்லூரி வளாக பெஞ்சுகள் 'ஈ'க்களின் வசமாக்கப்பட்டு விட்டன! காரணம் இது கணினி உலகம். கணினித் துறையில்தான் வாய்ப்புகள் ஏராளம். ஒரு டிகிரி போதும், மாதம் ரூபாய் 10,000 சம்பளத்தில் கால் மேல்கால் போட்டு அமர! ஆனால் இந்த வேலைகளுக்கெல்லாம் ஆங்கிலப் புலமைதானே முகவரியாக்கப் படுகிறது?

தமிழகத்தின் எங்கோ ஒரு மூலையில், ஏதோ ஒரு மாநகராட்சிப் பள்ளியில் தமிழையே மூச்சாகப் படித்து வளர்ந்த கிராமத்து இளைஞனுக்கு இந்த வேலைகளிலெல்லாம் கதவு மூடப்பட்டு வருகின்றனவே. வேறு என்ன செய்ய?

இங்குதான் உதவிக்கரம் நீட்டுகிறது சாஃப்ட்வியூ விஷுவல் கம்யூனிகேஷன். அபரிமிதமான கற்பனை வளமும், சிந்தனைச் சக்தியும் உள்ள இளைஞர்களைத் தட்டிக் கொடுக்கிறது! வாருங்கள் இனி ஒரு விதி செய்வோம் என்று அழைக்கிறது.

ஆம், நித்தம் ஒரு சானலாக, வாரம் ஒரு பத்திரிகையாக, மாதம் ஒரு சினிமாப் படமாக வெளிவந்து கொண்டிருக்கும் மாஸ் மீடியா உலகில் விஷுவல் கம்யூனிகேஷன் படித்து வெளிவரும் மாணவர்களுக்கு சிறப்பான எதிர்காலம் இருக்கிறது.



இன்று டிஜிட்டல் தொழில்நுட்பம் மிகப் பிரம்மாண்டமான வளர்ச்சியைக் கண்டுள்ளது. முதலில் விஷுவல் கம்யூனிகேஷன் என்றால் என்ன? நாம் உணருவதை, நினைப்பதை அப்படியே கண்களால் பார்த்துப் பதியவைத்துக் கொள்வதே. அந்தக் காட்சியை திரையில் எப்படி உருவாக்க முடியும்? எந்தப் புதிய கோணத்தில் அமைந்தால் மனசுக்குள் இடம்பிடிக்க முடியும்? போன்றெல்லாம் சிந்திப்பவர்கள் தான் விஷுவல் கம்யூனிகேஷன் மாணாக்கர்கள்!



இந்த மாணவனுக்குப் புகைப்படம் எடுக்கத் தெரிந்திருக்க வேண்டும், செய்தி களைப் பிரித்து அழகாக எழுதத் தெரிந் திருக்க வேண்டும், வீடியோ படமும், டிஜிட்டல் படமும் கைவந்த கலையாக இருக்க வேண்டும். சினிமாப் படமோ, விளம்பரப் படமோ அல்லது சின்னத் திரை நாடகமோ அனைத்திலும் பாடம் படித்திருக்க வேண்டும். இதைத் தவிர 3-டி மாடலிங், அனிமேஷன், கிராபிக்ஸ், வலைத்தள டிசைனிங் என்று லேட்டஸ்ட் தொழில்நுட்பம் அனைத்திலும் வல்லு நராக விளங்க வேண்டும். இதெல்லாம் விட நிறைய நிறைய கற்பனை வளமும் புதிய புதிய சிந்தனைகளையும் தன்னுள் அடக்கி வைத்திருக்க வேண்டும். அப்பொழுதுதான் ஒரு தலைசிறந்த இயக்குநராகவோ, கேமிராமேனாகவோ, ஸ்கிரிப்ட் ரைட்டராகவோ பிரகாசிக்க முடியும்.

சாஃப்ட்வ்யூவில் மொழி ஒரு தடையாக இருப்பதில்லை. அடிப்படைக் கல்வி பெற்ற அனைவருக்கும் வஞ்சனை யில்லாமல் இந்தப் படிப்பு சொல்லித் தரப்படுகிறது.

ஒரு வருடக் கால படிப்பில் மாணவர் கள் தங்கள் திறமையை வளர்த்துக் கொள்ள நிறைய வாய்ப்புகள். இங்கு மாணவர்களின் தயாரிப்பில் 'வேர்கள்' என்கிற பத்திரிகையும் சிறப்பாக வெளி வருகிறது. மீடியா உலக ஜாம்பவான்களின் சொற்பொழிவுகள், பத்திரிகை அலுவல கம், சேனல்களில் நேரடி வகுப்புகள் என்று வருடம் முழுவதும் மாணவர்கள் சிறப்பாகத் தயார்ப்படுத்தப்படுகிறார்கள்.

ஆங்கிலப் புலமை இல்லாதவர்களுக் கும் தமிழிலேயே பயிற்சி வகுப்புகள் நடத் தப்படுகின்றன. ஒரு படைப்பாளிக்கு மொழி ஒரு தடைக்கல்லாக இருந்திடக் கூடாதல்லவா? ஆகவே விஷுவல் கம்யூனிகேஷன் பாட நூல்களை தமிழுக் குச் செய்யும் ஓர் அரிய சேவையாக நலை சிறந்த தமிழ் வல்லுநர்களைக் கொண்டு புரியும்படி மொழிபெயர்த்து மாணாக்கர் களுக்கு அளிக்கிறார்கள்.

இது ஒரு மகத்தான சாதனை என்று தான் சொல்ல வேண்டும். ஆங்கிலத்திலே உருப்போட்டு உருப் போட்டு பாஸாவதில் என்ன பயன்? இதில் சிந்தனை வளர்ச்சி எங்கே இருக்கும்?

மேலும் ஒரு பிரபல சினிமா நிறு வனமோ, தமிழ் சேனல்களோ பெரிய பெரிய கல்வி நிலையங்களில் விஷுவல் கம்யூனிகேஷன்ஸ் முடித்து வரும் மாண வர்களையெல்லாம் விட்டு விட்டு இங் குள்ள மாணவர்களைத்தான் கரம் நீட்டி அழைக்கின்றனவாம். காரணம் இங்கு தான் திறமையும், ஆர்வமும் கொட்டிக் கிடக்கிறது.

- சாந்தி ரங்கராஜன்

தொழில் துறையில் பெரிதும்
முன்னேறினால்தான் நாடு வாழும் என்று எழுதியும், சொல்லியும்
வாழ்நாளெல்லாம் பாடுபட்டவர் விஸ்வேஸ்வரய்யா. நீண்ட நாள் வாழும்
ரகசியத்தைக் கேட்டவர்களுக்கு இவர் கூறிய
பத்து பொன் மொழிகள் :




1. எப்போதும் சிரித்த முகத்துடன் மகிழ்ச்சியாய் இரு.
2. மனசாட்சிக்கு மாறான செயல்களைச் செய்யாதே.
3. அளவாக உண்.
4. நன்றாகத் தூங்கு.
5. சம்பாதிக்கும் பணத்தைக் கொண்டு வாழ்க்கை நடத்து.
6. வாழ்க்கையில் ஒரு குறிக்கோளை வைத்துக் கொள்.
7. சம்பாதிக்கும் காலத்திலேயே சேர்த்து வை.
8. மனைவியை மகிழ்ச்சியோடு வைத்துக் கொள்.
9. குழந்தைகளுடன் கொஞ்சி விளையாடு.
10. உழைப்பதற்குத் தயங்காதே!

- எஸ். விஜயா சீனிவாசன்.

### எவரெஸ்டில் திருமணம்!

அண்மையில் எவரெஸ்ட் சிகரத்தை வெற்றிகரமாய் ஏறி உச்சியை அடைந்த 21 பேர்களில் இரண்டு நேபாளிகளான 'பெம்பா டோர்ஜே ஷெர்பா' மற்றும் "மோனி முலேபடி" நண்பர்கள் சூழ மலை உச்சியில் திருமணம் செய்து கொண்ட பின் இறங்கினார்கள்.

# நியூஸ் சாலட்

• இளைய வழிகாட்டிகள்

### க்ளோனிங் ஆராய்ச்சி!

இங்கிலாந்து "நியூ காஸில் பல்கலைக்கழகத்தில்" ஆராய்ச்சி செய்து வந்த தென்கொரிய விஞ்ஞானி 'ஊ-சுக்-ஹவாங்' மற்றும் அமெரிக்க விஞ்ஞானி 'ஜெரால்ட்' இருவரும் முதன் முறையாக மனித செல்லை விரித்து மருத்துவ 'குளோனிங்' மூலம் வளரச் செய்து வெற்றிகண்டிருக்கிறார்கள். இந்த ஆராய்ச்சிக்காக அவர்களுக்கு லைசென்ஸ் கொடுத்து பாராட்டியுள்ளது இங்கிலாந்து அரசு. "ஸ்டெம் செல்" ஆராய்ச்சியில் இவர்கள் வளர்த்த மனித செல்லைப் புகுத்தி மருத்துவ குளோனிங் மூலம் குணப்படுத்த முடியாத சர்க்கரை வியாதி, அல்ஷைமர், பார்க்கின்ஸன் வியாதிகளை முற்றிலும் குணப்படுத்த ஆராய்ச்சி செய்யவிருக்கிறார்கள்.

### காஸ்ட்லி பயிற்சியாளர்!

இந்திய கிரிக்கெட் அணியின் புதிய பயிற்சியாளராக ஆஸ்திரேலியாவின் முன்னாள் காப்டன் 'கிரெக் சாப்பல்' தேர்வு செய்யப்பட்டுள்ளார். இதற்காக இவருக்கு கொடுக்கப்படவிருக்கும் சம்பளம் வருடத்திற்கு வெறும் 75 லட்ச ரூபாய்தான்!


• மது சிங்கால்


• எவரெஸ்ட் திருமணம்


• சதம் கண்ட ராதம்மா


• ரஃபேல் நாடால்


• ஜெஸ்டின் ஹார்டேன்



• க்ளோனிங் ஆராய்ச்சி

### விளையாட்டு!

ஃபிரெஞ்ச் ஓபன் டென்னிஸ் பெண்கள் ஒற்றையர் பிரிவில் பெல்ஜியத்தைச் சேர்ந்த 'ஹெனின் ஹார்டென்னே'வும் ஆண்கள் ஒற்றையர் பிரிவில் ஸ்பெயின் நாட்டைச் சேர்ந்த 'ரஃபேல் நாடால்'லும்



• விருது பெறும் ஜெயா அருணாசலம்

கிராண்ட்ஸ்லாம் மகுடத்தைக் கைப்பற்றினர்.

தொகுப்பு : **சியாமளா சுவாமிநாதன்**

### வானியலுக்கு புதிய தளம்

முன்பு எப்போதும் இல்லாததை விட தற்

• கிரெக் சாப்பல்



போது வானியல் தொடர்பாக புதிய தகவல்கள், செய்திகள் வந்த வண்ணம் உள்ளன. ஆகவே, அவற்றைத் தொகுத்து அளிக்கிறது நியூசயின்டிஸ்டின் விண்வெளிக்கான புதிய தளம் : www.newscientistspace.com.



• பஞ்சலோக சிற்பம்

### சதம் அடித்த பெண்மணி!

பெங்களூர் காருண்ய ஆசிரமத்தில் வசிக்கும் 104 வயதாகும் ராதம்மா (பௌரிங் மருத்துவமனை பதிவேடுகள் வயதை உறுதிசெய்கின்றன) இன்றும் துள்ளல் நடையுடன் ஆசிரம வேலைகளைக் கவனிக்கிறார். சமைக்கிறார், குழந்தைகளைப் பராமரிக்கிறார். தனக்கு ஒரு மகனும், மகளும் பிறந்ததாகவும், இருவருமே இளம் வயதில் டைஃபாய்டில் இறந்து விட்டதாகக் கூறுகிறார். (ஆசிரம நிர்வாகி இரகசியமாகக் கூறியது : "மூன்றாவதாக ஒரு மகனும் உண்டு. பெங்களூரில்தான் இருக்கிறார். அவரால் கைவிடப்பட்ட பின்பு இவர் இங்கே வந்தார். மகனின் கௌரவத்தைக் காப்பாற்ற அதை இவர் சொல்வதில்லை.")

### தங்கத்தில் உஷார்!

நம் நாட்டில் ஆண்டுதோறும் 880 டன் தங்க நகைகள் வாங்கப்படுகின்றன. ஆனால் அவற்றில் 22 காரட்டுக்கும் குறைவான (கலப்படம் அதிகமான) தங்கத்தைப் பயன்படுத்தியிருப்பதால் வாடிக்கையாளர்கள் 950 கோடி ரூபாய் வரை இழக்கிறார்கள் என்கிறது தேசிய தரக்கட்டுப்பாடு நிறுவனம். கலப்பட தங்கத்தில் வித்தியாசத்தை அறிய முடியாது. நகையை அடமானம் வைக்கவோ, விற்கவோ நேர்ந்தால்தான் அது வெளிப்படும். அதனால்தான் பயனீட்டாளர்களின் நலனைக் கருத்தில் கொண்டு 'பீரோ ஆஃப் இண்டியன் ஸ்டாண்டர்ட்ஸ்' 2000-ம் ஆண்டு 'ஹால்மார்க்கிங்' முறையை அமுல்படுத்தியது. ஹால்மார்க் என்பது ஒரு நேர்மையான நடுநிலையாளர் பதிக்கும் சான்று முத்திரையாகும். நாடு முழுவதும் 27 மையங்களுக்கே இவ்வாறு சோதித்துப் பதிக்கும் உரிமம் வழங்கப்பட்டுள்ளது. எனவே, ஹால்மார்க் முத்திரை பதித்த நகைகளா என்று பரிசீலித்து வாங்குவதே புத்திசாலித்தனமும் பாதுகாப்பும் ஆகும்.

தொகுப்பு : **எஸ். சரோஜினி**

# கேன்ஸர் நோயா?


Dr. K. Sri Sridar

## கவலைப்பட வேண்டியதில்லை.

## குருபாலா கிளினிக்கின் Herbal Oncology™ சிகிச்சை

### மீண்டும் மகிழ்ச்சியை உங்கள் இல்லத்திற்கு கொண்டு வருகிறது.

**Bone Cancer** எனக்கு மார்பக புற்றுநோய் கால் எலும்புகளில் பரவி முறிவு ஏற்பட்டது. கேன்சர் காரணமாக அது மீண்டும் சேராது என டாக்டர்கள் கூறினார்கள். உங்கள் மூன்று மாத சிகிச்சைக்குப் பிறகு X-Ray எடுத்ததில் கால் எலும்பு சேர்ந்து விட்டது என்று கூறி டாக்டர்கள் ஆச்சர்யப்பட்டனர். நானும் வலியின்றி நன்றாக இருக்கிறேன்.

குமாரி ஜார்ஜ், கண்ணதாசன் நகர், சென்னை. 31.05.05

**Liver Secondaries** என் தந்தையாருக்கு வயிறு மற்றும் லிவர் கேன்சருக்காக டாக்டர்கள் கைவிட்ட நிலையில் உங்களை சந்தித்தோம். நான்கு மாத சிகிச்சைக்குப் பிறகு ஸ்கேன் எடுத்ததில் 7.5 Sq. Cm. அளவு இருந்த கட்டி 1.3 Cm ஆக குறைந்து விட்டது. வலி மற்றும் எந்த தொந்தரவும் இன்றி அவர் நன்றாக உள்ளார். இதை எங்கள் டாக்டர் MIRACLE என்கிறார். நாங்கள் உங்கள் மருந்து தவிர வேறு எதுவும் கொடுக்கவில்லை.

S. சுரேஷ், வடபழனி, சென்னை. 25.05.05

**Liver Cancer** எனக்கு லிவர் கேன்சர், 31-8-2004 அன்று உங்களை சந்தித்தேன். அப்போது 165 Sq Cm. அளவுக்கு லிவரில் பெரிய புற்று நோய் கட்டி இருந்தது. உங்கள் மருந்து எடுத்தபிறகு 02-05-05 அன்று ஸ்கேன் செய்து பார்த்ததில் லிவரில் கட்டியே இல்லை Normal Study என்று வந்துவிட்டது. டாக்டர்கள் இதை Miraculous Cure என்கிறார்கள்.

Liver shows uniform echopattern with no evidence of focal or diffuse pathology. Intra and extra hepatic biliary passage are not dilated.




IMPRESSION:
NORMAL STUDY

S.R. லஷ்மி, வடபழனி, சென்னை

**Mrs. Janaki, Age 67 - Lung Secondaries cured exactly in one month**



X-RAY dt.05.04.05

**Bilateral lung secondaries** with minimal residual pleural fluid right.



X-RAY dt.05.05.05

**Lungs are Clear.** Specifically there is no evidence of secondaries; heart size and shape are normal.

**Sacral Chordoma** நான் Sacral Chordoma – எனும் கேன்சரால் அவதிப்பட்டு சென்னையிலுள்ள பிரபல மருத்துவமனையில் சிகிச்சைக்குச் சென்றேன். கடந்த வருடம் நவம்பர் மாதம் எனக்கு ஆபரேஷன் செய்வதாக சொல்லி டாக்டர்களால் அலைக்கழிக்கப்பட்டு வந்தேன். டிசம்பர் 16ம் தேதி முதல் உங்கள் மருந்தை எடுத்துக் கொண்டு வருகிறேன். வலி என்பதே தற்போது இல்லை. மோஷனும் நார்மலாகி விட்டது. (மோஷன் போகவில்லை என்று தான் ஆபரேஷன் என்றார்கள்) உங்கள் அறிவுரைப்படி நான் ஊருக்குத் திரும்பி பழையபடி என் வேலையை பார்க்கத் துவங்கி விட்டேன்.

A. வரதராஜன், திருச்சி 12.03.2005

## கை விடப்பட்ட கேன்ஸரா ? கவலை வேண்டாம்

எல்லாவித புற்று நோய்க்கும் சிகிச்சை உண்டு. நோயாளி நேரில் வர வேண்டியது இல்லை. முழுமையாக எல்லா ரிப்போர்ட்டுகளையும் அனுப்பி வைக்கவும். Herbal Oncology™ சிகிச்சை என்பது டாக்டர் கே. ஸ்ரீ ஸ்ரீதர் வடிவமைத்த அற்புத முறையாகும். பத்தியம் இல்லை. மற்ற மருந்துகளோடும் சேர்த்து சாப்பிடலாம். வாழும் போது நோய் தொந்தரவு குறைந்து நிம்மதியாக சந்தோஷமாக வாழலாம். அவர்களின் வாழ்நாள் 40% அதிகரிக்க முயற்சிக்கலாம். இதற்கு சிறப்பு மூலிகை சிகிச்சை பயனுள்ளதாக அமைகிறது. டாக்டர்களால் கைவிடப்பட்ட நோயாளிக்கும் உடனே நன்மை அளிக்கிறது.

Royale Apartment, 6, Mannar Reddy Street, (Opp. Street to T.Nagar Bus Terminus) T.Nagar, (Next to Krishnaveni Theatre)
Chennai - 600 017. **CLINIC : Ph : 044 - 24339596**
**Res : 044 - 55872782, Cell : 98401 48808**
**TIMINGS :** 10.00 am to 5.30 pm
On **Sundays** : 10.00 am to 12.00 Noon

# Gurubalaa Clinic




**Speciality Clinic for Herbal Oncology™ and Asthma**

அனைத்து நோய்களுக்கும் சிகிச்சை அளிக்கப்படும்.

**Our Speciality is :** Herbal Oncology™, Surgical Oncology, Medical Oncology & Radio Therapy Advise. All under one roof.

நேரில் வரமுடியாதவர்கள் தங்கள் நோயின் விவரத்தை எழுதி அனுப்பினால் கூரியர் மூலம் மருந்துகள் அனுப்பி வைக்கப்படும்.

## பார்வையற்றோருக்கு பேசும் நூலகம், பேசும் பத்திரிகை

ஹரியானாவைச் சேர்ந்த மது சிங்கால் தனது படிப்பை முடித்த பிறகு 'மித்ர ஜோதி' என்ற அமைப்பை பார்வையற்றவர்களுக்காக 1990ம் ஆண்டு தொடங்கினார். ஆம், மது சங்காலும் பார்வையற்றவரே. இது பெரிய அளவில் தற்போது வளர்ந்துள்ளது. பார்வைக் குறைபாடு உள்ளவர்களுக்காக 'பேசும் நூலகம்' ஆரம்பித்தார். பல வாலண்டியர்களின் உதவிகளினால் ஆடியோ டேப்பில் ரெக்கார்டு புத்தகங்கள் உருவாக்கினார். சுமார் 18,000 காசெட்டுகள் பொது அறிவு, கல்வி மற்றும் கதை சம்பந்தப்பட்டவை இவருடைய நூலகத்தில் தற்போது உள்ளன.

மேலும், 'சன்சயா' என்ற பேசும் பத்திரிகை திட்டமும் இங்கு செயல்பட்டு வருகிறது.

## சாதனைப் பெண் ஜெயா அருணாசலம்

அமெரிக்காவில் 'வைடல் வாய்ஸஸ்' என்ற கழகம் சமீபத்தில் 2005ம் ஆண்டிற்கான உலக பொருளாதார வளர்ச்சிக்கான விருதை சமூக சேவகியும் உழைக்கும் மகளிர் குழுவின் செயலாளருமான ஜெயா அருணாசலத்திற்குக் கொடுத்துள்ளது.

உழைக்கும் மகளிர்க்கான அமைப்பை ஜெயா அருணாசலம் 1978ம் ஆண்டு தொடங்கினர். தமிழ்நாடு, ஆந்திரப் பிரதேசம் மற்றும் கர்நாடகாவைச் சார்ந்த சுமார் ஏழு லட்சம் பெண்கள் (வறுமை நிலையில் இருப்பவர்கள்) கொண்ட பெரிய இயக்கமாக இது தற்போது ஆகியுள்ளது. ஏழைப் பெண்களுக்கான இந்திய கோ-ஆபரேடிவ் நெட்-ஒர்க் மற்றும் முறைசாரா வங்கி திட்டம் மூலம் இவர்களுக்குத் தேவையான உதவி கிடைக்க ஜெயா அருணாசலம் காரணமாக இருந்திருக்கிறார். தகவல் : **இந்திரா கோபாலன்**

## தேசிய விருதுபெற்ற இளைய வழிகாட்டிகள்!

தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக் கழகத்தின் விரிவாக்கத் துறையில், டாக்டர் பட்டப் படிப்பு பயிலுகின்ற நான்கு மாணவ, மாணவிகள், 2003- 2004ம் ஆண்டிற்கான ஜவகர்லால் நேரு உதவித் தொகை தேசிய விருதினைப் பெற்று, விரிவாக்கத் துறைக்கும், பல்கலைக் கழகத்திற்கும் அரிய பெருமை சேர்த்துள்ளார்கள்.

ஒரே துறையைச் சேர்ந்த நான்கு மாணவர்கள், ஒட்டு மொத்தமாக, தேசிய விருதினைப் பெறுவது இதுவே முதல் முறை.

## சிற்பக் கலை

ஓர் அபூர்வ பஞ்ச லோக சிற்பம் 2004-ஆம் ஆண்டு தேசிய விருதுப் போட்டிக்காக சுவாமிமலை பாரம்பர்ய சிற்பக் கலைஞர் எஸ். கருணாநிதி ஸ்தபதியால் வடிவமைக்கப்பட்டுளளது. இவரது வயது 68.

சிவனின் உடல் மேல் காளியின் இரு பாதங்களின் 50 சதவிகித பகுதியே ஒட்டப்பட்டு காளியின் முழு எடையும் நிறுத்தப்பட்டுள்ளது.

கழுத்தில் மண்டை ஓட்டு மாலையுடனும் இடுப்பில் அசுரக் கைகள் கட்டப்பட்டும் வித்தியாசமாகக் காணப்படுகிறது இந்தச் சிலை.

- அஞ்சனா

## மினரல் நீரால் ஆபத்து!

பெரும்பாலானோர் பிளாஸ்டிக் பாட்டிலில் மினரல் தண்ணீர் வாங்கி, அந்த பாட்டிலை பல நாட்கள் உபயோகிக்கிறார்கள். சமீபத்தில் 12 வயதுப் பெண் மினரல் நீர் டாப்



பிட்ட பாட்டிலை சுமார் 16 மாதங்கள் தண்ணீர் குடிக்க உபயோகித்ததால் இறந்து விட்டாள். காரணம், பிளாஸ்டிக் பாட்டிலில் உபயோகிக்கப்படும் 'டைஎதில் ஹைட்ராக்ஸிலமைன் கார்சினோசினிக்' என்ற கெமிகல் புற்றுநோய் விளைவிக்கக்கூடியதாம்.

தகவல் : **இந்திரா கோபாலன்**




# அய்யோடி சொக்கி, நீ குட்டி மோகினி, குட்டி ரட்சகி !

'குட்டி ராட்சசி' பலே ஜோர்! என்ன? வஞ்சப் புகழ்ச்சி அணியோ? 'குட்டி ராட்சசி' என்று கூறி விட்டீர்கள். உண்மையில் 'குட்டி ரட்சகி' அவள்.
சென்னை - 20, கிரிஜா சுப்ரமணியன்.

அய்யோடி சொக்கி! 15 ரூபாய்க்கு 3 புத்தகமா? மங்கையர் மலர் எங்கேயோ போயிட்டிருக்கு.
சென்னை - 61,
நிவேதிதா.

'ஆரோக்கியமான வாழ்க்கை' வாழ முன்னோர் என்ற தன்வந்திரி தெய்வம் கொண்டு வந்த அமிர்த கலசத்திலிருந்து அமிர்தமானவற்றை (மருந்து + விருந்து) பரிமாறியவள் குட்டி ராட்சஸியாமே! குட்டி மோஹினி என்று சொல்லுங்கள்.
பம்மல், கீதா கண்ணன்.

மங்கையர் மலர் மாத இதழைத் தொடர்ந்து வாசித்து வரும் வாசகன் யான்! இப்போதெல்லாம் புதிய மெருகோடு, புதிய ஃபாலிஷோடு, புதிய வலிவோடு பல்வேறு புதிய போட்டிகளை எல்லாம் வைத்து வாசகிகளை மகிழ்ச்சியில் ஆழ்த்தி வருகிறீர்கள். பாராட்டுக்கள்!
வடமாதிமங்கலம், இராம. வேதநாயகம்.

என்னதான் கதை என்றாலும் சத்யபாமா ராகவன் எழுதிய கதை 'பிரவுனி'யில் கடைசியில் அது அரைபடவில்லை, பிழைத்து விட்டது என்றதும் காலனிக்காரர்களுடன் நானும் சேர்ந்து மூச்சு விட்டேன்.
கும்பகோணம், ஜெயலெட்சுமி.

ஆச்சி மசாலாப் பொடியைப் பயன்படுத்தி செய்யும் பதினைந்துவித சமையல் குறிப்புகளையும் நான் என்னுடைய அம்மாவிடம் படித்துக் காட்டியதில் இம்மாத மளிகைப் பட்டியலில் ஆச்சிப் பொடிகள் ஓர் அயிட்டமாக சேர்க்கும்படியாகி விட்டது!
நெய்வேலி, சு. ஸ்ரீகாந்த்.

'அரியுமுன் அறிவோமா?' கட்டுரையில் உரித்துப் பார்த்து, அமுக்கிப் பார்த்து, முறுக்கிப் பார்த்து, கிள்ளிப் பார்த்து... என்பதையெல்லாம் வைத்து ஓவியர் விளையாடி விட்டார். அதிலும், 'முடி முளைக்காத முள்ளங்கி' என்பதற்கு முள்ளங்கிக்கே முகச்சவரம். பாவம். (ஆண்களும் காய்கறி வாங்குகிறோம் அதனால் சொல்கிறேன்).
சென்னை - 91,
கவிஞர். அய்யாறு வாசுதேவன்.




இந்த மாத சமையல் குறிப்புகள் அத்தனையும் புதுசு கண்ணா புதுசு.
சிதம்பரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்.

ஜூன் மாத மங்கையர் மலரில் இயற்கையின் கருணை என்ற தலையங்கம் பார்த்தேன். அருமை. என்னை 30 வருடங்கள் பின்னோக்கிச் சென்று மூழ்க வைத்து விட்டது. நுங்கு எடுத்து அதில் சர்க்கரை, தேங்காய்த் துருவல், ஏலப்பொடி கலந்து எல்லோருக்கும் ஒவ்வொரு கிளாஸ் கொடுத்து நாங்கள் சாப்பிடுவதை ரசித்துப் பார்க்கும் என் பெற்றோர்கள் ஞாபகம் வந்தது.
கும்பகோணம், ஜி. துளசி.

குமாரி மணவாளன் அவர்கள் எழுதிய 'எல்.கே.ஜி. அட்மிஷன்' கதையைப் படித்தாவது இதுபோன்ற கணவன்மார்கள் இதற்கு மேற்கொண்டாவது உதவி செய்ய முன்வர வேண்டும் என்று மனம் திறந்து

கேட்டுக் கொள்கிறோம்.
சென்னை - 64, ஜி. ஜெயலெட்சுமி.

'விளக்கேற்ற வருவாள்' - சுமார் 49 ஆண்டுகட்கு முன் என் அக்காவுக்கு திருமணமான ஓர் ஆண்டிலேயே ஒரு சிறு நீரகத்தில் நோய் ஏற்பட்டதால் மறு சிறு நீரகத்திற்கும் பரவும் எனக் கருதி அந்த ஒரு சிறுநீரகத்தை மருத்துவர் அறிவுரைப் படி எடுத்து விட்டனர். இன்று வயது 62. பின் ஒரு சிறுநீரகத்துடன் அக்கா குழந்தைகள் பெற்றார்கள். பேரன் பேத்திகள் எடுத்தார்கள். வாழ்நாள் முழுவதும் ஒரு சிறுநீரகம் நன்னிலையில் இருந்தால் போதும். இது மற்றவர்கள் அறியவே எழுதுகிறேன்.
சென்னை - 92, தி. சரோஜா.

'இட்லி போச்சு பீட்சா வந்தது டும் டும்டும்' விவாதம் படித்தோம். குடலை இட்லியுடன் தேங்காய்ச் சட்னி சாப்பிட்டது போல் சுவையாக இருந்தது. நம் பாரம்பரிய உணவு அதன் சுவை + மருத்துவக் குணத்தால் என்றும் அதற்குரிய ஈர்ப்பு குறையாது என்று ஆணித்தரமாகக் கூற முடியும்.
கும்பகோணம், வி. ஸ்ரீதிவ்.

'பெண் எனும் இயந்திரம்' கட்டுரையில் தவறு பெண் வேலைக்குச் சென்று வருமானம் ஈட்டுவதில் இல்லை. பேராசை காட்டுவதில்தான். இருவரும் 'அள்ளிக் குவிக்க' முயன்றால், கட்டுரையில் கண்ட பலன்களே மிஞ்சும்.
பெங்களூர், த. சாந்தி.

'பெண் எனும் இயந்திரம்' இந்த மாதிரி கம்பெனிகளில் ஊதியம் நிறையக் கிடைக்கிறது என்று ஆசைப்பட்டுத்தான் பெண்கள் (ஏன், ஆண்களும் கூடத்தான்) பணியில் சேருகிறார்கள். ஆறேழு மாதங்கள் முன்பு பிரபல ஆங்கில தின ஏடு நடத்தின வாக் கெடுப்பில், 60%க்கு மேல், ஆண்-பெண் இருவரும் "வேலை முன்னேற்றப் பாதை"க்குத்தான் முக்கியத்துவம் கொடுத்திருந்தார்கள். குடும்ப வாழ்க்கை அடுத்தது இல்லை மூன்றாவது வரிசையில்தான் இருந்தது!
சென்னை - 90, வாதூலன்.

ஜூன் மாத இதழில் மூங்கிலணைக் காமாக்ஷி அம்மனைப் பற்றிய வரலாறு படித்ததும் மெய்சிலிர்த்தது. 20 வருடங்களுக்கு முன் தேவதானப்பட்டி அருகிலிருந்த ஊரில் குடியிருந்த போது அந்த அம்மனை தரிசித்த நிகழ்ச்சி மலரும் நினைவுகளாய் வந்தன. ஆனால் அம்மனைப் பற்றிய இத்தனை விஷயங்கள் ஆசிரியர் சொல்லித்தான் தெரியவந்தது. மீண்டும் ஒருமுறை செல்ல விரும்புகிறேன்.
சென்னை - 75, எஸ். சரோஜா ஸ்ரீதர்.

பெட்டகம் - 1 அட்டையில் : **காயத்ரி**
பெட்டகம் - 2 அட்டையில் : **ரஞ்சனி**

## கைகளே மூலதனம்!

சென்ற இதழில் விரல்களின் மூலம் பல கணக்குப் பயிற்சிகளை அருமையாக விளக்கியிருந்தீர்கள். அதே போன்று, பத்து விரல்களைக் கொண்டு குழந்தைகளுக்கு ஒன்பதாம் பெருக்கல் வாய்ப்பாட்டை மிக எளிதாகச் சொல்லித் தரலாம். இரண்டு கைகளையும் விரித்து பத்து விரல்களை நீட்டிக் கொள்ளச் செய்யவும். ஒன்றிலிருந்து பத்து வரை விரல்களுக்கு எண்களைக் கொடுக்கவும். இப்போது முதல் எண்ணை (முதல் விரலை) மட்டும் மடக்கச் சொல்லவும். மீதி ஒன்பது விரல்கள். 9X1=9. இரண்டாவது விரலை மட்டும் மடக்கச் சொல்லவும். மடக்கிய விரலின் இடது பக்கம் ஒரு விரலும் வலது பக்கம் 8 விரல்களும் உள்ளன. 9X2=18. மூன்றாவது விரலை மட்டும் மடக்கச் சொல்லவும். (பார்க்க படம்). இடது பக்கம் 2 விரல்களும் வலது பக்கம் 7 விரல்களும் உள்ளன. ஆகவே 9X3=27.




இதே போன்று 10 வரை விரல்களின் மூலம் சிறு குழந்தைகளுக்கு ஒன்பதாம் வாய்ப்பாட்டை சுலபமாகக் கற்றுத் தரலாம்.

- கே. லதா.



சிறுதொழில் தொடங்கும் பெண்கள் எதில் முக்கியக் கவனம் செலுத்த வேண்டும்? வீட்டிலேயே தயாரிக்கப்படும் பொருள்களுக்கு லைசென்ஸ் வாங்க வேண்டியது அவசியமா? தயாரித்த பொருள்களை எப்படி மார்க்கெட்டிங் செய்யலாம்? இப்படி நிறையக் கேள்விகளுடன் சென்னை கிண்டியில் உள்ள இந்திய அரசின் சிறுதொழில் சேவை நிலையத்தை அணுகினோம். அங்கு துணை இயக்குனர் (பொருளாதார ஆய்வியல்) பதவி வகிக்கும் திருமதி கே. நாமகிரி நமது கேள்விகளுக்கு பதில் அளித்தார்.


கே. நாமகிரி

# பணம் பண்ணலாம்

சட்டென அவர் குறிப்பிட்டது சிறு தொழில் செய்ய முனையும் பெண்களின் சந்திக்கும் ஒரு யதார்த்த நிலையை.

"பெரும்பாலும் திருமணமாகி, 35 வயதைத் தாண்டி வாழ்க்கையில் செட்டில் ஆன பெண்களே சிறுதொழில் தொடங்குகிறார்கள். இதற்கான காரணம் அவர்களுக்கு அந்த ஆர்வமே காலம் கடந்துதான் வருகிறது என்பதல்ல. சமூக அமைப்பு அப்படி.

"நான் சிறுதொழில் தொடங்கப் போகிறேன்" என்று விருப்பப்படும் மகளை பொதுவாக எந்த அப்பாவும் ஊக்கப்படுத்துவதில்லை. தவிர நிதியுதவி வேண்டும் என்று வங்கியை அணுகினால் பிணையாக ஏதாவது சொத்தைக் கேட்டால் இளம் பெண்களால் என்ன செய்ய முடியும்? திட்டத்தைப் பார்த்துத்தான் வங்கி அனுமதி அளிக்கும் என்பது பொதுவான நியதிதான். ஆனால், 'இவரால் நம் கடனைத் திருப்பித் தர முடியுமா?' என்பதைத்தான் வங்கிகள் அதிகமாக யோசிக்கும். இதைத் தவறு என்றும் ஓரேயடியாகச் சொல்லிவிட முடியாது. பெண்களின் பெயரில் இங்கு சொத்து வாங்குவது என்பதே அபூர்வம். திருமணம் ஆனவர்கள் கூட பல்வேறு காரணங்களுக்காக மனைவியை பினாமியாகப் பயன்படுத்தி சொத்து வாங்குவதோடு சரி. கணவன், மனைவி இருவரும் சம்பாதித்து வீடு வாங்கினால் கூட அது பெரும்பாலும் கணவனின் பெயரில்தான் இருக்கும். இப்படிப் பெண்களுக்கு பல சங்கடங்கள்" என்றார்.



மங்கையர் சத்தி மகத்தான சத்தி

மங்கையர் மலர் வெள்ளிவிழா

மகளிர் இதழுக்கான பேட்டி என்றவுடன் மேம்போக்காக "பெண்களால்



முடியும். அவர்களுக்கு உதவுவதற்கென்றே நிறைய திட்டங்கள் உண்டு. துணிந்தால் உலகமே அவர்கள் கையில்" என்பது போல் கூறிவிடாமல் இப்படிப் பளிச்சென்று நெகடிவ் நிலவரங்களையும் துணை இயக்குனர் பட்டியலிட்டது கொஞ்சம் வியப் பாகவே இருந்தது.

ஆனால், தொடர்ந்து உற்சாகச் செய்திகளும் கிடைத்தன. "கிடைத்துள்ள புள்ளி விவரங்களின்படி வங்கியிலிருந்து நிதியுதவி பெறுபவர்களில் பெண்களே அதிக அளவில் கடனை உரிய காலத்தில் திருப்பிச் செலுத்துவதில் முன்னணியில் இருக் கிறார்கள். எனவே, மெல்ல மெல்ல நிதி நிறுவனங்களும் பெண்களின் சிறுதொழில் ஆர்வத்திற்கு சற்றே அதிக அளவில் துணை இருக்கத் தொடங்கி உள்ளன" என்றார்.

**ஐந்து லட்சம் வரை முதலீடு தேவைப்படும் தொழில்களுக்கு நிதி வழங்கும் வங்கிகள் பிணையாக சொத்து எதுவும் கேட்கக் கூடாது எனும் விதியைப் படித்த நினைவு இருக்கிறதே! பின் எதற்காக பிணையாக சொத்து கேட்கின்றன வங்கிகள்?**

"அங்கேதான் ஒரு சூட்சமம் இருக்கிறது. இதை அரசு விதி கட்டாயமாக வலியுறுத் தாமல் "வழிகாட்டல்" (கைடுலைன்) என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது" என்றார்.

தமிழகத்தைப் பொறுத்தவரை "கிரெடிட் காரண்டி ஃபண்ட்ஸ் ட்ரஸ்ட் ஸ்கீம்" என்ற அமைப்பின் மூலம் பெண்கள் நிதியுதவி பெறலாம்.

ஐம்பது சதவிகிதத்துக்கும் அதிக அளவில் பெண்களை ஊழியர்களாக நியமிக்கும் நிறுவனங்கள் இயந்திரங்களுக்காகச் செய்யும் முதலீட்டில் 5 சதவிகிதத்தை அரசு அவர்களுக்கு மானியமாக வழங்குகிறது.

# வாங்க!




தவிர, சிறுதொழில் நிறுவனம் ஊதுவத்தி, மெழுகுவர்த்தி, சோப்பு, ஷாம்பு போன்றவற்றைத் தயாரிப்பதற்குப் பயிற்சி வழங்குகிறது.

**எது போன்ற பொருள்களைத் தயாரிப்பதற்கும் அரசு முன் அனுமதி தேவை?**

"மனிதர்களை பாதிக்கக்கூடும், அல்லது சுற்றுப்புறத்தை நச்சாக்கக்கூடும் என்பது போன்ற பொருள்களுக்கு முன் அனுமதி வாங்க வேண்டும். டி.டி.பி. (டெஸ்க் டாப் பப்ளிஷிங்) செய்ய லைசென்ஸ் தேவையில்லை. அதே போல் வீட்டிலே ஊறுகாய் செய்து விற்பது, ஆடை கள் செய்து விற்பது ஆகியவற்றிற்கும் அனுமதி வேண்டாம்."

தங்கள் பயிற்சி மையத்தில் பயிற்சி பெற்ற சில பெண்களின் அனுபவங்களை நம்மிடம் பகிர்ந்து கொண்டார்.



## நிதி சால சுகமா? ஆமாம்!

**வ**ணிக வங்கிகள் சிறு தொழில்களுக்குப் பொதுவாக நடப்பு முதல் முதலீட்டுக் கடன் கொடுத்து உதவுகின்றன. சில சூழ்நிலைகளில் நடுத்தரக் கால கடன் வசதிகளையும் செய்து உதவுகின்றன. இவ் வங்கிகள் மூன்றில் இரண்டு பங்கு நடப்பு முதல் முதலீட்டுக்கும், மூன்றில் ஒரு பங்கு நீண்ட கால கடன் வசதிகளுக்கும் கொடுப்பது வழக்கம்.

சிறு தொழில் நிறுவனங்களுக்கு உதவ அகில இந்திய தேசியத் தொழில் மேம்பாட்டு வங்கிகள், சிறுதொழில் மேம்பாட்டு வங்கிகள் ஆகிய நிதி நிறுவனங்கள் உள்ளன.

சிறு தொழில்களுக்காக இவை கீழ்க்கண்ட வகையினாலான கடன் வசதிகளையும் அளிக்கின்றன.

அ. வங்கிகள் மூலம் பெற்ற கடனைத் திருப்பித் தர உதவும் கடன்கள்.

ஆ. சிறப்புக் கடன் வசதிகள் கீழ்க்காணும் பிரிவினருக்கு என ஏற்படுத்தப்பட்டுள்ளது. கைவினைஞர்கள், கிராமப்புறத் தொழில்கள், குறுந்தொழில்கள், மலைவாழ் மக்கள், தாழ்த்தப்பட்டோர், உடல் ஊனமுற்றோர் போன்றவர்கள் ஆரம்பிக்கும் சிறுதொழில்களுக்கு உதவி.

இ. நொந்து போன சிறு தொழில்களைச் சீர்ப்படுத்தவும் கடன் வசதி.

ஈ. சிறு தொழில்கள் நவீன மயமாக்கப்படும் போது வாங்கும் கடன்களை அடைக்க ரீஃபைனான்ஸ் கடன் வசதி.

உ. 'விற்பனை பில்'களின் மீது கடன் அளிப்பது.

"ஒரு பெண்மணி பட்டன் தயாரிப்பு தொழிலில் இறங்கினார். ஏற்ற கருவியை அவர் தேர்ந்தெடுக்கவில்லை. அதாவது குறைந்த விலையுள்ள சிறந்த கருவிகளே இருக்கும்போது அதிக விலை கொடுத்து ஒரு கருவியை வாங்கினார். இதன் காரண மாக அவர் லாபமே ஈட்ட முடியாமல் போனது.

ஒரு புத்திசாலியான பெண்மணி புடைவைக்கு ஸ்டார்ச் போடுவதையே செய்து வெற்றிகரமாக வாழ்ந்து வருகிறார். சென்னையில் தண்ணீர்க் கஷ்டம் வந்த போது தள்ளியுள்ள புறநகர்ப் பகுதியில் தன் தொழிலைத் தொடர்ந்தார். ஒரு புடைவைக்கு ஸ்டார்ச் போட பன்னி ரெண்டு ரூபாய் என்று இவர் வாங்கிக் கொள்ள வாடிக்கையாளர்கள் குவிந்தனர்.

செயற்கைப் பூக்கள், தேங்காய் மற்றும் வாழை நார்களில் செய்த பை - இது போன்ற கைவினைப் பொருள்களை கலைத் தன்மையோடு ஒரு பெண்மணி தயாரிக்க, வெளிநாட்டவர் கூட அவரது வாடிக்கையாளர் ஆகிவிட்டனர்.

இன்னொரு பெண்மணி இயற்கை யான விலங்குகள், பறவைகள் போலத் தோற்றமளிக்கும் மரக்கிளைகளை சேகரித்து வந்து விற்றார். பெருமையுடன் சொல்லிக் கொள்ளும்படியான வருமா னத்தை அவர் பெற்றார்.

**பொருளைத் தயாரித்தால் போதாதே! அவற்றை எப்படி மார்க்கெட்டிங் செய்வது?**

"டிபார்ட்மெண்டல் ஸ்டோர், காதி கடைகள் போன்றவற்றின் மூலமாக விற்க முயற்சிக்கலாம்.

முதலில் சந்தை ஆய்வு செய்ய வேண் டும். இது மிக முக்கியம். நீங்கள் தயாரிக் கும் பொருள் ஏற்கெனவே சந்தையில் (கடைகளில்) அதிக அளவில் இருக்கிறதா? அப்படியானால் அவற்றை விடுத்து உங்கள் தயாரிப்பை வாங்க வேண்டுமா னால் அதற்கு என்ன செய்ய வேண்டும் என்று யோசிக்க வேண்டும். போட்டி யாளர்களின் பொருள்களின் விலை என்ன? அதே அளவுக்கோ, அதைவிடக் குறைவாகவோ விற்க உங்களால் கட்டுப் படியாகுமா என்பதையும் யோசியுங்கள்.

விலைதான் என்றில்லை. மார்க்கெட் டிங்கில் வேறு சில விஷயங்களும் மிக முக்கியமானவை. முன்பெல்லாம் மிக நீளமான ரொட்டிகள்தான் (400 கிராம் எடை கொண்ட ப்ரெட்) விற்கப்பட்டன.

இப்போது இருப்பவை பெரும்பாலும் சிறிய குடும்பங்கள் என்பதால் இவ்வள வுக்கு தேவை இருப்பதில்லை. வைத்திருந்து சாப்பிடலாம் என்றால் கெட்டுப் போய்விடக்கூடிய உணவு வகை இது. எனவே இப்போதெல்லாம் சிறிய அளவு ரொட்டிகள் வர ஆரம்பித்து விட்டன. இதன் விற்பனை ஜோர்தான். எனவே இதுபோன்ற விஷயங்களிலும் கவனம் செலுத்த வேண்டும். பாக்கிங்கும் விற்பனையில் முக்கிய இடம் வகிக்கிறது.

"ஒன்று வாங்கினால் ஒன்று இலவசம்", "அறிமுகம் என்பதால் சலுகை விலையில்" என்றெல்லாம் தொடக்கத்தில் தூண்டில் போட்டு இழுக்கலாம்.

உங்கள் தயாரிப்பு எவ்வளவு நாட்கள் கெடாமல் இருக்கும் (இதை 'ஷெல்ஃப் லைஃப்' என்கிறார்கள்) என்பதையும் மனதில் கொள்ள வேண்டும்.

கீழ் நடுத்தர மக்கள்தான் உங்கள் முக்கிய வாடிக்கையாளர் என்றால் விலை குறைவாக இருக்க வேண்டியது மிக முக்கியம்.

அக்கம்பக்கத்தில் இருப்பவர்களையே உங்கள் பொருள்களுக்கு தூதராகப் பயன்படுத்திக் கொள்ளலாம். அவர்களின் வாய்மொழி சிபாரிசு வேகமாகப் பரவும் தன்மை கொண்டது" என்றவர் ஒரு குறிப்பிட்ட ஆலோசனையை முன்வைத்தார்.

"உணவுத் துறையில் எப்போதுமே பிரகாசிக்கலாம். இப்போது அதற்கு இன்னமும் நிறைய வாய்ப்பு இருக்கிறது. சுவையான உணவும், சுத்தமான சுற்றுப்புறமும் இருந்து விட்டால் இதில் நிச்சயமாக ஜெயிக்கலாம். இப்போதெல்லாம் வீடுகளில் சிறு சிறு விசேஷங்கள் என்றால் யாரும் கறிகாய் வாங்கி வந்து வீட்டில் சமையற்காரரை பணிக்கு அமர்த்தி சமைப்பதில்லை. கேட்டரர்கள் இன்றியமையாதவர்கள் ஆகி விட்டார்கள். விசேஷங்கள் இருக்கட்டும், தினசரி சமையலே கூட வீடுகளில் (முக்கியமாக மனைவியும் குறிப்பிட்ட வேலை நேரம் என்பதே இல்லாத சாஃப்ட்வேர் நிறுவனத்தில் வேலை செய்பவராக இருந்தால்) அரிதாகி விட்டது. சாதம் மட்டும் வடித்துக் கொண்டால் மீதி எல்லா ஐட்டங்களும் அருகிலேயே சுவையாகவும், நியாயமான விலையிலும் கிடைக்கிறது என்றால் அதை வாங்கத் தயாராகவே இருக்கிறார்கள்."

**ஜி.எஸ்.எஸ்.**

படம் : **ஸ்ரீஹரி**

**சிறு தொழில் சேவை நிலைய மையங்கள்**

**1. தலைமை அலுவலகம்**
**65/1, தெற்கத்திய நெடுஞ்சாலை (ஜி.எஸ்.டி. சாலை),**
**கிண்டி, சென்னை - 600 032.**
**தொலைபேசி - 22341011 (3 லைன்ஸ்)**

**2. கிளை நிலையம்**
**(மின்சார மோட்டார்கள் ஆய்வுக்கூடம் உட்பட)**
**386, படேல் சாலை, கோயம்புத்தூர் - 600 041**
**தொலைபேசி - 0422-230426, 233956**

**3. கிளை நிலையம்**
**76, சி.ஜி.இ. காலனி, திருச்செந்தூர் சாலை**
**தூத்துக்குடி - 628 003. தொலைபேசி : 0461- 2375345**

**4. கிளை சேவை நிலையத்தின் பட்டறை (workshop)**
**எண் 7 & 8, தொழில்பேட்டை,**
**திருநெல்வேலி - 627 010**
**தொலைபேசி - 0462 - 342137**

**- ஜி.**




# நான் ரசித்த காட்சி!

சென்ற வாரத்தில் ஒருநாள் மதுரை மாவட்ட ஆட்சியர் அலுவலகத்திற்கு வழங்கு பொருள் அட்டை வாங்கச் செல்ல வேண்டியிருந்தது. இந்த அனுபவம் எனக்குப் புதியது. எனவே காத்திருக்கும் கால அவகாசத்தில் அந்த அலுவலகத்தை மும்முறை வலம் வந்த போது என் கவனத்தை ஈர்த்த காட்சியை நம் வாசகிகள் அறிய எழுதுகிறேன்.



'பாரதி மகளிர் சுய உதவிக் குழு' வளாகத்தின் நுழைவு வாயிலில் உள்ள சிறிய இடத்தில் சிறிய போர்டு! மகளிர் சுய உதவிக் குழுக்கள், மெய்யான முயற்சி உடைய மகளிரின் செயல்பாட்டுக்கு உயரிய எடுத்துக்காட்டாக அந்தக் கடை! சுமார் பத்துப் பேர் இருக்கும். அழகான சீருடை. அழுக்குப் படியாமல் இருக்க முன்னாடை (அதாங்க ஏப்ரான்). ஒருவர் கல்லாவில். ஒருவர் மாவு பிசைய, மற்றொருவர் எண்ணெய் அடுப்பில் பலகாரங்கள் சுடுகிறார். அதற்கு வேண்டிய மாவு, வெங்காயம் போன்றவற்றை அளவோடு ஒருவன் எடுத்துக் கொடுக்க, காபி, தேநீர் முதலான பானங்களை இடைவிடாமல் நடுவர் வழங்க மீதிப் பேர் அந்த அலுவலகத்தில், வெவ்வேறு துறைகளில் தேவையானவற்றை தக்க நேரத்தில் கொண்டு போய்க் கொடுத்து வர, அப்பப்பா... மதிய உணவு வேளையில் நானும் சிறிது களைத்திருந்ததால் என்னதான் வைத்திருப்பார்கள் என்ற ஆவலில் உள்ளே நுழைந்து ஒரு தயிர் சாதம் வரவழைத்து நிதானமாகச் சாப்பிட்டுக் கொண்டே அவர்களை நோட்டம் விட்டதில் மேற்படி காட்சி. தயிர்சாதம், எலுமிச்சை சாதம் (ஊறுகாய், துவையல்) போன்றவற்றுடன் பொட்டலம் கட்டுகிறாள் ஒரு மங்கை. அளவுடன், விரைவுடன் அவள் கட்டும்

லாகவத்தை இன்றைக்கெல்லாம் காணக் கண்கோடி வேண்டும். சாதம் வடித்துக் கொட்ட, கலக்க யாரும் ஒரு வினாடி கூட ஓயவில்லை போங்கள்.

என் ஆவலின் உந்துதல் அதிக மாகவே, எனக்கு தண்ணீர் கொடுத்த அக் குழுப் பெண்ணிடம், "நீங்கள் எத்தனை பேரம்மா?" என்றேன். பதில் சொல்ல வாய் திறக்குமுன் கூட்டம் அதிகமாக இருந்ததினால் கவனிக்கச் சென்று விட்டாள். 'வேண்டாம் இவர்கள் பணி தொடரட்டும்' என வெளியில் வந்து விட்டேன். வீட்டிலேயே வீண் பொழுது போக்கி, அடுத்தவர் விவகாரங்களைக் கூட்டம் போட்டு அலசி ஆராய்ந்து, அழுமூஞ்சித் தொலைக் காட்சித் தொடர்களில் பொன்னான நேரத்தை வீணடிக்கும் பெண்களே! இதோ உழைக்கும் கரங்கள், எதிர்காலத்தை உருவாக்கும் இந்தக் கரங்களை பார்த்தாவது திருந்துங்கள் எனக் கூவ வேண்டும் போல் இருந்தது. எனதருமை முண்டாசுக் கவி பாரதி உயிர்த்து வந்தால், நான் எழுதிய புதுமைப் பெண்கள் பாட்டு வீண் போக வில்லை என ஆனந்தக் கூத்தாடியிருப்பான்.

கூட்ட நெரிசலில் பெண்களை விட அங்கு வருகை தரும் ஆண்களே அதிகம். ஓர் ஆண் கூட தவறான நோக்கில் காணவோ, பேசவோ இல்லை. இவர்களும் இயல்பான புன்னகையைத் தவிர ஹும். இதுதான் என்னை மிக மிகக் கவர்ந்தது.

'நிமிர்ந்த நன்னடை, நேர்கொண்ட பார்வை' நிறையச் சொல்லிக் கொண்டே போகலாம்.

- ஆனந்தவாணி

---



## எங்கள் திட்டங்கள் அனைத்தும் புதுமையானவை ஆனால், எங்கள் வங்கி சேவை 88 வருடங்கள் பழமையானது.

மேம்பட்ட தொழில்நுட்பத்தில் மட்டுமல்ல பாரம்பரியத்திலும் தனிச்சிறப்பு வாய்ந்த எங்கள் வங்கிக்கு உங்களை வரவேற்பதில் மகிழ்ச்சியடைகிறோம். நிறைவான மற்றும் பாரம்பரியமிக்க வாடிக்கையாளர் சேவையினை அளிக்கும் உயரிய கலாச்சாரத்தை KVB கொண்டுள்ளது. 21ம் நூற்றாண்டின் சக்தி வாய்ந்த ஆன்-லைன் கணினி சேவைகளை KVB நாடு முழுவதிலும் அளிக்கிறது. அதுமட்டுமல்ல, உங்களுக்கு பிரத்தியேக சேவைகளை அளிப்பதற்கான சிறப்பம்சங்களையும் இது தன்னகத்தே கொண்டுள்ளது. இனி வருங்காலங்களில் உங்களுக்கு பல வசதிகளுடனான சிறப்பான சேவையை அளிக்க உறுதியுடன் செயல்படுகிறது.

**KVB Karur Vysya Bank**

*Smart way to bank*

# சீப்பிற்குப் பின் இத்தனை விஷயங்களா?



அட, நாம் தினம், தினம் தலை வாரி, சிங்காரித்து, அழகுபடுத்திக் கொள்ள உறுதுணையாக இருக்கும் சீப்பைதானே சொல்லுகிறீர்கள்? ஆமாம், தாயே ஆமாம். "சீப்பு இல்லாத வீடும் இல்லை, தலை வாராத மனிதனும் இல்லை" என்கிற விதிப்படி சீப்பு நம் தினப்படி வாழ்க்கையிலும், கலாசாரத்திலும் ஒரு முக்கியமான பொருளாக விளங்குகிறது. நமக்கெல்லாம் சீப்பு எத்தனை அழகாக இருக்க வேண்டும், என்ன என்ன கலரில் இருக்க வேண்டும், என்ன விலையில் இருக்க வேண்டும் என்கிற விஷயம்தான் முக்கியமாகத் தெரியும். ஆனால் சீப்பின் பின் தொன்று தொட்டு காலமாக வரும் கலாசார விஷயங்களை கலாசார ஆராய்ச்சி செய்பவர்களைக் கேட்டுத்தான் தெரிந்து கொள்ள வேண்டும். அப்படிக் கிடைத்த சில ஆச்சரியமான விஷயங்களை, உங்களுடன் பகிர்ந்து கொள்கிறேன்.

இன்று பிளாஸ்டிக், நைலான், மரம், மாட்டுக் கொம்புகள் மெல்லிய உலோகங்களான அலுமினியம் போன்றவற்றினால் சீப்புகள் செய்யப்பட்டு மார்க்கெட்டில் விற்பனை ஆகிக் கொண்டிருக்கின்றன. ஆரம்பக் காலத்தில் சீப்பு மீனின் முட்களை அடிப்படையாக வைத்துத்தான் செய்யப்பட்டது.

இந்தச் சீப்பானது தேசம், கலாசாரம், சீதோஷ்ண நிலை, கிடைக்கும் பொருள்கள் ஆகியவற்றுக்கேற்ப வித்தியாசப்படுகிறது. தீவுப் பகுதிகளில் வசிப்போர்கள், கிளிஞ்சல்கள், ஆமை ஓடுகள் போன்றவற்றிலும் ஆப்ரிக்கா காடுகளில் வசிப்பவர்கள் யானைத் தந்தங்கள் போன்றவற்றிலும் அரேபியர்கள் ஒட்டக எலும்புகளிலும் பிற தேசத்தவர்கள், மாட்டுக் கொம்புகள் மற்றும் மிருகங்களின் எலும்புகள், பற்கள் ஆகியவற்றிலும் வசதி படைத்தவர்கள் தங்கம், வெள்ளி போன்ற விலையுயர்ந்த உலோகங்களினாலும் நமது தென் இந்தியர்கள் மரத்தினால் செய்யப்பட்ட சீப்புகளையும் உபயோகிக்கின்றனர்.

நம்மவர்களில் சிலர் சில நேரங்களில் ஞாபகமறதியாக சீப்பை தலையிலேயே வைத்துக் கொண்டு மற்ற வேலைகளில் ஈடுபடுவதுண்டு. ஆனால், பர்மியர்களுக்கு இப்படிக் கூந்தலிலேயே சீப்பை வைத்து விடுவது அலங்காரங்களில் ஒரு

வகையாகும்.

சீக்கியர்களில் சிலர் தங்களது இனத்தில் ஏற்பட்ட வைராக்கியத்திற்காக அள்ளி முடிந்த கூந்தலில் சீப்பை செருகி வைத்திருப்பதை இன்றும் சிலரிடையே காணலாம்.

மத்திய இந்தியாவிலும், அஜந்தா, எல்லோரா போன்ற எழில்மிகு ஓவியங்களிலும் பல நுண்ணிய சித்திர வேலைப்பாடுகளுடன் கூடிய சீப்புகள் இடம்பெற்றிருப்பதை நாம் கண்கூடாகக் காணலாம்.

ஒரிசாவில் உள்ள "முறியா" என்ற ஆதிவாசி இளைஞர்கள் தங்களது காதலிக்கு காதல் பரிசாக சீப்பைத்தான் கொடுக்கிறார்கள்.



விசேஷ நாட்களில் தங்களது காதலர்களால் கொடுக்கப்படும் சீப்புகளை ஒவ்வொரு பெண்ணும் தங்களது கூந்தலில் வரிசையாக அடுக்கி வைத்துக் கொள்கின்றனர். திருமணத்திற்குப் பிறகு பழைய சீப்புகளை உபயோகிக்க மாட்டார்கள். பழைய காதலனுக்கும், அவளுக்கும் எந்தவிதத் தொடர்பும் இல்லையென்பதை வலியுறுத்தவே இப்படிச் செய்கின்றனர். இந்த இனத்தைச் சேர்ந்த பெண்களின் கூந்தலில் சீப்புகள் காணப்பட்டால் அவள் ஒருவனால் காதலிக்கப்படுகிறாள் என்று பொருளாம்.

இதே மாநிலத்தில் 'ஜுவாங்' என்ற இனத்தைச் சேர்ந்த ஆதிவாசிகள் நடனமாடும் போது சீப்புகளை பரிசாகக் கொடுத்தால், கொடுப்பவருக்கும், வாங்குபவருக்கும் நேசம் வளர்ந்து, காதலாக மலர்ந்து கல்யாணத்தில் முடியுமாம்.

இந்த இனத்தைச் சேர்ந்த ஆண்களிடமிருந்து பெண்கள் சீப்பைத் திருடி தனது தலையில் வைத்துக் கொண்டால் அவள் அந்த ஆண் மகனை காதலிப்பதாக அர்த்தமாம். திருமணத்தின் போது திருமணப் பரிசாக மணமகன் மணமகளுக்கு அளிக்கும் சீப்பைக் கொண்டுதான் தன் வாழ்நாள் முழுவதும் மணமகள் தனது கூந்தலை சீவிக் கொள்வாளாம். இந்தச் சீப்பு தொலைந்து விட்டால் தலை சம்பந்தப்பட்ட நோயால் பாதிக்கப்படுவதாக அவர்கள் நம்புகிறார்கள். இவர்கள் சீப்பை காதலுக்கு மட்டும்



பயன்படுத்துவதில்லை; பூஜை, புனஸ்காரம், சமய வழிபாடுகளிலும் பயன்படுத்திக் கொள்கின்றனர்.

'கதிர்' என்ற இனத்தைச் சேர்ந்த மணமகன் செய்து கொடுக்கும் சீப்பினால்தான் மணமகள் தன் வாழ்நாள் முழுவதும் சிகை அலங்காரம் செய்து

கொள்வாள். தவறியும் இன்னொரு வனிடத்திலோ, வேறு எங்கோ சீப்பைப் பெற மாட்டாள்.

'குக்கி' என்ற இனத்தவர்களின் திருமணத்தின் போது புரோகிதர் கொடுக்கும் சீப்புகளினால்தான் கணவன் - மனைவி இருவரும் சிகை அலங்காரம் செய்து கொள்ள வேண்டும். இவர்களில் யாராவது ஒருவர் இறந்து விட்டால் அவர்கள் உபயோகப்படுத்திய சீப்பை அவர்களுடனேயே வைத்துப் புதைத்து விடுவார்கள். இறந்தவரின் உறவினர்கள் தங்களது சீப்புகளை உடைத்தும், ஈமக் காரியைகள் நடக்கும் வரை சீப்புகளை உபயோகப் படுத்தாமலும் தங்களது துக்கங்களை அனுஷ்டிப்பார்கள்.

'கோண்டா' இனத்தைச் சேர்ந்த 'பைகாஸ்' என்ற ஆதிவாசிகள் சீப்பு செய்வதில் திறமைசாலிகள். வட்டம், முக்கோணம், சதுரம், நீளம் போன்ற வடிவங்களில் சித்திர வேலைப்பாடுகள் அமைந்த வகையில் சீப்புகளைச் செய்வர்.

மைசூரில் உள்ளவர்களில் ஒரு சிலர் தங்களது உடலில் சீப்பு வடிவில் பச்சைக் குத்திக் கொண்டால் வாழ்க்கை சந்தோஷமாக இருப்பதாக நம்புகிறார்கள்.

நமது தமிழகத்திலும் பொதுவாகத் தாம்பூலத்தில் சீப்பு வைத்துக் கொடுத்தல் புருஷனுக்கு நீண்ட ஆயுளைத் தருவதாக நம்புகிறார்கள்.

சிலரால் தெய்வீகமாக மதிக்கப்படும் சீப்பை, அதன் பெருமையை அறியாத இன்றைய நாகரிக இளைஞர்கள் தினந்தோறும் ஒரு சீப்பை வாங்கி தொலைத்து விட்டு, மற்றுமொரு புதிய சீப்பை வாங்கி அதையும் தொலைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

**- தேவி கிருஷ்ணான்**

# அதிக போஷாக்கு நிறைந்த எதுவும் பிரமாதமாக சுவையுள்ளதாக எப்போதும் இருப்பதில்லை.



## ஆனால் சில சமயங்களில் அதிர்ஷ்டம் உங்களுக்கு கிடைத்து விடுகிறது........






**புரோட்டீனெக்ஸ் போஷாக்கு, இப்போது பிரமாதமான புதிய வனீலா சுவையில்.**

நம்பகம் மிக்க அதிக புரோட்டீன் இணை உணவான புரோட்டீனெக்ஸ், இப்போது சுவைமிக்க புதிய வனீலா ஃப்ளேவரில் கிடைக்கிறது. புரோட்டீனெக்ஸ் வனீலாவில் அதிக அளவு புரோட்டீன் இருப்பதோடு மட்டுமில்லாமல், அயர்ன், ஃபோலிக் ஆஸிட் மற்றும் கால்ஷியம் உள்ளிட்ட எல்லா அத்தியாவசிய விட்டமின்கள் மற்றும் மினரல்களகளாலும் அது செறிவூட்டப் பட்டிருக்கிறது.

நீங்கள் ஆரோக்கியமாகவும், சுறுசுறுப்பாகவும் இருக்க உங்கள் உடலுக்கு தேவைப்படும் புரோட்டீனுக்கும், உங்கள் அன்றாட ஆகாரத்திலிருந்து உங்களுக்கு கிடைக்கும் புரோட்டீனுக்கும் இடையே பெரும்பாலும் ஓர் இடைவெளி இருக்கிறது. இந்த 'புரோட்டீன் இடைவெளி' நீங்கள் அடிக்கடி களைத்து சோர்ந்து போகவும், பலவீனமாகி விடுவதற்கும் வழி செய்து விடுகிறது. இந்த இடைவெளியை புதிய புரோட்டீனெக்ஸ் வனீலாவால் நிரப்புங்கள். தினந்தோறும் 2 கப் புரோட்டீனெக்ஸ் வனீலா எடுத்துக் கொண்டால் அது உங்கள் குடும்பத்தின் புரோட்டீன் தேவையை நிறைவு செய்து விடும்.

புரோட்டீனெக்ஸ் அனுகூலம் உங்கள் குடும்பத்துக்கு அளித்திடுவீர் !

**புரோட்டீன் தேவைகள் குறித்து கூடுதல் விவரங்களுக்கு உங்கள் மருத்துவரின் ஆலோசனையைப் பெறுங்கள்.**

இம்முகவரியில் எழுதுங்கள்: டியூமெக்ஸ் ஸையன்ஸஸ், பி.ஓ.பாக்ஸ் 12, குட்காவ் 122002. எங்களை சந்தியுங்கள்

www.youngnutritionindia.com

## காமகோட்டத்துக் கரும்பு

கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்! கோயில்களே ஊராகக் காணும் போது இம்மை, மறுமையைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். ஆம்! மனைத்தக்க மாண்புடையாளாகச் சக்தி தன் மகத்துவத்தைக் கதிரொளியாக வீசிக் கொண்டிருக்கும் திருத்தலம் காஞ்சி. காலம் காலமாக நமது முன்னோர்கள் வழிபட்ட அந்த ஆலயத்தினுள் ஒருமித்த மனத்தோடு நுழைகிறோம்.

பிரளயசிந்து எனப்படும் காமபீடத்தில் கருணைத்திருவுருவாய் இந்த உலகெலாம் உய்ய அருளாட்சி செய்யும் காமகோட்டத்துக் கரும்பு காமாட்சியம்மை. அவளது அழகினைச் சொல்லில் வடிக்க இயலாது. எனினும் பல தலைமுறைகளாகப் பாடப்பட்டு வரும் காமாட்சியம்மை விருத்தத்தின் ஒரு பாடல்காட்டும் அழகில் அவளோடு ஒன்றி விடுகிறோம்.

*பத்துவிரல் மோதிரம் எத்தனை பிரகாசமது பாடகம் தண்டைக்கொலுசும்*
*பச்சை வைடூரியமும் இச்சையாய் இழைத்திட்ட பாதச்சிலம்பின் ஒளியும்*

# ஈச்வரி ஜெகதீச்வரி 9

*முத்து மூக்குத்தியும் ரத்தினப் பதக்கமும் மோகன மாலையழகும்*
*முத்துடன் வைடூரியம் புஷ்பராகத்தினால் முடிந்திட்ட தாலியழகும்*
*சுத்தமாய் இருக்கின்ற காதினில் கம்மலும் செங்கையில் பொன்கங்கணம்*
*செகமெலாம்விலைபெற்ற முகமெலாம்ஒளிவுற்ற சிறுகாதுகொப்பினழகும்*
*அத்திவரதன் தங்கை சத்திசிவரூபத்தை அடியனால் சொல்லத்திறமோ*
*அழகான காஞ்சியில் புகழாக வாழ்ந்திடும் அம்மை காமாட்சி உமையே!*

விளையாட்டாக ஈசனது கண்களைப் பொத்திய உமையை இருள் போன்ற கருநிறமாக்கி அவனியில் அருந்தவம் ஆற்றித் தன்னுடன் சேரும்படி ஆணையிட்டான் கயிலைநாதன். மாங்காட்டில் பஞ்ச அக்னி இடையே ஒருகாலை மடித்து மறு காலில் நின்று தன்னை வருத்திக் கொண்டு பலகாலம் தவம் செய்தாள் சிவக் கொழுந்தான அன்னை. மீண்டும் இறைவனைச் சேரக் கம்பை ஆற்றங்கரையில் மணலால் சிவலிங்கம் செய்து ஆகம முறைப்படி பூசித்தாள். உமையின் பேரன்பை வெளிப்படுத்தத் திடீரென்று ஆற்றில் வெள்ளம் வரச்செய்தார் சிவபிரான்.

ரேவதி சங்கரன்

* லக்ஷ்மி - நாராயணன்



* ஓவியம் : ரம்யா

லிங்கத்தைக் காக்கத் தழுவிய அன்னையின் மார்பும், வளைக்குவடும் இன்றும் ஈசனன் மேனியில் விளங்கத் "தழுவக் குழைந்த கம்பனாய்" மாவடியில் திகழக் காணலாம். தவம் செய்து ஈசனோடு இணைந்த சிவசக்தி, அழகிய வடிவில் அமர்ந்து இருந்து காக்கின்றாள் காமாட்சியாக.

ஈசனார் அளித்த இரு நாழி நெல் கொண்டு முப்பத்து இரண்டு அறங்கள் வளர்த்த அன்னை ஒருத்தியே அத்தனை கோயில்களுக்கும் நாயகியாக விளங்குகிறாள். ஆம்! காஞ்சியில் எத்தனையோ சிவ ஆலயங்கள் இருந்தபோதிலும் எதிலும் அம்பிகையைக் காண முடியாது. உமையுடனும், கந்தனுடனும் அமர்ந்த சிவனை ஸோமாஸ்கந்த மூர்த்தி என்பர். காஞ்சியில், ஏகாம்பரேசுவரர் ஆலயத்திற்கும், காமாட்சி ஆலயத்திற்கும் நடுவே குமரகோட்டம் அமைந்துள்ளதை ஆழ்ந்து பார்த்தால் ஸோமாஸ்கந்த மூர்த்தம் இந்த உலகினுக்கு அருள்பாலித்துக் கொண்டிருப்பது புரியும்.

காயத்ரி மண்டபத்தில் காமகோடி பீடத்தில் பத்மாசனத்தில் அமர்ந்து இருக்கின்ற அழகுக் கோலத்தை அப்படியே கண்களால் பருகுகிறோம். ஆசையை அடக்கும் பாசம், மனத்தை அடக்கும் அங்குசம். ஐம்புலன்களையும் செயல்படுத்தும் ஐந்து மலர்களாலான புஷ்ப பாணம், இயக்கி எய்ய ஒரு கரும்பு வில் ஆகியவற்றை நான்கு திருக்கரங்களிலும் ஏந்தி விளங்கும் தெய்வீகத்தைக் காணக் காண நாம், நமது என்பது கரைந்து, அந்தக் காமாட்சியோடு அவளது அருள் ஒளியில் கலந்து விட மாட்டோமோ என்ற வேட்கை எழுகிறது. இதுதான் உருவ வழிபாட்டில் உயிர்களுக்கு ஏற்படுகின்ற பக்திப் பரவசம்.

அன்னை வடிவின் முன்னே காமாட்சியே ஸ்ரீசக்ர வடிவில், அஷ்டலட்சுமிகள் புடைசூழ விளங்குவது அருவமான அழகு. பொதுவாக சக்தி பீடங்கள் ஐம்பத்தொன்று என்பர். அத்தனை பீடங்களும் அடங்கிய சமஷ்டி பீடம் இதனை வாக்பவம் என்பர். இதனுள் ஜ்வாலாமுகி மத்ய பீடமும், காமாக்யா சக்தி பீடமும் அடக்கம். ஐந்தொழிலை அணுவும் பிறழாமல் இயக்கி வரும் பேரருள் சக்தி ஸ்ரீசக்ர நாயகி லலிதாமஹாதிரிபுர சுந்தரி. அவளது அருட்சோதியில் கலந்தவர், அத்வைதத்தை அகிலத்துக்கு அளித்த ஜகத்குரு ஆதிசங்கரர். ஆதிசங்கரரது வழி வந்த சீடர்கள் இந்தக் காமகோடி பீடத்தைப் பாரம்பரியமாக வணங்குவதால காமகோடி பீடாதிபதி என்று வழங்கப்படுகிறார்கள். ஊமையாக இருந்த மூகனை உலகம் போற்றும்படிக் கவி பாடச் செய்தது காமகோடி காமாட்சியின் கருணை



* மலர்க்கணை எய்யும் மாரன்

மழைதானே! 'எமது குறைகளையும் செவி மடுப்பாயா அம்மா?" என்று மனதுக்குள் அவளோடு பேசாதவர்கள் இருக்க முடியாது! பூத்திருக்கும் புன்னகையில் "காப்பாள் காமாட்சி" என்ற நம்பிக்கை உறுதிப்படுகிறது.

## அற்புதம்

கமலவிழியழகி காமாட்சியைத் தீப ஒளியில் கண்குளிரக் கண்டு கரம் கூப்பிய போது ஸ்ரீ சக்ரத்திற்கு அர்ச்சனை செய்த குங்குமத்தைப் பிரசாதமாக வழங்குகிறார்கள். ஆனால் அதை அப்படியே நமது நெற்றியில் அணியாமல் தேவியின் இடப்பக்கத்தில் உள்ள அரூபலட்சுமியான அஞ்சனகாமாட்சியின் மீது சார்த்திவிட்டு அணியச் சொல்கிறார்கள்.

இது எதற்கு? அழகாக விளக்கம் சொல்கிறார்கள் :

மஹாவிஷ்ணுவின் கரியநிறம் பற்றி விளையாட்டாகப் பரிகசித்த மஹாலட்சுமியை அருவமாகச் சபித்து விட்டார் அஞ்சன வண்ணன். லட்சுமியும் காமகோட்டத்தில் அன்னையைக் குறித்துத் தவம் இயற்ற, தேவி மகிழ்ந்து, "என்னுடன் விளங்கும் உன் மீது, என்னைத் தரிசிக்க வரும் அன்பர்கள் எனது குங்குமப் பிரசாதத்தைப் போட்டு உனது உச்சி முதல் பாதம் வரை தொட்டு வணங்குவர். நீயும் அஞ்சனகாமாட்சியாக எல்லாச் செல்வங்களையும் அருள்வாய்" எனக் கூறினாள். அதனால் பழையபடி அழகு பெற்ற சௌந்தரியலட்சுமியான திருமகளை மணந்தவர் கள்வர் பெருமான். பெருமாளும் அன்னையின் வலப்புறத்தில் விளங்கக் காணலாம். இதனாலேயே இந்த ஆலயம் வைணவத் திருப்பதியாகவும் போற்றப்படுகிறது. அழகு முதல் பதினாறு பேறுகளையும் வழங்க அரூபலட்சுமியும், பிள்ளைப் பேற்றை வழங்க வராஹியின் முன்னே சந்தான ஸ்தம்பமும் விளங்கும் இந்த ஆலயம் அன்பர்கள் ஆசைப்படும் எதையும் அள்ளி வழங்கும் அற்புதக் கடலாகும்.

## ஆனந்தம்

தாம் வழிபட்டுத் தரிசித்த காமாட்சியை ஆணிப்பொன்னால் 'பங்காரு காமாக்ஷி'யாக உருவமைத்தவர் பிரமன் என்பர். ஈசுவரன் மீது மலர்க்கணை

களைத் தொடுத்து நெற்றிக் கண்ணால் எரிக்கப்பட்டவன் மன்மதன். அவனுக்கு மீண்டும் உருத்தந்தவள் அன்னை காமாட்சி. தனக்கு உருவம் அளித்ததால் தங்கமானவளை ஈசன் கண்டு மகிழும்படி மலர்க்கணை எய்தான் மாரன். இம்முறை அன்னை அருள் முன்னின்றதால் ஈசனார்க்கு மூன்றாவது கண்ணைத் திறக்கும்படி கோபமேற்படவில்லை.

வந்தனர். மைசூரை ஆண்ட ஹைதர் அலி இந்தத் தங்கக் காமாட்சியைப் பற்றிக் கேள்விப்பட்டு கைப்பற்ற முற்பட்ட போது தஞ்சையை ஆண்டு வந்த நாயக்க மன்னர்கள் மிகவும் பத்திரமாக அம்மனைத் தஞ்சைக்கு எடுத்துச் சென்று விட்டனர். பின்னர் அன்னையைத் திருப்பித் தர மறுத்து விட்டனர். இன்றும் தஞ்சையில் பங்காரு காமாட்சி விளங்கு

## மடத்திலும் ஓர் அணில்பிள்ளை

ஒருமுறை தமது ஆறு வயது மகனை அழைத்துக் கொண்டு மடத்தில் பூஜையைப் பார்த்து விட்டு பெரியவர் கையாலே தீர்த்தம் வாங்க ஒரு பெண் நின் றிருந்தாள். அப்பொழுது திடீரென்று அந்தப் பையனைக் காண வில்லை. சரி, விளையாடிக் கொண்டிருப்பான். வந்து விடுவான் என்று எண்ணியபடியே கடைசியாக தீர்த்தம் வாங்க கையை நீட்டினாள் அப் பெண்.



பெரியவாளும் நிமிர்ந்து முறுவலித்தபடி தீர்த்தம் கொடுத்ததும், அப் பெண்ணுக்கு அருகில் அவள் மகனும் கைநீட்டிக் கொண்டிருந் தான். பெரியவா புன்னகையுடன், "இராமாயணத்துலே சேது அணைகட்ட அணிப்பிள்ளை சேவை செஞ்ச மாதிரி, நீ இந்த மடத்துலே பிரசாதம் கொடுக்கச் சேவை செஞ்சுட்டு வரயா?" என்று கூறிச் சிரித்தபடி தீர்த்தம் கொடுக்க, அவனும், 'ஆமாம்' எனக்கூறி தீர்த்தம் பெற்று விடைபெற்று வெளியே வந்து, தன் தாயைப் பார்த்து, "அம்மா! பெரியவா என்ன சொன்னா கேட்டயா, என்னையும் இராமாயணத்துல வர அணிப்பிள்ளை மாதிரின்னு சொல்லிட்டா ஏன் தெரியுமா?

நீ கிழிஞ்ச பேப்பரைக் கொண்டு வந்து மடத்துலே குப்பை ஆக்காதே, தூக்கிப் போட்டுட்டு வான்னு சொன்னியே. அதைக் கிழிச்சு குங்குமம், விபூதி பிரசாதம் கீழே விழாம பொட்டலமா கட்ட கொடுத்துண்டே வந்தேனா அதைப் பெரியவா பார்த்திருக்கார் பாரும்மா! என்று மகிழ்ச்சியோடு கூறினான்.

குழந்தைகளிடம் பெரியவா காட்டும் கருணையையும், உற்சாகப்படுத்தும் விதத்தையும் நினைத்து நான் ஆச்சர்யப்பட்டேன்.

- ஆர். சாந்தா.

மாறாக அன்னையின் அழகு உருவினைக் கண்டு வியந்து நின்றார். உலகே ஆனந்தம் அடைய மன்மதன் வேண்டியபடியே பங்காரு காமாட்சியை ஏகாம்பரேசன் மணம்புரிந்து அருளினாராம். கதையைக் காது குளிரக் கேட்கிறோம். மனதில் விரியும் தெய்வீகத் திருமணக் காட்சியில் பாகாய்க் கரைகிறோம்.

'பங்காரு காமாட்சி'யை அண்மைக் காலம் வரை உற்சவமூர்த்தியாக வணங்கி

கிறாள். பின்னர் வடிவமைத்த பஞ்ச லோகத் திருவுரு உற்சவநாயகியாக விளங்குகிறாள்.

கருணைத்திரு உருவாய்க் காமகோட்டத்துக் கரும்பாய் இம்மைக்கும் மறுமைக்கும் அருள்பொழிந்து இனிப்பவள் காமாட்சி! தஞ்சம் என நாடி வருவோர் உள்ளத்தில் கொஞ்சி விளையாடும் கஞ்சி காமாட்சி!



மதுரை ஐகோர்ட் கிளையிலிருந்து 7கி.மீல்

# A.P. டவுன்ஷிப்

( A. பெரியாம்பிள்ளை டவுன்ஷிப் )



| Plot Category | Plot Size | Plot Area | Plot Cost |
|---|---|---|---|
| Regular Plot (Road on only one side of the plot) | 40 Ft. x 60 Ft. | 2400 Sq.ft. (One Ground) | Rs. 1.25* Lac (Incl. Registration Expe.) |
| Corner Plot (Road on two sides of the plot) | 40 Ft. x 60 Ft. | 2400 Sq.ft. (One Ground) | Rs. 1.50* Lac (Incl. Registration Expe.) |

* Conditions apply

(மதுரை–சென்னை ரோடு
அருகே அரிவாங்குடி)
50 ஏக்கரில் சகல வசதிகளுடன்
600 வீட்டு மனைகள்



வீட்டுமனை வாங்க நம்பிக்கையான, கைராசியான நிறுவனம்

# S.T. PROMOTERS

Plot No. 650, K.K. நகர் மெயின் ரோடு, மதுரை – 20

Promoters: S.தமிழரசன் M.A.

**Telefax: 0452-2584287**

Chennai Cell: 94440 68790 Madurai Ph: 0452-2584288

---



# சுப - யாத்ரா®

43. தெற்கு மாட வீதி, ( சித்திர குளம் எதிரில் ) மைலாப்பூர், சென்னை – 4.
Ph. 2495 0218, 2495 2319. Cell : 98400 64243.



**ஷிரிடி சாய் பாபா தரிசனம்** 20-07-05 03-08-05 17-08-05
ஷிரிடி – சனி சிங்கனாபூர் – மஹா கணபதி (4 நாட்கள்) ரூ.1700/-

**ஷிரிடி – நாசிக்** 13-07-05 07-09-05 ரூ.2400/-
ஷிரிடி, த்ரயம்பகேஷ்வர், பஞ்சவடி, சனிசிங்கனாபூர் – மஹாகணபதி (5 நாட்கள்)

**ஷிரிடி – பண்டரிபுரம்** 10-08-05 12-10-05
ஷிரிடி – சனி சிங்கனாபூர் – பண்டரிபுரம் – துல்ஜாபூர் (5 நாட்கள்) ரூ. 2500/-

**ஷிரிடி – மந்த்ராலயம்** 27-07-05 24-08-05
ஷிரிடி – சனி சிங்கனாபூர் – மஹாகணபதி –
மந்த்ராலயம் – பஞ்சமுகி ஆஞ்சநேயர் (5 நாட்கள்) ரூ.2400/-

**ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமி தரிசனம்** 28-07-05 25-08-05
மந்திராலயம், பஞ்சமுகி ஆஞ்சநேயர் கோவில், நவபிருந்தாவனம் (4 நாட்கள்) ரூ.1700/-

**காசியாத்திரை** 10-10-05 (8 நாட்கள்) ரூ.4800/-
அலஹபாத், அயோத்யா, காசி, கயா

The mercury glyph note: none



**உங்கள் குழந்தை நேந்திரம்பழத்தை விரும்பவில்லையா? இதைப் பல அவதாரங்களாகப் பண்ணிக் கொள்ளுங்கள். பிறகு பாருங்கள்!**

# நேந்திரம் பழம் பலவிதம்

### 1. 'பனானா' ஃப்ரை

பழத்தை அரை இன்ச் கனத்தில் வட்ட வட்டமாக நறுக்கவும். இலுப்பச்சட்டியில் 1 டேபிள் ஸ்பூன் நெய் விட்டு, காய்ந்தவுடன் இந்தத் துண்டுகளைப் போட்டு பத்து நிமிடம் புரட்டி பிளேட்டில் எடுத்து வைக்கவும். காஸை எப்பொழுதும் சிம்மில் வைத்துக் கொள்ளவும். பழத்துண்டுகளின் மேல் சர்க்கரையைத் தூவி குழந்தைகளுக்குக் கொடுங்கள். சூப்பராக இருக்கும்.

### 2. பழம் பொரி

பழத்தை பஜ்ஜிக்கு நறுக்குவது போல இலேசாக, நீளமாக நறுக்கி வைத்துக் கொள்ளவும். ஒரு பாத்திரத்தில் கொஞ்சம் மைதா மாவு, ஒரு சிட்டிகை சோடா உப்பு, 1 டீஸ்பூன் சர்க்கரை இவற்றைத் தண்ணீர் விட்டு தோசை மாவு போல கலந்து வைத்துக் கொள்ளவும். பழத் துண்டுகளை ஒவ்வொன்றாக இந்த மாவில் தோய்த்து காய்ந்த எண்ணெயில் போட்டு பொன்னிறமாகப் பொரிக்கவும். சூடாகச் சாப்பிட முறுமுறுவென்று நன்றாக இருக்கும்.







### 3. பழ அல்வா

பழத்தைத் தோலுடன் ஆவியில் 10 நிமிடம் வேகவைக்கவும். ஆறியபின் தோலை உரித்து அதிலுள்ள நாரையும், விதைகளையும் எடுத்து விட்டு மிக்ஸியில் ஒரு சுற்று சுற்றவும். ஒரு கப் விழுதுக்கு 1 கப் சர்க்கரை என்ற விகிதத்தில் ஒரு அடிகனமான பாத்திரத்தில் போட்டு காஸில் வைத்து கொஞ்சம் கொஞ்சமாக நெய் விட்டுச் சுருளக் கிளறவும். கையில் ஒட்டாமல் வரும்பொழுது நெய் தடவின பிளேட்டில் பரத்தி ஆறினவுடன் துண்டாக்கிக் கொடுக்கவும். ஜாமாகவும் சாப்பிடலாம்.

### பழப் பச்சடி

பழத்தை சிறு துண்டுகளாக நறுக்கிக் கொள்ளவும். துண்டுகளை ஒரு பாத்திரத்தில் போட்டு கொஞ்சம் தண்ணீர் விட்டு மஞ்சள் பொடி, உப்பும் போட்டு நன்றாக வேகவைக்கவும். பழத்துண்டுகள் 1 கப் இருந்தால் ஒரு டேபிள் ஸ்பூன் தேங்காய், ஒரு பச்சை மிளகாய் சேர்த்து அரைத்து வெந்த பழத்துடன் கலக்கவும். ஒரு கொதி வந்தவுடன் இறக்கி வைத்து கடுகும், கறிவேப்பிலையும் தாளித்துக் கொட்டவும். தயிர்ப்பச்சடியாகச் செய்ய வேண்டுமானால் தாளிப்பதற்கு முன்பு ஒரு கப் தயிர் கலக்கவும்.

புளிப் பச்சடியாகப் பண்ண வேண்டுமானால் வேகும் பொழுது 1 டேபிள் ஸ்பூன் புளித் தண்ணீர் சேர்க்கவும். வெந்த பிறகு அரைத்த தேங்காயைக் கலந்து ஒரு கொதி வந்தவுடன் தாளிக்கவும்.

- கமலா

வாழைப்பழம் பஞ்சாமிர்தமாக கனிந்து விட்டதா? இதோ, சுவையான 'மால்புவ்வா' செய்து அசத்தலாம்.

மால்புவ்வா தயாரிக்கத் தேவையானவை :

நன்கு கனிந்த வாழைப்பழம் - 2, கோதுமை மாவு - 1/2 கப், சீனி - 7 ஸ்பூன், ஏலக்காய் - 2, மிளகுத் தூள் - 1 சிட்டிகை, பொரித்து எடுக்க எண்ணெய்.

**செய்முறை :**

ஒரு கிண்ணத்தில் வாழைப் பழங்களைத் தோல் நீக்கிப் போட்டு கைகளால் மசிய பிசையவும். திரவமாக நீர்த்து விடும். அததுடன் கோதுமை மாவு, சீனி, ஏலத்தூள், மிளகுத் தூள் சேர்த்து "அப்பம் மாவு" பதத்தில் கலக்கிக் கொண்டு காய்ந்த எண்ணெயில் சிறு கரண்டியால் எடுத்து ஊற்றி இருபுறமும் சிவக்க வெந்ததும் எடுத்து சூடாகப் பரிமாறவும்.

குறிப்பு : மாவு கரைக்கும் போது தண்ணீர் சேர்க்க வேண்டாம். பழம் விடும் நீர்ப் பதமே போதும். தண்ணீர் சேர்த்தால் எண்ணெய் அதிகம் குடித்து ருசி மாறுபடும்.

- விஜயாமணி

# பொட்டில் அடித்தாற் போல்...

**இனி உங்களைப் பற்றியும் உங்கள் பிரச்னைகளுக்கு சரியான தீர்வையும் துல்லியமாக அறிந்து கொள்ள இதோ ஓர் உலகத்தரம் வாய்ந்த எளிய வழி...**

நமது சரியான **பிறந்த தேதி** மற்றும் **பெயரை** மட்டும் கொடுத்தால் போதும், மிகத் துல்லியமாக **நாம் ஏதும் கூறாமலேயே பொட்டில் அடித்தாற் போல்** நம்மைப் பற்றியும் நாம் சந்தித்து வரும் பிரச்சனைகள் பற்றியும் AAN® விஞ்ஞான முறைப்படி நேரில் பார்த்து போல் கூறி, நிரந்தரத் தீர்வு காண எளிய மற்றும் சிறந்த பரிகார முறைகளைப் பற்றியும், ஆலோசனை வழங்கி வருகிறார் மாமேதை Master of AAN® திரு. **'பக்ஷி' தி. வேணுகோபாலன்** அவர்கள். இவர் இந்தியாவிலேயே முதலாவதாக AAN® முறைப்படி பரிந்துரைக்கப்பட்ட நபர்களுக்கு மட்டுமே சக்தியேற்றி, செறிவூட்டப்பட்ட (Energised & Enriched) உயர்தர (imported) இரத்தினக் கற்களை வழங்கி அவர்களது வாழ்வில் அதிசயிக்கத்தக்க நிகழ்வுகளை நிகழ்த்தியும் வருகிறார். 15 வருடங்களுக்கும் மேலாக அனுபவம் மிக்க இவர் புதுதில்லியில் உள்ள Institute of Numerology (R&D)யில் சீனியர் மெம்பராகவும் உள்ளார்.

இந்த அற்புதமான கலையைப் பரிசோதிக்க விரும்பும் ஜோதிடர்கள் மற்றும் எண் கணித நிபுணர்கள் மறைமுகமாக அல்லாமல் நேரிடையாவே முன்பதிவு செய்து வரலாம் என்று சவால் விடுகிறார் திரு. **'பக்ஷி' தி. வேணுகோபாலன்.** மேலும் உங்களுக்கு அதிர்ஷ்டத்தையும் அமைப்பையும் உருவாக்கி எந்தத் தொழில், என்ன வியாபாரம் செய்தால், குறுகிய காலத்தில் பெரு வெற்றி பெறலாம் என்பதையும், அரசியலில் வெற்றி, **இராகு - கேது தோஷங்களால் ஏற்படும் திருமணத் தடைகளை ஏற்ற பரிகாரங்கள் மூலம் துரித நிவர்த்தி செய்வது,** குழந்தை பிறப்பு, வெளிநாட்டில் வேலை வாய்ப்பு, உங்களைச் சார்ந்த ஆண் - பெண்ணின் ஒழுக்கம் போன்ற பல்வேறு சந்தேகங்களுக்கும், அத்துடன் ஒவ்வொரு இரத்தின மணியும் எவ்விதமான Energies (either Projective + or Receptive - Measured in Electron Volts- 'eV') வெளியிடுகிறது (அ) உள்ளிழுக்கிறது என்பதையும், மேலும் இவற்றை நாம் எப்படி ஒருங்கிணைத்துப் பயன்படுத்த வேண்டும் என்பதையும் (in order to regain the equilibrium position in our body Electro - Magnetic field - AURA) இவரது AAN® முறையில் மட்டுமே மிகத் தெளிவாக அறிய முடிகிறது.

(எ-க) ஒரு செறிவூட்டப்பட்ட சுத்தமான வைரம் 5.5 'eV' Projective Wave Energy வெளியிடுகிறது.

**Courtesy:** Gemmological Association of Great Britain.

இவரது தொடர்பு முகவரி:(பாண்டிச்சேரி)

'பக்ஷி' **தி. வேணுகோபாலன் Master of AAN® & Aura Viewer**
**(Senior Member, Institute of Numerology (R&D) Nangal Raya, New Delhi - 110 004)**
**ஆலோசனைக்காக : 6, வ.உ.சி வீதி, காமராஜ் நகர், (வேல். சொக்கநாதன் திருமண மண்டபம் மற்றும் வெஸ்லி பள்ளி அருகில்) பாண்டிச்சேரி - 605 011.**
**Phone: 0413 - 2211667 Cell: 98423 - 66855 'AAN® - ADVANCED AURIC NUMEROLOGY'**
**Consulting Hours : 9.00 a.m to 1.00 p.m & 3.00 p.m. to 8.00 p.m**

**Do you know what is NAME?**

**N = Natal's**
**A = Abstract**
**M = Maintained by**
**E = Eternal**

**Space Sponsored by Institute of Numerology (R&D) New Delhi**

**கண்மணியின்**

# குழந்தைக்காக...



* குழந்தைப்பேறுக்கு "பெண்" மட்டும்தான் காரணமா?
* எந்த வயதிலும் சுகமான தாம்பத்திய உறவுக்கு! ஆலோசனைகள் மற்றும் சிகிச்சை முறைகள்!
* கர்ப்பப்பை, சினைப்பை மற்றும் சினைக்குழாய் பிரச்சனைகளுக்கு சிறப்பான மருத்துவ சிகிச்சை
* குழந்தையில்லாத ஆண் / பெண் இருபாலருக்கும் முழுமையான சிகிச்சை அளிக்கின்றோம்
* IUI, IVF_ET (டெஸ்ட் டியூப் முறை), ICSI போன்ற புதிய நவீன சிகிச்சை முறைகளின் மூலம் குழந்தைகளை உருவாக்குகின்றோம்.

**இந்தியாவில் முதன்முறையாக... கருத்தரிப்பு சம்மந்தப்பட்ட துறையில் 20 ஆண்டுகளுக்கு மேலாக அனுபவமுள்ள பிரபல மருத்துவர்களும் மற்றும் விஞ்ஞானிகளும் இணைந்து சிறப்பான சிகிச்சை அளிக்கின்றார்கள்.**



## கண்மணி கருத்தரிப்பு மையம்

43, தெற்கு உஸ்மான் சாலை, தி.நகர், சென்னை - 600 017.
போன்: 044-2431 4922 / 2431 4933 செல்: 98410 11636

**நீங்க குழந்தை இல்லாத தம்பதியினரா...? அப்ப... நீங்களும் குழந்தைப்பேறு அடையலாமே!**




# பணத்தைக் காப்பவன்

நம் வாழ்க்கையின் மிக முக்கிய ஒரு அங்கமாக வங்கிகள் செயல்படுகின்றன. முன்பெல்லாம் பணம் டெபாசிட் செய்யவும், பணம் பெற்றுக் கொள்ளவும் வங்கிகளுக்கு நேரில் சென்று பல மணி நேரங்கள் காத்திருக்க வேண்டியிருக்கும். ஆனால் இன்றோ நள்ளிரவு 12 மணிக்கு பணம் தேவையென்றாலும் உடனே சென்று ஏடிஎம் (ஆட்டோமெடிக் டெல்லர் மெஷின்) மெஷினில் பணத்தைப் பெற்றுக் கொள்ளலாம். மனிதர்கள் செய்து கொண்டிருந்த பல வேலைகளையும் இன்று இயந்திரங்கள் நிமிடமாகச் செய்து முடிக்கின்றன. (இந்த ஏடிஎம் மையங்களில் கூட இன்று வரிசையில் நின்று பணம் எடுக்க வேண்டியிருப்பது வேறு விஷயம்!)

இந்த முறையிலும் சில தவறுகள் ஏற்பட வாய்ப்புண்டு. ஏடிஎம்-ஐ அடிக்கடி உபயோகிப்பவர் அவ்வப்பொழுது வங்கிக்கும் சென்று கணக்குகளை நேரடியாகச் சரிபார்த்துக் கொள்வது நல்லது.

இன்று பல வங்கிகளும் ஒன்றோடொன்று போட்டி போட்டுக் கொண்டு, வாடிக்கையாளர்களைக் கவர பல திட்டங்களை அறிவிக்கின்றன. அந்தச் சேவைகளுக்கென பிரத்தியேக சட்டதிட்டங்களும் உள்ளன. அந்த வங்கிகளில் நாம் அக்கவுண்ட் ஆரம்பிக்குமுன் அது பற்றி முழு விவரங்களையும் தெரிந்து கொள்வது நல்லது. பெரும்பாலான வங்கிகளில் நம் கணக்கில் இருக்கும் தொகை, வரவு மற்றும் பற்று முதலிய குறிப்புகளை பாஸ் புக்கில் பதிந்து கொடுப்பது வழக்கம். அந்த நிலை மாறி தற்பொழுது ஸ்டேட்மெண்ட் ஆக மாற்றி பேப்பரில் பிரிண்ட் செய்து அனுப்புகிறார்கள். இதற்காகக் கட்டணமும் வசூலிக்கப்படுகிறது.

ஈமெயில் மூலம் அந்த ஸ்டேட்மெண்டுகளைப் பெற கட்டணம் கிடையாது. அவற்றை உடனுக்குடன் பிரிண்ட் அவுட் எடுத்து வைத்துக் கொள்ள வேண்டும்.

**அடுத்து செக்-புக் என்ற காசோலைகள் :**

வங்கிக் கணக்குகளில் ஒரு குறிப்பிட்ட அளவு தொகை கண்டிப்பாக இருக்க வேண்டும். அந்தத் தொகைக்கு அதிகமாகப் பணம் இருந்தால் மட்டுமே காசோலைகளை உபயோகிக்கலாம். சில வங்கிகளில் காசோலை புத்தகத்திற்கும் கட்டணம் வசூல் செய்கிறார்கள்.




நான் +2 முடித்து விட்டு கம்பெனிகளில் வேலை பார்ப்பதற்காக அலைந்தேன். கிடைக்கவில்லை. அப்படியே கிடைத்தாலும் மாதம் 1500 ரூபாய். ஒருநாள் 50 ரூபாய். பிறகு யோசித்து விட்டு சுயதொழில் (பவர் லூம்ஸ்) ஆரம்பித்தேன். ஒருநாளைக்கு 200 ரூபாய் கிடைக்கிறது. நான் மூன்று பேருக்கு வேலை அளித்துள்ளேன். என் அனுபவத்தை பொறுத்தவரை சுயதொழில் இலாபமே. சுயவேலை பலன் அளிக்கிறது. எந்தவொரு பாதிப்பும் இல்லை.

**- என். வெங்கடேசன், செம்மண் குடை, சேலம் மாவட்டம்.**

புதியதாக ஆரம்பிக்கப்படும் வங்கிக் கணக்குகளுக்கு குறைந்தபட்சத் தொகை ஒன்றை நிர்ணயித்து, கணக்கிலுள்ள தொகை குறிப்பிட்ட தொகைக்குக் கீழே போனால் ஃபைன் அதாவது அபராதத் தொகை வசூல் செய்கிறார்கள். சம்பளத்திற்காக ஆரம்பிக்கப்பட்ட சேமிப்புக் கணக்குகளில் இந்த விதிமுறை கிடையாது. மற்ற கணக்குகளுக்கு இந்தத் தொகை எவ்வளவு மீதமிருக்க வேண்டும் என்று தெரிந்து கொள்வது நல்லது.

ஏ.டி.எம். மிஷின்கள் இந்நாளில் எல்லா வங்கிகளிலும் அமைக்கப்பட்டுள்ளன. கணக்கு ஆரம்பிக்கும்போதே ஏ.டி.எம். மிஷினுக்கான கார்டும் கொடுத்து விடுவார்கள். எந்த அவசர, ஆபத்துக்கு பணம் தேவை என்றாலும் இந்தக் கார்டின் மூலம் பணம் எடுத்துக் கொள்ளலாம். ஒரு குறிப்பிட்ட வங்கியின் கார்டை உபயோகித்து, அந்த வங்கியின் ஏடிஎம்-மில் மட்டுமின்றி வேறு சில வங்கிகளின் ஏடிஎம் மிஷின்களிலிருந்தும் பணம் பெற வாய்ப்புண்டு. ஆனால், ஒரு வங்கியின் கார்டை வேறு வங்கியின் ஏடிஎம் மிஷினில் உபயோகப்படுத்தும் போது அதற்கும் கட்டணம் வசூலிக்கப்படுகிறது.

இக்கால இளைய தலைமுறையினர் பல வங்கிகளின் கிரெடிட் கார்ட், டெபிட் கார்ட, ஏடிஎம் கார்டுகள் வைத்துக் கொள்வதைப் பெருமையாகக் கருதுகிறார்கள். இந்த வசதிகளையும், வாய்ப்புகளையும் உபயோகிக்கும் போது, அவற்றிற்கான விதிமுறைகளையும் சரியாக அறிந்து கொண்டால், அநாவசியமாக பண நஷ்டம் ஏற்படாமல் பார்த்துக் கொள்ளலாம்!

**- ராதா பாலு**



**ஏ.டி.எம். கார்டு பயன்படுத்தும் பொழுது கவனிக்க :**

ஏ.டி.எம். கார்டு என்பது மிகவும் சௌகரியமான ஓர் ஏற்பாடு. இதனால், பயணங்களின் போது அதிகப் பணத்தை எடுத்துச் செல்ல வேண்டிய அவசியமில்லை. திருட்டு போன்ற பயங்கள் குறைவு.

இந்த ஏ.டி.எம். கார்டு கொடுக்கும் பாங்குகளில் சில, இந்த கார்டை உபயோகித்து பொருட்களை வாங்கவும் அனுமதிக்கின்றன. இத்தகைய கார்டு களுக்கு 'ஏ.டி.எம். மற்றும் டெபிட் கார்டு' என்று சொல்வார்கள்.

ஆனால், வாங்கும் பொருள்களின் அளவு உங்களது வைப்புக் கணக்கில் எவ்வளவு பணம் இருக்கிறதோ அவ்வள வுக்குத்தான் வாங்க முடியும்.

இந்த ஏ.டி.எம். கார்டு வசதி கிடைத்த வுடன், அதனுடன் கொடுக்கும் 'வழிகாட் டல் புத்தகத்'தையும் நன்றாகப் படித்து, புரிந்து கொள்ளுங்கள். புரியாவிட்டால் யாரிடமாவது கேட்டுத் தெரிந்து கொள் ளுங்கள்.

முதன் முதலில் ஏ.டி.எம். கார்டு கொடுக்கும் போது மெஷினில் இருந்து பணம் பெற ஒரு ரகசிய எண் ஒன்றைக் கொடுத்திருப்பார்கள்.

முதன் முதலாக ஒரு தடவை பணம் எடுத்து கார்டு மூலம் பணம் பெறலாம் என்னும் நம்பிக்கை வந்தவுடன் அந்த இரகசிய எண்ணை நீங்கள் விருப்பப்படும் எண்ணாக மாற்றி இயந்திரத்தில் உடனே பதிவுசெய்து விடுங்கள்.

கார்டு ஏதாவது காரணத்தால் தொலைந்து போய் விட்டால், உடனே கார்டுடன் கொடுத்த வழிகாட்டியில் கொடுக்கப்பட்ட முகவரிக்கு எழுத்து மூலம் புகார் செய்யுங்கள்

### சில மெஷின்களில் கவனிக்க வேண்டிய விஷயம் :

ஏ.டி.எம். கார்டு உபயோகித்து பணம் பெறும் போது, தேவையான பதிவுகள் எல்லாம் மெஷினில் செய்து முடிந்த பிறகு உங்களது கார்டு ஒரு இடத்தில் பாதி வெளிவந்து நீட்டிக் கொண்டிருக்கும். இந்தக் கார்டை முப்பது செகண்ட்டுகளுக் குள் நீங்கள் எடுத்துக் கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் திரும்பவும் கார்டு மிஷினின் உள்ளே சென்று விடும். கார்டு உங்கள் கைக்குக் கிடைக்காது. ஆகவே, இந்த மிஷின் மூலம பணத்தைப் பெறும் போது, கார்டை முதலில் கையில் எடுத்துக் கொண்டு பிறகு பணத்தை எண்ணிப் பார்ப்பது நல்லது.

கார்டு உள்ளே சென்று விட்டாலும் பயப்பட வேண்டாம். ஏ.டி.எம். கார்டு உபயோகிக்கும் மிஷினின் அருகிலேயே அதன் பாங்கு இருந்தால், அங்கு சென்று உங்களது அடையாளங்களைக் காட்டி திரும்பப் பெற்றுக் கொள்ளலாம். அப்படி இல்லாத இடங்களில் உங்களது கார்டை நீங்கள் முதன் முதலில் எங்கிருந்து பெற்றீர்களோ, அந்த பாங்கின் கிளைக்கு அனுப்பப்பட்டிருக்கும். நீங்கள் அங்கு சென்று வாங்கிக் கொள்ளலாம்.

ஆக, ஏ.டி.எம். கார்டு என்பது, உங்களை பாங்கில் சேமிக்கும் வழக்கத்தை ஏற்படுத்தி, கூட வரும் 'பணத் துணைவன்' என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்.

- கமலநாதன்

**பொன்மொழி**

ஒவ்வொரு சாதனையாளர் பின்னாலும்
பெருமிதம் மிக்க ஒரு மனைவியும்,
ஆச்சரியத்தில் ஆழ்ந்த மாமியாரும்
இருப்பார்கள்.

- புரூக்ஸ் ஹேய்;
தகவல் : நெ. இராமன்.






வங்கிக் கணக்கு வைத்திருக்கும் தோழிகளே! உங்களுக்காக சில பயனுள்ள டிப்ஸ்! நாம் விழிப்புடன் செயல்பட்டு நம் வங்கிக் கணக்கை கண்காணித்தால் கூடுமானவரை பல மோசடிகளை நிச்சயம் தடுக்கலாம்.

# வங்கிக் கணக்கில் விழிப்புணர்வு!

❖ காசோலையை தயவுசெய்து முன்கூட்டியே கையெழுத்திட்டு வைக்காதீர்கள். மிகச் சுலபமாக மோசடி செய்வதற்கு இது வழிவகுக்கும்.

❖ காசோலை கொடுக்கும் பொழுது யாருக்கு எந்தத் தேதியில் கொடுக்கிறோம் என்று மறக்காமல் குறித்து வைத்துக் கொள்ளுங்கள். இவ்வாறு செய்யத் தவறினால், நாம் ஒரு காசோலையை நிறுத்த வேண்டும் என்றால் மிகவும் திண்டாடிப் போவோம்.

❖ பணமோ, காசோலையோ நம் கணக்கில் டெபாசிட் செய்தபின், சரியானபடி அப்பணம் கணக்கில் சேர்ந்துள்ளதா என்று உரிய நேரத்தில் சரிபார்க்க வேண்டியது நம் கடமை.

பணம் கணக்கில் சேரும் வரை பணம்/காசோலை செலுத்திய வங்கி விவரங்கள் அடங்கிய ரசீதைப் பாதுகாப்பாக வைத்திருக்க வேண்டும். ஏதேனும் பிரச்னை என்றால் வங்கியை அணுக இவ் விவரங்கள் மிகவும் அவசியம்.




❖ ஏ.டி.எம். கார்டில் தயவுசெய்து "பின்"நம்பரை எழுதி வைக்காதீர்கள். மிகச் சுலபமாக யூகிக்கக்கூடிய எண்களாக

(வண்டி நம்பர், பிறந்த தேதி ஆகியவை) பின் நம்பராக வைக்காதீர்கள். பின் நம்பரை அடிக்கடி மாற்றுங்கள்.

❖ எவ்வளவுதான் நம்பகமானவராக இருந்தாலும், உங்கள் ஆபீஸ் ப்யூனிடம் 'ஏ.டி.எம்.'ல் பணம் எடுத்து வரச் சொல்லி அனுப்பாதீர்கள். பிறகு வருத்தப்பட்டுப் பயனில்லை.

❖ இன்டர்நெட்டில் வங்கிக் கணக்கைப் பார்த்த பின் மறக்காமல் வங்கி தளத்திலிருந்து முழுவதும் வெளியே வரவும். இது முக்கியமாக ஆபீஸில் பயன்படுத்துவோரின் கவனத்திற்கு.

❖ வங்கிக் கணக்குக்கான ஸ்டேட்மெண்டை நம்மில் பலர் பிரித்துக் கூடப் பார்ப்பதில்லை. இது மிகவும் தவறு. அதிகப்படியாக நம் கணக்கில் சார்ஜில் ஏதும் செய்திருந்தால் அதை நம் வங்கியின் கவனத்திற்கு உடனடியாகக் கொண்டு செல்ல வேண்டும்.

❖ வங்கிக் கணக்கு காசோலையை போலவே 'டிமாட்' எனப்படும் பங்குக் கணக்கு காசோலையான 'டெலிவரி இன்ஸ்ட்ரக்ஷன்' புத்தகங்களையும் கவனமாக வைத்துக் கொள்ள வேண்டும்.

❖ லாக்கர் வசதியை உபயோகித்தபின் கவனமாகப் பூட்டி சாவியை மறக்காமல் எடுக்கவும். இதில் கவனக் குறைவு மிகவும் ஆபத்து.

*தோழிகளே! வங்கி அதிகாரிகள் மிகவும் விழிப்புடன் செயல்பட்டு நம் வங்கிக் கணக்கைப் பாதுகாக்கிறார்கள் என்றாலும், நாமும் நம் பங்குக்கு விழிப்புடன் இருந்தால் பல மோசடிகளைத் தடுக்கலாம் இல்லையா?*

- கீதா பாலாஜி

# இம்மாத இல்லத்தரசி

**சமையல் கூப்பன்**

பொருள் : பச்சை வேர்க்கடலை *கடைசி தேதி* : 20.07.2005

என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இதனுடன் அனுப்பியுள்ளேன். இச் சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

• சுகுமாரி



# வாய்ப்புகள்

சில ஆண்டுகளுக்கு முன்பு வரை, பெண்கள் இரண்டு வகையாக இருந்தார்கள்.

வேலைக்குப் போகும் பெண்கள்...

வீட்டிலிருக்கும் பெண்கள்...

இரண்டாவது வகைப் பெண்களை எந்தவிதத்திலும் குறையாக நினைக்கக் கூடாதென்று "ஹோம் மேக்கர்" என்று அழைத்தார்கள்.

இப்போதும் பெண்களில் இரண்டு வகைதான். அலுவலகத்தில் வேலை செய்யும் பெண்கள். வீட்டிலிருந்தபடியே சுயமாகச் சம்பாதிக்கும் பெண்கள்...

"அந்தக் காலத்துல எங்கப்பா என்னை எட்டாங் கிளாஸோட நிறுத்திட்டார்... என்னை மட்டும் படிக்க வச்சிருந்தா, நா இப்ப ஒரு ஆபீசராகியிருக்க மாட்டேனா...?"

ஓரளவு குடும்பக் கடமைகளை முடித்து விட்ட நடுத்தர வயதுப் பெண்மணிகள் இனிமேல் இப்படிப் புலம்ப வேண்டாம்.

இப்போதுதான் படிப்பை முடித்த இளம்பெண்களுக்கும், பொழுதை எப்படிப் பயனுள்ளதாக்கலாம் என்று தவிக்கும் பெண்களுக்கும், கொஞ்சம் முனைந்தால் சுயதொழிலில் ஈடுபடுவதற்கான வாய்ப்புகள் பெருகி வருகின்றனவே...

வீட்டிலிருந்தபடியே ஒழிந்த நேரத்தில் ஏதாவது செய்யலாமே என்று சின்னதாக பிஸினஸ் ஆரம்பித்த பல பெண்கள் இன்று தத்தம் துறையில் அமோக வெற்றி அடைந்திருக்கிறார்கள்...

முக்கியமாகப் பலருக்கும் வழிகாட்டியாக இருக்கிறார்கள். அவர்களின் வெற்றி, நேர்மையும் திறமையும் கலந்த உழைப்புக்கு கிடைத்த பரிசு... ஈடுபாட்டுடன் செயல்பட்டதற்குக் கிடைத்த பரிசு... அவர்களது அனுபவங்கள், கேட்டு அறியப்பட வேண்டியவை...

தங்களின் பொழுதுபோக்குக்கோ அல்லது குடும்பச் செலவை ஓரளவு சரிக்கட்டவோ, ஆரம்பித்த அவர்களது தொழில் அமைப்புகள், இன்று பலருக்கு வேலை வாய்ப்பு அளித்துள்ளது. பல குடும்பங்களுக்குப் பிழைப்பு தந்துள்ளது... இதற்கான 'பொறி' எப்போது வேண்டுமானாலும் கிளம்பலாம்...



**திருமதி உஷா ஸ்ரீதர் என்கிற இந்தப் பிரபல தொழில் அதிபரைப் பாருங்களேன்...**





• ஸ்ரீகாந்த்

# வானம் வரை

பத்துப் பன்னிரண்டு வருடங்களுக்கு முன்னால், குழந்தையைப் பள்ளிக்குக் கொண்டு விடப் போன வழக்கமான ஒரு தாயின் கண்ணில்பட்டது அந்த போர்டு.

நெசவுத் தொழிலாளர்களுக்கான மையம்...

உள்ளே நுழைந்து விசாரித்தார்..

வழி பிறந்தது...

துணிகளில் பிரிண்ட் போடுவது, சாயம் ஏற்றுவது, பதிக் வேலை செய்வது இவற்றுக்கான பயிற்சிகளை அளிப்பதாகச் சொன்னார்கள்...

ஒன்றரை மாதப் பயிற்சி... 45 நாட்கள் மட்டும்...

அவருக்கிருந்த ஆர்வமும் உழைப்பும்... இன்று தேனாம்பேட்டையில் மிகப் பெரிய யூனிட் ஒன்றும், துணி வகைகளுக்கான ஷோரும் ஒன்றும் சொந்தமாக வைத்திருக்கிறார்.

பெண்களுக்குப் பொதுவாக, மற்றவரிடமிருந்து வித்தியாசப்படும் விதமாக டிசைன், வண்ணம் உள்ள உடைகள்தான் பிடிக்கும்.


• உஷா ஸ்ரீதர்

உஷா ஸ்ரீதரின் யூனிட்டில் தயாராகும் புடைவைகள், சுரிதார் வகைகள் ஒவ்வொன்றும் தனி ரகம்...

இவரது மற்றோர் சிறப்பு, ஆறு மாதங்கள் தானே பாடுபட்டு இவர் உருவாக்கியிருக்கும் பாலிஷிங் இயந்திரம்... சென்னையில் தன்னிடம் மட்டும்தான் இந்த இயந்திரம் இருப்பதாகச் சொல்கிறார்.

"கல்லூரி நாட்களில் விளையாட்டுத் துறையில் அதிக ஆர்வத்துடன் சுடுபடுவேன்... அந்த ஜெயிக்கும் உறுதி தொழிலிலும் வெற்றி தேடித் தருகிறது..." என்கிறார் உஷா.

"குடும்பத் தேவைக்காகத்தான் சிறிய அளவில் துவங்கினேன். இன்று பத்துப் பேர் என்னிடம் வேலை பார்க்கிறார்கள்..."



துபாய் போன்ற நாடுகளுக்கு ஏற்றுமதியும் செய்யும் உஷா, "தரம்" விஷயத்தில் மிக உறுதியாக இருக்கிறார்...

"கற்பனைத் திறனில் வண்ணக் கலவைகள், டிசைன்கள், விதவிதமான வாடிக்கையாளர்கள், தரமான துணிகளைத் தருகிறோம் என்ற திருப்தி..." எல்லாம் இந்தப் பிஸினஸ் மூலம் கிடைக்கிறது என்கிறார் திருமதி உஷா ஸ்ரீதர்.

அழகான ஆடைகள் தயாரிப்பதில் உஷா வெற்றி பெற்றவர் என்றால், அந்த அழகான ஆடைகளை அணிந்து பவனி வரும் அழகான மாடல்களை உருவாக்கும் "மாடல் கோ ஆர்டினேட்டர்கள்" இருவரைச் சந்திப்போமா?

**"கோண்ட்-ஆக்ட்" என்ற பெயரில் சென்னை வேளச்சேரியில் மாடலிங் நிறுவனம் நடத்தி வருகிறார்கள் திருமதி. ருக்மணி பத்மநாபன், திருமதி பிஜு ஜெயதேவன் இருவரும்....**

பத்து வருடங்களுக்கு முன், சென்னையில் மாடலிங் துறைக்கு யாரும் வரத் தயங்கிக் கொண்டிருந்த நேரத்தில் இந்த நிறுவனத்தை ஆரம்பித்தார்கள்... அப்போதெல்லாம் படப்பிடிப்புக்கு ஏற்பாடு செய்து விடுவார்கள்... ஆனால் மாடலுக்கு ஆட்கள் கிடைக்க மாட்டார்கள்...

"நாங்கள் மாடல்களை தேடித் தேடி அலைவோம். ஆனால் இன்று நிலைமை மாறி விட்டது. எங்களிடம் பதிவுசெய்து கொள்ள நிறையப் பேர் வருகிறார்கள்..." என்கிறார் ருக்மணி. பதிவுக்கான கட்டணம் ஏதும் இல்லையாம். கைக்குழந்தையிலிருந்து முதியவர் வரை யார் வேண்டுமானாலும் பதிவுசெய்து கொள்ளலாம்...

விளம்பர நிறுவனங்கள், அந்தந்த விளம்பரங்களுக்கு ஏற்ப, ஆட்களைத் தேர்வு செய்து கொள்கிறார்கள்.

விளம்பரங்களில் தோன்ற அழகாகத்தான் இருக்க வேண்டும் என்ற அவசியமின்றி, குட்டையோ நெட்டையோ, ஒல்லியோ பருமனோ... விளம்பரத்திற்கேற்றவாறு ஆட்கள் தேவைப்படுவார்கள்...

இன்றைய பிரபல நடிகை த்ரிஷா முதலில் மாடலிங் செய்து கொண்டிருந்த போது, அவரை மாடலிங் உலகிற்கு அறிமுகப்படுத்தியவர்கள் ருக்மணியும், பிஜுவும்தானாம்...

அதே போல ஆஸ்கார் பிலிம்ஸ் தங்கள் திரைப் படத்துக்கு கதாநாயகனைத் தேடிய போது இவர்கள் மூலம்தான் ரோஜாக் கூட்டம் ஸ்ரீகாந்த் அறிமுகமாயிருக்கிறார்.

இந்தியா மட்டுமல்ல, ஸ்ரீலங்கா, மலேஷியா, சிங்கப்பூர் போன்ற பல நாட்டு விளம்பர நிறுவனங்களும் இவர்களிடம் பதிவுசெய்துள்ள மாடல்களைத் தேடி வருகிறார்கள்..

அழகிப் போட்டிகள் ஆங்காங்கே நடப்பதன் பலன்...

இவர்களிடம் பதிவுசெய்து கொள்ளும் கல்லூரி மாணவிகள், குடும்பத் தலைவிகள் எண்ணிக்கை அதிகரிக்கிறது.

"அதிக மாடல்கள் தேவைப்படுவது ஆடை மற்றும் நகை விளம்பரங்களுக்குத்தான்..." என்னும் ருக்மணி ஒரு சுவையான தகவலையும் தருகிறார்.

நகைக் கடையோ, புடவைக்

• ருக்மணி பத்மநாபன்



• படம் : ஸ்ரீஹரி

# உங்கள் கனவுகளை



அனுராக்

Sree
En
COIM



அக்ஷரா



## அன்புக்கு அடித்தளமாய்

குடியிருப்பதற்கான இடத்தைத் தேர்ந்தெடுக்கும்போது, உங்களுடைய எண்ணங்களும் விருப்பங்களும்தான் முக்கியம். அதனால்தான் ஒவ்வொரு விஷயத்திலும் நாங்கள் மிக அதிக அக்கறை காட்டுகிறோம். கட்டட மனை அமைந்துள்ள இடத்தைத் தேர்ந்தெடுப்பதிலிருந்து, உங்கள் இல்லம் உருவாவதற்குத் தேவையான ஒரு சிறு ஆணி கூட எப்படி இருக்க வேண்டும் என்பது வரை எல்லாவற்றிலுமே எங்கள் கவனம் முழுமையாக இருக்கும்.

இந்த வீட்டுத் திட்டம் மேட்டுப்பாளையம் சாலையில் அமைக்கப்படுகிறது. வாழ்க்கைக்கு மிக அத்தியாவசியமான பள்ளிகள், கல்லூரிகள், வங்கிகள், டிபார்ட்மெண்டல் ஸ்டோர்ஸ், மருத்துவமனைகள் எல்லாம் இந்தத் திட்டத்திற்கு மிக அருகிலேயே உள்ளன. இந்தத் திட்டம் மிக ரம்யமான சூழ்நிலையில் அமைக்கப்படுகிறது.

8.1 ஏக்கர் பரப்புள்ள இந்த இடத்தில் மொத்தம் 49 மாளிகை வீடுகள் (வில்லா) மட்டுமே

உடனே முடிவெடுங்கள்!

அத்துடன் உயர்ந்த தரத்திற்கான ஸ்ரீவத்
தாமதித்தால் இந்த வாய்ப்பு கிடைக்காது... இங்கே கட்ட
ஆர்க்கிடெக்ட் டூகன்

மேலும் விவரங்களுக்கு



ஸ்ரீவத்ஸா ரியல

உங்கள் நம்பிக்கை என்னும் அடித்தளம்

கோவை: 8/2, மேட்டுப்பாளையம் சாலை, கோயம்புத்தூர் 641 043,
பேக்ஸ்: 91-422-243 0899, E-mail: realestate@
சென்னை: 7, காமராஜ் பார்க் தெரு, இராயபுரம், சென்னை 600 013, இ
பேக்ஸ்: 91-44-2595 0055 / 2596 5032




ISO 9001: 2000 Certified

# நனவாக்கும் வீடுகள்





சைதன்யா



விஸ்வா

atsa
ave
TORE

# அமைந்திடும் இல்லங்கள்

கட்டப்படும். இவை அனைத்தும் தனித்தன்மையுடன் மிக அழகாக வடிவமைக்கப்பட்டு, நான்கு வகைகளில் கிடைக்கும்.

வகை A அனுராக் 2955 சதுர அடி வகை C சைதன்யா 2692 சதுர அடி
வகை B அக்ஷரா 2762 சதுர அடி வகை D விஸ்வா 2745 சதுர அடி

அழகான தோற்றம். கூடுதல் மதிப்பைக் கொண்ட, பயனுள்ள பல சிறப்பம்சங்கள், அத்துடன் உரிய கவனம் செலுத்தப்பட்ட வகையில் நான்கு நேர்த்தியான டிசைன்கள்.

கிளப் ஹவுஸ், நீச்சல் குளம், உடற்பயிற்சிக்கான ஜிம், கோயில், 30 அடி அகலம் உள்ள அருமையான சாலைகள், லேண்ட்ஸ்கேப்பிங் செய்யப்பட்ட அழகான தோட்டப் பகுதி, சுற்றிலும் பாதுகாப்பான காம்ப்பவுண்டு சுவர் என்றவாறு இன்னும் எத்தனையோ பல சிறப்புகள் இங்கே உண்டு...

ர முத்திரையும் இருக்கிறது... அதைவிட வேறு என்ன வேண்டும்!
டுவது 49 வீடுகள் மட்டுமே! உங்களுடைய இல்லத்தை இன்றே தேர்ந்தெடுங்கள்!
ங்கர் அண்ட் அசோசியேட்ஸ், கோயம்புத்தூர்

தொடர்பு கொள்ளுங்கள்:

## எஸ்டேட்ஸ் (பி) லிட்.

அதுவே எங்கள் கட்டடங்களுக்கு ஆதாரம்!

ந்தியா. போன்: 91-422-243 7422 / 244 1481 / 243 2184 / 243 2042
sreevatsa.com, Visit us at: www.sreevatsa.com
டியா. போன்: 91-44-2595 3149 / 2596 0270 / 2595 7953 / 2596 1029-31
2522 4087, Email: sreevatsa@vsnl.com

Anugrah Madison 3065 R

# அழகிய சுவர் அலங்காரம்



குழந்தைகள் பால்டின்களில் கவர் செய்திருக்கும் அலுமினியம் ஃபாயிலை அப்படியே வெட்டி எடுத்து எழுதாத பால் பாயிண்ட் போனாவால் ஏதாவதொரு டிசைனை வரையுங்கள். அழகிய எம்போஸ்ட் டிசைன் கிடைக்கும். அதன் மேல் பெயிண்ட் செய்து ஓரங்களில் சாட்டின் ரிப்பனை ஒட்டி அப்படியே தொங்க விடுங்கள். செலவில்லாத வால் ஹேங்கிங் ரெடி.

**- நஸிஹா ஹஃபீஸ்**

கடையோ விளம்பரம் செய்பவர்கள் தேர்வு செய்யும் மாடல்கள் அவரவர் ஊர்களுக்குத் தகுந்தபடி அமைய வேண்டுமாம்...

கோவைக்காரர்கள் தேர்வு செய்யும் மாடல்கள் ஒரு ரகம் என்றால் சென்னைக்காரர்களின் தேர்வு வேறு ரகம்..

"இன்றையக் காலகட்டத்தில் எந்தவித அபாயமும் இல்லாமல், நாலு பேருக்கு வாய்ப்புத் தேடித் தரும் தொழில் இது..." என்பது ருக்மணி பத்மநாபன் மற்றும் பிஜு ஜெயதேவன் ஆகியோரின் கருத்து.

**அடுத்து விளம்பர மாடல்கள் அணிந்து வரும் ஆடைகளில் அழகிய டிசைன்களை உருவாக்கும் "சுயதொழில் அதிபர்" திருமதி உமா.**

நகரில் பல இடங்களில் ஓங்குதாங்காக இருக்கும் பிரம்மாண்ட விளம்பர "ஹோர்டிங்ஸ்" பார்த்திருக்கிறோமே, அதில் பிரபல துணிக்கடைகளில் தோன்றும் பெண்களின் ஆடைகளை வடிவமைப்பவர் இவர்தான்... ஆடை வடிவமைப்பில் பல புதுமைகளைச் செய்து வரும் உமா, சுமார் 15 வருடங்களுக்கு முன்பு ஒரு சிறிய "பொட்டீக்" ஆகத்தான் துவங்கினாராம். கல்லூரியில் ஆடை வடிவமைப்பையே ஆர்வமாகப் படித்தவர், அப்போதே சுயமாகத்தான் வேலை செய்வது என்று தீர்மானித்துள்ளார்.

துணிகளில் வண்ணங்கள், டிசைன்கள் இவற்றுக்கான கற்பனைவளத்துக்கு வானமே எல்லையல்லவா...?

பொட்டீக் துவங்கி, தையல் யூனிட் ஆரம்பித்து, தானே டிசைன் செய்து பெரும் வரவேற்பைப் பெற்றுக் கொண்டிருந்த போது... திருமணம்...

"என் கணவரும், குறிப்பாக மாமியாரும் தந்த ஊக்கமும் உற்சாகமும்தான் இந்த அளவு என் முன்னேற்றத்துக்குக் காரணம்..." என்கிறார் உமா.

திரைப்பட இயக்குநர்களின் குடும்பத்தார் இவரிடம் ஆடைகள் வாங்கிச் செல்ல, அவற்றின் நேர்த்தி கண்டு, திரைப்படங்களிலும் காஸ்ட்யூம் டிசைன் செய்ய அழைப்பு வந்தது.

இன்று பெருமளவில் விளம்பரங்களில் பணியாற்றி வரும் உமாவிடம் சுமார் 12 பேருக்கு மேல் வேலை செய்து வருகின்றனர்.

இரண்டு டீம் எனப் பிரித்து, ஒரு டீம் முழுக்க விளம்பரம், திரைப்படம் இவற்றுக்கான ஆடைகளில் வேலை செய்கிறது.

மற்றோர் டீம், வழக்கமான வாடிக்கையாளர்களின் ஆடை டிசைனில் வேலை செய்து வருகிறது.

இவரது முன்னேற்றத்துக்கு முக்கியக் காரணமான இவரது மாமியார், திரைப்பட நடிகை சுகுமாரி அவர்கள்.

**- பத்மினி பட்டாபிராமன்**

## PRASHANTI (HOUSE OF SILK COTTON)

அங்கே ஒரு பட்டி மன்றம்!! அதுவும் முற்றிலும் வித்தியாசமான தலைப்பில்!!

**இன்றைய இளம் பெண்கள் உடுத்திக் கொள்ள மிகவும் ஏற்றவை**

**சல்வாரா? பட்டுப்புடவைகளா? அல்லது பிரசாந்தியின் சில்க் காட்டனா?**




நடுவர்களாக பொது வாழ்வில் சிறப்பு பெற்ற நான்கு பெண் மணிகள்... முதலில் வந்தது சுடிதார் அணி... எளிமையானது... உடுத்துவது எளிது... என்றெல்லாம் சொன்னார்கள்... ஆனாலும் சிறப்பாகச் சொல்லும்படி என்ன இருக்கிறது?... அடுத்து, பட்டுப்புடவை அணி அதன் அழகு மற்றும் மிடுக்கோடு... எவ்வளவு தான் பட்டுப்புடவையின் சிறப்பை சொன்னாலும் கூடவே அதன் விலையும், அதன் கனமும், வியர்வையால் ஏற்படும் அவஸ்தையும் கண்முன்னே தோன்றி பயமுறுத்தத் தானே செய்கிறது? இதற்கெல்லாம் சரியான பதிலடி கொடுக்க இதோ... புரட்சி படைக்கும் பிரசாந்தியின் சில்க் காட்டன் அணி!! அதுவும் பிரசாந்தியின் படைப்புகளான விவாகம், வைபோகம், நித்யம் கலெக்ஷனில் மூன்று இளம் பெண்கள்... இல்லை தேவதைகள்!! அணியின் அர்த்தமுள்ள வாதம்!! பிரசாந்தியின் சில்க்காட்டன்/ பாலிகாட்டன் புடவைகளின் தனிச்சிறப்பு... அதன் கண்ணைக்கவரும் வண்ணங்கள், பலப்பல ரகங்கள், மற்றும் டிசைன்கள்... பட்டுப்புடவையின் அதே கம்பீரம், நளினம், மிடுக்கு இவை அத்தனையும்... பருத்தியின் சங்கமத்தால் இந்த சில்க்காட்டன் / பாலி காட்டன் புடவைகளின் லைட் வெயிட், எத்தனை நேரம் வேண்டுமானாலும் வியர்வைக் கசகசப்பின்றி உடுத்திக் கொள்ள... சுலபமாக வாஷ் செய்து மெயின்டெயின் பண்ணிக் கொள்வதால் நீண்ட நாள் இதன் இனிய அனுபவம்... வேறென்ன வேண்டும்? அரங்கமே கரவொலியில் அதிர்ந்தது... தெரிந்த தீர்ப்பு தான் என்றாலும் எல்லோர் கவனமும் நடுவர்களை நோக்கி... ஆ!! இதென்ன? நடுவர்களைக் காணோம்... விழா அமைப்பாளர் அங்கே தோன்றி... மன்னிக்கவும் நடுவர்கள், பரிசுக் கோப்பை பிரசாந்தி அணிக்கே என்று சொல்லிவிட்டு... பிரசாந்திக்கு சென்றுவிட்டார்கள்!!

**சில்க்காட்டன் என்றாலே பிரசாந்தி தான்...**

**PRASHANTI**, No. 16, 6th Cross St, C.I.T. Colony, (Behind Chettiar Hall), Mylapore, Chennai - 4. Ph: 24991850 / 24997636. Sunday Holiday

**PRASHANTI'S** Paripurna, No. 52, 4th Main, 17th Cross, Malleswaram, Bangalore. Ph: 23341632. Tuesday Holiday

E-mail: prashanti_sarees@yahoo.com. * Major Credit cards Accepted

## ஆடி ஸ்பெஷல் ரயில் சுற்றுலா

**டெல்லி - காசி** 18-07-05, 25-07-05 மற்றும் 18-08-05 முதல் 13 நாட்கள். சென்னை - டெல்லி - ஆக்ரா - மதுரா - ஹரித்துவார் - ரிஷிகேஷ் - காசி - கயா - புத்தகயா - அலகாபாத் - திரிவேணி - சென்னை ரூ.5290/- இதில் அமிர்தசரஸ் - வாஹா - ஜெய்ப்பூர் சேர்த்து 15 நாட்கள் நபர் 1க்கு ரூ.6290/-

**ALL INDIA TOUR** 18-07-05, 18-08-05 மற்றும் 18-09-05 முதல் 18 நாட்கள். சென்னை - மும்பை - ஜெய்ப்பூர் - ஆக்ரா - மதுரா - டெல்லி - ஹரித்துவார் - ரிஷிகேஷ் - காசி - அலகாபாத் (திரிவேணி) - காசி - கயா - புத்தகயா - கொல்கத்தா - சென்னை நபர் 1க்கு ரூ. 7,290/-

**பத்ரிநாத்-கேதார்-காசி** 18-07-05 மற்றும் 18-08-05 முதல் 17 நாட்கள். சென்னை - ஆக்ரா - மதுரா - பிருந்தாவன் - டெல்லி - ஹரித்துவார் - ரிஷிகேஷ் - தேவபிரயாக் - ருத்ரபிரயாக் - கௌரிகுண்டு - கேதார்நாத் - ஜோதிமத் - பத்ரிநாத் - அலகாபாத் (திரிவேணி) - காசி - கயா - புத்தகயா - சென்னை நபர் 1க்கு 7,990/-

**பத்ரிநாத் - கேதார்நாத்** 19-07-05 மற்றும் 19-08-05 முதல் 13 நாட்கள். சென்னை - டெல்லி - ஹரித்துவார் - ரிஷிகேஷ் - தேவபிரயாக் - ருத்ரபிரயாக் - கௌரிகுண்டு - கேதார்நாத் - ஜோதிமத் - பத்ரிநாத் - சென்னை ரூ. 5,490/-

**கல்கத்தா - மும்பை** 18-07-05 முதல் 13 நாட்கள். சென்னை - கல்கத்தா - பூரி - புவனேஷ்வர் - கோனார்க் - மும்பை - ஷீரடி - நாசிக் - பஞ்சவடி - சோலாபூர் - பண்டரிபுரம் - மந்திராலயம் - சென்னை ரூ. 4,990/-

**10 நாள் காசி** பிரதிமாதம் 25ம் தேதி புறப்படுகிறது, சென்னை - பூரி - புவனேஷ்வர் - கோனார்க் - கயா - புத்தகயா - காசி - அலகாபாத் - சென்னை ரூ. 3,990/-

**கங்கோத்ரி - யமுனோத்திரி - பத்ரிநாத் - கேதார்நாத்** 18-07-05 முதல் 15 நாட்கள் நபர் 1க்கு ரூ. 6,990/-

**அமர்நாத் யாத்திரை** 20-07-2005 முதல் 17 நாட்கள். டெல்லி - ஜம்மு - நாக்ரோடா - பகல்காம் - சேஷநாக் - பஞ்சதரணி - அமர்நாத் - ஸ்ரீநகர் - கட்ரா - வைஷ்ணவதேவி - அமிர்தசரஸ் - குருசேத்ரம் - டெல்லி - சென்னை நபர் 1க்கு ரூ.6,990/-

இதை தவிர பல யாத்திரை மற்றும் சுற்றுலாக்கள் உள்ளன. முழுவிவரங்களுக்கு தொடர்பு கொள்ளவும்.

**ஸ்ரீமுருகன் டிராவல் ஏஜென்ஸி** 10, வடக்கு ஆவணி மூல வீதி, மதுரை-1.

போன் : 2622655, 2622561, 2626481, 2632766 செல் 98421-62416, 98421-62265

**கிளைகள்** 11-C, ஆண்டவர் கோவில் தெரு, வடபழநி, சென்னை-26. போன் : 24730450, 23725133

198-H, சின்னம்மாள் குறுக்குத்தெரு, N.S.R. ரோடு, சாய்பாபா காலனி, கோவை-38.

போன் :0422-2437578 செல் :98428-62265, 98421-62265

5A, சின்னகடை வீதி திருச்சி-2. Ph : 0431-2716929, 98421-62410

எமது கிளைகள் இவை தவிர வேறெங்கும் இல்லை

## உங்களுடன் ஒரு கலந்துரையாடல்



**எஸ்.** *சரோஜினி, பெங்களூர்.*

*ஆன்மிகப் பிரவசனத் துவக்கத்தில் 'ஆதௌ கீர்த்தனாம்பரத்திலே...'' என்றும் ''பல பீமாபலபீமா'' என்றும் கூறுகிறார்களே, இவற்றின் பொருள் என்ன?*

ஹரி கதையில் முன்னதாகப் பாடப்படும் 'பஞ்சபதியில்' ஒன்றுதான் 'பலபீமா' வரிகள். முதன் முதலில் தஞ்சையை ஆள மராட்டிய மன்னர்கள் வந்த போது, தமது மண்ணின் தனிச் சிறப்பான கீர்த்தன்காரர்களை தஞ்சைக்கு வரவழைத்தனர். அதில் முதலில் மஹாராஷ்டிரத்திலிருந்து வந்தவர் ராமச்சந்திரபாவா (மோர்கார் கிராமத்தைச் சேர்ந்தவர்) அவருடைய 'கீர்த்தன்' முழுவதும் மராட்டியிலிருந்தது. பின்னால் அவரது சிஷ்ய பரம்பரையில் பட்டி கிருஷ்ணபாகவதர் தஞ்சையில் பேசப்பட்ட தெலுங்கு, தமிழ், கன்னடம், மராட்டி எல்லாவற்றையும் கலந்த ஜனரஞ்சகமான ஹரிகதையை வழங்கினார். இன்று வரை 'மோர்கார்பாவா' பாடிய மராட்டிய பஞ்சபதிகளுடன் தான் முறையான ஹரி கதை தொடங்கும். 'திமிகிட திமிகிட' என்று தொடங்கி 'பலபீமா' என இறைவழிபாட்டுடன் ஒலிப்பது ஹரிகதை! ஹரி - விஷ்ணு, கதா - கதை, காலட்சேபம் - பொழுதுபோக்குவது!

# அன்பு வட்டம்

*கிரிஜா, மாங்காடு.*

*முதல் புத்தகத்தில் விளம்பரம் அதிகம் இருக்கிறதே! படிக்க எடுத்தால் இது மிகவும் எரிச்சலைத் தருகிறது. குறைக்கக் கூடாதா?*

விளம்பரங்கள் இல்லாமல் ஒரு பத்திரிகை நடத்துவது என்பது யாராலும் இயலாதது. முன்பெல்லாம் விளம்பரங்கள் மொத்த பக்கங்களில் பாதியளவு இருந்திருக்கிறது. பழைய 'மங்கையர் மலரை'ப் பார்த்தால் உங்களுக்கே புரியும். இந்த ஜூலை மாத இதழைத் தயாரிக்க நாங்கள் ஜூன் 20-ம் தேதியே எங்களது பணிகளைத் தொடங்கி விட்டோம். விளம்பரங்கள் கடைசி நிமிடங்களில் கிடைப்பதால் புத்தகத்தின் ஆரம்பப் பக்கங்களில் விளம்பரங்களைப் போடுவது தவிர்க்க முடியாததாகிறது. எரிச்சல் குறைந்திருக்குமே!

*ச.ஆ. கேசவன், இனாம்மணியாச்சி.*

*ஆணாய்ப் பிறந்து விட்ட குற்றத்திற்காக 'அன்பு வட்ட'த்தில் கேள்வி மூலம் கலந்துரையாடும் பாக்கியம் எனக்குக் கிடையாதா?*

அன்பு வட்டத்தில் ஆணென்றும் பெண்ணென்றும் பாகுபாடு கிடையாது. கேள்வி சுவையானதாக இருந்தால் பதில் சொல்லும் ஆர்வம் முந்திக் கொள்கிறது. உடனே தேர்ந்தெடுத்து பதிலும் தந்து விடுவேன். அதன் பிறகுதான் யார் என்ன முகவரி என்பதை எனது துணை ஆசிரியர் குறித்துக் கொள்வார். உங்களது கேள்விகள் தொடரட்டும்!




*வசந்தி கேசவன், ஹோசூர்.*

*மாணவ, மாணவிகள் வெற்றிலை, பாக்கு போட்டுக் கொண்டால் படிப்பு சரியாக வராது என்று சொல்கிறார்களே? அது ஏன்? வெற்றிலைக்கும், படிப்புக்கும் என்ன சம்பந்தம் உள்ளது? அது குழந்தைகளுக்காகச் சொல்லும் பொய்க் காரணமா? இல்லை உண்மையிலேயே தொடர்பு ஏதேனும் உண்டா?*

**'இளமையில் கல்' என்று கேள்விப்பட்டிருப்பீர்கள். பிழையற ஒரு மொழியைப் பேசவும், பயிலவும் முயலும் போது நாக்கு நன்றாக வளைந்து நெளிந்து கொடுக்கும் பருவம் குழந்தைப் பருவம். வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு (மற்றும் வாசனைப் பொருட்களோடு) உட்கொண்டால் நாக்கு தடித்து விடும். நாம் நினைக்கிற மாதிரி வளைந்து நெளியாது. சொல் சுத்தமாக வராது. நமது முன்னோர்கள் ஒன்றைச் சொல்லி ஒன்றைப் புரியவைத்திருப்பதை இன்று நாம் மறந்து விட்டோம்.**


• கதாகாலட்சேபம்

*ஏ. ராணி, மதுரை.*

*என் நெருங்கிய உறவினர் ஒருவர் சிறு வயதில் இருந்தே தைரியமாக வளர்ந்தால்தான் உண்டு. இடையே யாராலும் தைரியசாலியாக மாற முடியாது என்கிறார். இதைக் கேட்டதில் இருந்து எனக்குள் இருந்த கொஞ்ச நம்பிக்கையும் போய் விட்டது. எனக்குத் திருமண வயதும் நெருங்கி விட்டது. இது குறித்து மனம் விட்டுப் பேச நினைக்கும்போதெல்லாம் மற்றவர்கள் என்னைப் பற்றி என்ன நினைப்பார்களோ என்ற எண்ணமே எழுகிறது. அதனால் அம்மா உரிமையுடன் உங்களிடம் கேட்கிறேன். எனக்கு பதில் கூறுங்கள்.*

**பொத்திப் பொத்தி வளர்த்ததில் ஏதும் குறையில்லை. கூச்ச சுபாவம் இயற்கையாக இருந்தாலும் பரவாயில்லை. மனதுக்குள் நீங்கள் எப்படியிருக்க வேண்டும் என்று ஓர் இலக்கினை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். பிறரைப் பற்றிக் கவலைப்படாமல், இலக்கை நோக்கி உங்களது எண்ணம், செயல், சொல் எல்லாவற்றையும் ஆக்கப்பூர்வமாக திருப்புங்கள். செயலாக்குங்கள். உங்களுக்குள்ளே இருக்கும் ஒரு ஜான்ஸி ராணி, ராணி மங்கம்மாள், கல்பனா சாவ்லா, மதர் தெரஸா வெளிப்படுவதை உணர்வீர்கள். பெயரில் மட்டுமல்ல, உலகாளும் உன்னதமான ராணியாவீர்கள்! வாழ்த்துகள்!**


• அன்பு வட்ட உறுப்பினர் அட்டை

*அல்லி, பண்ருட்டி.*

*அன்பு வட்ட அட்டையைப் பெற என்ன செய்ய வேண்டும்?*

**அன்பு வட்டம் என்பது மங்கையர் மலர் வாசகிகளின் உறுப்பினர் அட்டை. எங்கு மங்கையர் மலர் விழா நடந்தாலும் அவர்கள் கலந்து கொள்ளலாம். உதவி செய்யலாம், கருத்துகள் கூறலாம். நீங்கள் சந்தாதாரராக**

**ரேவதி சங்கரன்**

* இந்த மாதம் அன்பு வட்டம்
சிறந்த கேள்விக்கு நர்மதா பதிப்பகம், சென்னை - 17
வழங்கும் ரூ. 250/- மதிப்புள்ள புத்தகங்களைப்
பரிசாகப் பெறுபவர் :
**ஏ. ராணி, மதுரை.**

இருப்பின் மற்றுமொரு சகோதரிக்கு (ஓராண்டு) சந்தா கட்டினால் உங்களுக்கும் அந்தச் சகோதரிக்கும் அன்பு வட்டம் அட்டை எண்ணுடன் தரப்படும். மங்கையர் மலரோடு நீங்களும் பயன்பெறலாம்.

*குமாரி சாந்தாராம், சென்னை - 4.*
*மனம் வருந்தும் போது என்ன செய்வீர்கள்? எப்படிப் புத்துணர்ச்சி பெறுவீர்கள்?*

'துன்பம் நேர்கையில் யாழ் எடுத்து நீ இன்பம் சேர்க்க மாட்டாயா' என்று பாரதிதாசன் பாடியதும் 'துன்பம் வரும் போது நகைத்து விடு' என்பதும் நடைமுறைக்குச் சரிவருமா என்பது தெரியாது. மனம் வருந்தும் போது நான் வணங்கும் அம்பிகையிடம் எனக்கு மட்டும் ஏன் இப்படி என்று கொஞ்சம் புலம்பல் - பிறகு 'பாரம் உனக்கு' என்று அவள் மடியில் போட்டு விட்டு உற்சாகத்துடன் துள்ளிக் குதித்தபடி அடுத்த வேலைக்கு ஓடி விடுவேன். எல்லாவற்றையும் புன்சிரிப்புடன் ஏற்றுக் கொள்ளும் பக்குவம் வரவில்லையே!

*ச. நர்மதா, திண்டுக்கல்.*
*கடவுளைப் பார்ப்பதற்கும் கட்டணம், அதிலும் உயர்ந்தவர், தாழ்ந்தவர் பாகுபாடு. பூசாரிக்கு கொடுக்கும் மதிப்பு, கடவுளுக்கு இல்லை, காசு போடுவதிலும் கௌரவம், சமயம் சார்ந்தோருக்கு சிறப்பு உபசரிப்பு. இந்த நிலை எல்லாக் கோவில்களிலும் பரவி விட்டது. இதை மாற்ற மங்கையரால் முடியாதா? ஏன், யாரும் இதைப் பொருட்படுத்தவில்லை?*

உண்மையிலேயே இது மனவருத்தத்தைத் தருவதாகவே இருக்கிறது. இதை மங்கையரால் மாற்ற முடியும்.

நான் கடைப்பிடிப்பது இதுதான் :

விழா நாட்கள் இல்லாத சாதாரண நாட்களில் கோவிலுக்குச் செல்வதனால், எண்ணெய் விளக்கின் ஒளியில் எளிய அலங்காரத்துடன் விளங்கும் இறைவன் இறைவியை மனம் நிறையத் தரிசிக்க முடிகிறது. சுவாமி மீது சாத்திய மலர் மாலையோ, பூச்சரமோ தர வேண்டும் என்று எதிர்பார்ப்பதில்லை. இதற்கெல்லாம் மேலாக நாம் - இறைவன் என்ற எண்ணம் மட்டுமே மேலோங்கி இருந்தால் பூசாரியோ காசு போடுவதோ கட்டணமோ மனதில் பதியாது. இறைத்தன்மையில் நம்மைக் கரைத்துக் கொள்ளத்தான் செல்கிறோம் - அதில் எளிமை இருந்தால் ஏற்றம் அடையலாம்.

*கே. துரைசாமி, சென்னை - 92.*
*'உதானம்' பொருள் அறியத் தமிழ் அகராதியைப் பார்க்குங்கால் கண்மடல், கொப்பூழ், நாபியில் நிற்கும் வாயு எனக் கொடுக்கப்பட்டுள்ளது. விளக்கம் தேவை.*

உதானம் எனும் சொல்லின் விளக்கத்தை நானும் அபிதான சிந்தாமணியில் கண்டேன். நாபியிலிருக்கும் அந்தக் காற்று 'உதானம்' உடலை விட்டுப் போன பின் உதவக்கூடிய தானம் உடல் தானம் - என்னும் பொருள்படும்படியாக உடல் தானத்தை உதானம் என்று எளிதாக்கினேன். மக்களுக்குப் போய்ச் சேரும் எதுவும் முகம் சுளிக்க வைப்பதாக இருக்கக்கூடாதல்லவா? அதனால்தான் உதானம்! சரிதானே?



ஸ்ரீ மஹா ப்ரத்யங்கிரா தேவி, ஸ்ரீ மந்திர வாராஹி
ஸ்ரீ நீல சரஸ்வதி
ஸ்ரீ விரஜாகால பைரவர் சந்நிதிகள்

**Management : SRI PRATHIYANGIRA ASHRAM TRUST**

அபராஜிதபுரி, சோழங்கநல்லூர், சென்னை-600119
போன் : 2450 1404



# ஸ்ரீ மஹா ப்ரத்யங்கிரா தேவிக்கு 108 கலச பூஜை, ஏக தின லக்ஷார்ச்சனை, முட்டு இறக்கல் பூஜை

## பூஜை நாள் : 31.7.2005, ஞாயிறு காலை 7.30 மணி முதல் மதியம் 1 மணி வரை

பக்தர்களின் கஷ்டங்களையும், தடைகளையும், ஜென்மாந்திர பாபங்களையும் சாபங்களையும் விலக்கி, வேண்டும் வரங்களை மிகத் துரிதமாக வழங்கி அருள்புரிபவள் ஸ்ரீ மஹா ப்ரத்யங்கிரா தேவி. கலிகாலமான இன்று அன்றாட வாழ்வில் அனுபவித்து வரும் கஷ்டங்களை நிவர்த்தி செய்வதற்காக, லோக க்ஷேமார்த்தமாக,

**ஸ்ரீ ப்ரத்யங்கிரா ஸ்வாமிகள் தலைமையில்,**

**காலை 7.30 மணிக்கு ஸ்ரீ மஹாப்ரத்யங்கிரா தேவிக்கு 108 கலச பூஜையும்,**
**காலை 9.30 மணிக்கு ஏக தின லக்ஷார்ச்சனையும்,**
**பகல் 12.30 மணிக்கு முட்டு இறக்கல் பூஜையும் நிறைவேற உள்ளது.**
(சத்ரு முட்டு, வித்யா முட்டு, தொழில் முட்டு, கிரக முட்டு, மாங்கல்ய முட்டு, வியாபார முட்டு, பூத ப்ரேத முட்டு, குலதேவதா முட்டு, பித்ரு முட்டு, சர்ப்ப முட்டு என்ற பல வகை தடைகளை விலக்குவதற்காக)

இவ்வேளையில் பக்தர்கள் குடும்பத்துடன் வந்து அம்பாளின் படிக்கட்டுகளில் முட்டு இறக்கி தடைகளை விலக்கி, கல்யாணம், உத்தியோகம், புத்திரப்பேறு, தொழில் அபிவிருத்தி, பூதப்ரேத உபத்திரவம், குலதெய்வம் மற்றும் பித்ரு சாபம், சர்ப்பதோஷம் இவைகளை நிவர்த்தி செய்து மங்களம் பெறலாம். இவ்வேளையில் பால் பாயாசம், வெல்லப் பாயாசம், வெள்ளை நைவேத்தியம், அப்பம், திருமதுரம் போன்ற பிரசாதங்கள் தேவிக்கு சமர்ப்பிக்கப் பெற்று பக்தர்களுக்கு வழங்கப்பெறும்.

சாந்நித்யமான இம் மஹா பூஜைகளை நடத்தலாம் என்று **ஸ்ரீ மஹா ப்ரத்யங்கிரா தேவி** பிரசன்ன வாக்கு வழங்கியிருப்பதால் இம்மஹா பூஜைகளில் உபயம் செலுத்தி கலந்து கொள்வது என்பது தெய்வம் நினைத்தால் மட்டுமே நடக்கக்கூடியது என்பதே உண்மை. ஸ்ரீ மஹா ப்ரத்யங்கிரா தேவியை ப்ரீதி செய்து காலக் கொடுமைகளில் இருந்து விலகி சுகம் பெற இந்தப் பூஜைகளில் கலந்து கொள்ளலாம்.

தாங்களுக்கு உகந்த உபயத் தொகையுடன் தாங்களது பெயர், நட்சத்திரம், கோத்திரம், விலாசம், வேண்டும் கோரிக்கை,சங்கட நிவாரணம் முதலிய விவரங்களை ஒரு தனித் தாளில் எழுதி, ஏகதின லக்ஷார்ச்சனைக்கு ரூ.300ம், முட்டு இறக்கல் பூஜைக்கு ரூ.1100ம், கலச பூஜைக்கு ரூ.1000ம் டிராப்டாகவோ / காசோலையாகவோ **SRI PRATHIYANGIRA ASRAM TRUST** என்ற பெயரில் எடுத்து மேற்கண்ட முகவரிக்கு நேரிலோ அல்லது தபாலிலோ அனுப்பும்படி வேண்டுகிறோம். நேரில் வந்து சங்கல்பம் செய்ய இயலாதவர்களுக்கு ஆஸ்ரமம் சார்பில் சங்கல்பம் செய்து ஸ்ரீ மஹா ப்ரத்யங்கிரா பிரசாதமும் ரக்ஷையும் தபாலில் அனுப்பி வைக்கப்பெறும்.

சுப மஸ்து

**இங்கு உலகிலேயே மிகப் பிரம்மாண்டமாக வரவிருக்கும்**
## ஸ்ரீ ஆகாச சரபேஸ்பவரர் சந்நிதி
**நிர்மாணப் பணிக்கு, நன்கொடையாளர்கள் வரவேற்கப்படுகின்றார்கள்**

4

# தேன் நிலவு

திடீரென்று பயங்கரமான சப்தத்துடன் மின்னல் பளீரென்று வெடித்துச் சிதறியது.

பயங்கரமான



புழுதியைக் கிளப்பிக் கொண்டு காற்று எழுந்து இருவரின் கண்களிலும் அடித்துக் கசக்கியது.

என்ன இது? இப்படி ஆரம்பித்திருக்கிறதே?

எப்போது ஆகாயத்தின் ஒரு பக்கத்தில் இருட்டிக் கொண்டது. எப்போது அந்த இருளின் ஒரு மூலையிலிருந்த ஒவ்வொரு கணமும் மின்னல் சிதறியடித்தது. எப்போது அந்த ஆகாயத்தின் அடியில் பட்சிகளின் கூட்டம் விரைந்தோடிக் கொண்டிருந்தது... உணரவே இல்லை அதீந்திரனும், பூர்ணிமாவும்.

நிலப்பகுதியையும், குளத்தங்கரையையும் திரும்பிப் பார்த்தார்கள். குளத்தின் கரையில் ஜனங்களே இல்லை. மைதானத்தின் அற்பப் புல்லை ஆகாரமாக்கிக் கொண்டிருந்த பகக்கள், முகத்தை கீழ்ப்பக்கமாக

சாய்த்துக் கொண்டு ஓட ஆரம்பித்துக் கொண்டிருந்தன.

பார்த்துக் கொண்டிருக்கும்போதே, புழுதி முகத்தில் வாரியடித்து கண்ணை மறைத்தது. புயல் காற்று எங்கும், எல்லாத் திசைகளிலும் ஆரவாரமாக, பயங்கரமாக எழுந்தது. சுவரை நடுங்கும்படியாகச் செய்து, மரத்தின் கிளையை ஒடித்துப் போட்டது. கண்ணை மறைத்துக் கொண்டு, கண்டபடி சிதிலமடைந்து கிடந்த படி களைத் தாண்டி ஓடி வந்தது.

பயந்து போன இரண்டு ஜீவன்களும் தடுமாறி, திகைத்து, தவித்து வீட்டிற்குள் நுழைந்து பூர்ணிமாவின் அறைக்குள் அடைக்கலமாவதற்கும், மழை பலமாக, பயங்கரமாக, அட்டகாசமாக ஆரம்பிப்பதற்கும் சரியாக இருந்தது.

பயங்கரமான, கோரமான மழை. பெய்யவில்லை. கொட்டியது. .

சித்திரை மாதத்தின் கடைப் பகுதி. கால பைசாகி (சித்திரை மாதத்தை வங்கா

வங்க மூலக்கதை :
ஆஷா பூர்ணாதேவி

தமிழாக்கம் :
புவனா நடராஜன்




**ஆப்பிளையும், கேரட்டையும் குளிர்சாதனப் பெட்டியில் ஒரே இடத்தில் வைக்கக் கூடாது. ஏனென்றால், ஆப்பிளிலிருந்து வெளியாகும் ஒரு வகை வாயு கேரட்டை கசக்கச் செய்து விடும்.**

**- நஸிஹா ஹஃபீஸ்**

ளத்தில் "பைசாக்" என்று சொல்வார்கள். ஏப்ரல் மாதத்துக் கடைசியில் திடீரென்று வானம் கறுத்துக் கொண்டு காற்றும், மழையுமாக வந்து கொட்டித் தீர்த்து விடும். இதற்கு 'கால பைசாகி' என்று பெயர்)யின் பயங்கரமான, உன்மத்தமான நாட்டியம் ஆரம்பமாகி விட்டது.

பிரளய காலத்தின் உருவத்தை மழை எடுத்துக் கொண்டிருந்ததோ? சீறிக் கொண்டு, ரௌத்ர ரூபத்துடன், கால பைசாகியின் உன்மத்தமான நாட்டியம், மகிஷமர்த்தினியின் உக்ரத்துடன் அதிகரித்துக் கொண்டே போயிற்று.

இருள் சூழ்ந்த அந்த அறையின் நடுவில் சிலைகள் போல இரக்கமில்லாத விதியின் இரண்டு பொம்மைகள் நின்று கொண்டிருந்தன. உடம்பிலிருந்து மழை ஜலம் உருண்டு, திரண்டு ஆடையை நனைத்துக் கொண்டு பூமியை நனைத்தது. இதயத்துக்குள் குளிரின் நடுக்கம்... குளிரின் நடுக்கம் மட்டும்தானா?

கதவை யாரோ இடித்தார்கள்... "பூர்ணிமா! பூர்ணிமா! பூர்ணிமா!"

கதவுக்கருகில் நின்று கொண்டு தவிப்பு நிறைந்த குரலில் கூப்பிட்டுக் கொண்டிருந்தார் சிவசங்கர்.

பூர்ணிமாவால் குரலெடுத்துப் பேச முடியவில்லை. தொண்டையிலிருந்து வார்த்தை வர மறுத்தது.

அதீந்திரனோ, ஒரேயடியாகப் பேசாமல் இருந்தான். "பண்டிட் அய்யா! நான் உங்களைப் பார்க்க வந்திருந்தேன்... புயலில் மாட்டிக் கொண்டு விட்டேன்..." என்று உரக்கக் குரல்கொடுத்திருக்கலாம்!

ஆனால் அப்படிச் செய்ய முடியுமா?

மூடின கதவுக்குப் பின்னாலிருந்து, நாலு பக்கமும் மூடியிருந்த அறைகுள்ளிருந்து சகஜமாக வெளிப்பட்டு வர யாரால் முடியும்? அத்தனை சுலபமான வேலையா அது?

"பூர்ணிமா! நீ உள்ளே இருக்கியா அம்மா?" என்று சிவசங்கரன் கேட்க, எப்படியோ குரலை வரவழைத்து, "இருக்கேன் அப்பா" என்று பூர்ணிமா கூறினாள்.

'யாருடைய குரல் இது? பூர்ணிமாவின் குரலா? ஏன் இப்படி இருக்கிறது? குரலில் ஏன் இந்த நடுக்கம்? பயம் தெரிகிறதே.'

பூர்ணிமாவின் குரல் எப்படி சாதாரணமாக, அமைதியாக இருக்க முடியும்? நினைத்துப் பார்த்தார் சிவசங்கர். வெளியில் காலபைசாகியின் அட்டகாசம் பூமியையே நடுங்க வைத்துக் கொண்டிருக்கிறதே...

"இருக்கட்டும்... இருக்கட்டும்... கதவு திறக்கணுமின்னு அவசியமில்லை. அம்மா..." அன்பும், பாசமும் நிறைந்த குரல் அபயம் கொடுத்தது. கதவைத் திறந்தால், திறந்த வராந்தாவிலிருந்து சீறி அடிக்கும் மழை மறுபடியும் அவளை நனைத்து விடக்கூடும்... "மழை பெய்யறதே... நீ எங்க இருக்கியோன்னு கவலையா இருந்ததம்மா..." என்றார்.

இதற்குள் உக்ரமான மழையில் நனைந்தே போய் விட்டார் சிவசங்கர். மேலே ஒன்றும் பேசாமல் வேகமாகத் திரும்பிப் போனார்.

ஆனால், அன்றைக்கு ஏன் அத்தனை ஜலமும் ஆகாயத்தில் இருந்தது? இதற்கு முன்னால் இதுபோன்ற பயங்கரமான புயல், மழைய எப்போதாவது வந்திருக்கிறதா என்ன? பிறகு?

ஒருவேளை வந்திருக்கலாம்.

இயற்கையின் விபரீத விளையாட்டுக்கு எல்லையே இல்லையே.

இரவிலும் புயல், மழை பெருகி, ஓடை வெள்ளம் கரை புரண்டு ஓடியது.

இன்றைக்கும், இத்தனை வருடங்களுக்குப் பிறகும் அன்றைய தினத்துப் புயல மழையைப் பற்றி மக்கள் பேசிக் கொண்டிருக்கிறார்களே.

அன்று பூர்ணிமாவின் கிராமம் வெள்ளத்தில் மூழ்கிப் போகவில்லை.

பக்கத்துக் கிராமங்களிலிருந்து கூட்டம் கூட்டமாக அடைக்கலம் தேடி பூர்ணிமா இருந்த கிராமத்துக்கு வந்து சேர்ந்தார்கள். உடைமைப் பொருள்களை எல்லாம்

இழந்து வந்து நின்றார்கள்.

ஆனால் பூர்ணிமாவின் இழப்பு என்ன, அவர்கள் இழப்பை விட குறைவா என்ன?

நனைந்த பைஜாமா சட்டை எப்போது காய்ந்து போயிற்று? எப்போது எந்த நிமிடம் இரண்டு உடல்களும் அருகே வந்து சேர்ந்தன. எப்போது இரண்டு ஜீவன்களும் ஒன்று கலந்தன.... பூர்ணிமா வுக்கு, நினைத்துப் பார்க்கப் பார்க்கப் புரியவேயில்லை.

நினைவு, அறிவு, விவேகம் என்று ஒன்று இருந்ததா அன்று பூர்ணிமாவுக்கு, இதுதான் விதியின் சதியா?

மழையின் உக்கிரம், அர்த்தராத்திரிக் குப் பிறகு குறைந்தது. மறுபடியும் வந்து கூப்பிட்டார் சிவசங்கர். "பூர்ணிமா! முழித்துக் கொண்டிருக்கிறாயா? தூங்கிப் போய் விட்டாயா?"

"பூர்ணிமா! பூர்ணிமா!"

இல்லை. இந்த முறை பூர்ணிமாவால் பதில் சொல்ல முடியாது.

பதில் குரல்கொடுக்க பூர்ணிமாவிடம் சக்தியில்லை. தெம்பில்லை.

தோட்டத்துப் பக்கத்து ஜன்னல் கதவைத் திறந்து விட்டு, அதன் கம்பியை அழுத்திப் பிடித்தபடி, கற்சிலை போல நின்று கொண்டிருந்தாள் பூர்ணிமா.

இன்னமும் மழை நிற்கவில்லை. தூறிக் கொண்டிருந்தது. சிறிது காற்று அடித்த தில், திரும்பவும், சாரலில் தலை முடி, முகம், மார்பின் மீதிருந்த புடைவை எல்லாம் நனைந்து போயிற்று.

"பூர்ணிமா! பூர்ணிமா!... நீ ஒன்றுமே சாப்பிடவில்லையே அம்மா?"

சிவசங்கரின் குரலில் மிகுந்த கவலை இருந்தது.

தெய்வம் என்று ஒன்று இருக்கிறதா?

இருந்தால் பூர்ணிமாவின் எல்லா நினைவுகளையும் மறக்கடித்து விடக் கூடாதா?

ஏன், மரணம் இன்னும் அவளைத் தழுவவில்லை?

அப்பாவின் முன்னால் வந்து அவரைப் பார்க்க முடியாமலேயே போய் விடக்கூடாதா?

"பூர்ணிமா! பூர்ணிமா! சிவசங்கரின் குரலில் கவலை, தவிப்பு, பயந்து போய் விட்டிருந்தார். பூர்ணிமா குழந்தை, பெண். இந்தப் பயங்கரமான இருள் சூழ்ந்த இரவில் தனியாக இருந்திருக்கிறாள். இடி இடித்த போது பயந்து போய் மயக்கம் போடவில்லையே.

அந்தத் தனிமையான, தவிப்பான நேரத்தில், இறந்து போன மனைவியின் நினைவு வந்தது சிவசங்கருக்கு. ஆகா! தாயார் இருந்திருந்தால், இந்த மாதிரி பயங்கரமான இருளில், புயல் அடித்த போது தனியாக விட்டிருப்பாளா?

சிறு வயதிலிருந்து பூர்ணிமாவை கவ னித்து வரும் தாதிப் பெண் காந்திமதியும் இந்தச் சமயத்தில் இல்லை. இதுவும் விதி யின் விளையாட்டுத்தானே.

என்ன கஷ்டகாலம் இது?

கதவு மறுபடியும் மறுபடியும் தட்டப் பட்டது.

"பூர்ணிமா! பூர்ணிமா!"

ஓடி வந்து கதவைத் திறந்து அப்பா வின் பாதங்களில் விழுந்து விடக்கூடாதா? முடியும். அப்பாவின் ஒவ்வொரு குரலுக் கும் உடனே மனது துடித்தது. ஆனால் தேகம் ஒத்துழைத்ததா? கல்லைப் போல கடினமாக இருந்தால்?

படார் என்ற சப்தம் கேட்டது.

மிகுந்த வேகத்துடன் தாழ்ப்பாளைத் தூக்கி விட்டு மூடியிருந்த கதவைப் பலத் துடன் திறந்து விட்டார் சிவசங்கர்! பிறகு அறைக்குள் வேகமாக நுழைந்து கையி லிருந்த ஹரிக்கேனைத் தூக்கிப் பார்த்தார்.

(நிலவு வளரும்)



முறுக்கு மாவுடன் 1 பிடி வேர்க் கடலையை பொடி செய்து சேர்த்துக் கொண்டால் முறுக்கு கரகரப்பாக, மேலும் சுவையுடன் இருக்கும்.

- சு. கண்ணகி

# மாணவர்களின் ஞாபகசக்தி குறைவா?



இந்த காலத்துல நல்ல படிப்பு இருந்தாதான் நல்ல உத்தியோகத்துக்கு போக முடியும். இதை என் பிள்ளைக்கு எத்தனையோ தடவை எடுத்துச் சொல்லியாச்சு. அவனுந்தான் காலைல ட்யூஷனுக்கு போறான். சாயங்காலம் வரையிலும் படிக்கிறான். நிறையவே படிக்கிறான். ஆனா மார்க்தான் வரமாட்டேங்குது. என்னான்னே தெரியலம்மா? பரீட்சைக்கு போனா எல்லாமே மறந்து போறது என்கிறான். அடுத்த வருஷம் 12வது வேறே. என்ன செய்யப் போறானோன்னு கவலையா இருந்தது. அப்பத்தான் என் அக்கா, அவ பொண்ணோட **பத்மஸ்ரீ ஜெம்ஸுக்கு** போயி ஜாதகம் பார்த்து ராசிக்கல் போட்டப்புறம் நிறைய மார்க் எடுத்து நல்லா படிக்கிறான்னு சொன்னா. நீயும் உன் பையனுக்கு முயற்சி செய்து பாரேன் என்றாள். நானும் அவனுக்காக அவனுடைய ஜாதகத்தை **பத்மஸ்ரீ ஜெம்ஸுக்கு** எடுத்து போனேன். அங்கு **திரு. ராஜசேகர் மற்றும் திருமதி ஷர்மிளா ராஜசேகர்** அவர்கள் ஜாதகத்தை நன்றாக அலசி பார்த்து அவனுக்கேற்ற ராசிக் கல்லை வாங்கி போட்டேன். இப்போ நல்ல ஞாபக சக்தியோட நல்லா படிச்சு நிறையவே மார்க் வாங்குறான். என்னோட அடுத்த பொண்ணு +2 சேரப் போறா. அதனால மறுபடியும் ஜாதகம் பார்க்க **பத்மஸ்ரீ ஜெம்ஸுக்கு திரு ராஜசேகர்** அவர்களை பார்க்க வரும்போது இதைச் சொல்ல எனக்கு வாய்ப்பு கிடைத்தது. **பத்மஸ்ரீ ஜெம்ஸ் & ஜுவல்ஸுக்கு** நன்றி!

**Geetha Ranganathan, Nanganallur, Chennai.**

**Geetha Ranganathan** மாதிரி பலரது நம்பிக்கையும் பிரச்சனையும் தீர்த்து வைக்கும் சிறந்த நிறுவனம்

**Padmashri Gems Jewellers**

சரி இதை யார் பரிந்துரைக்கிறார்கள்

**Mrs.SHARMILA RAJASHEKAR** M.A., P.G.A. Member

**Mr.RAJASHEKAR** B.Com., C.Gem., P.Gem.A., Bangkok

International Astrogemmologist

இந்தியாவின் சிறந்த Astrologer என்று Bangkok Association மூலம் தேர்ந்தெடுக்கப்பட்டவர். பலரது பிரச்சனைகளை தன் Astrogemmology மூலம் நிரந்தர தீர்வு தருகிறார்.

தபாலில் பதில் அறிய ரூ.251 **with Birth Details** அனுப்பவும்

**Free Consultation with this Copy**

**For Appointment Contact : 52122927, 28157560**

***100% Genuine & Energized Astro Gems, Original Rudraksh (All Faces), Valamburi Shank, Saaligram, Sriyantra, Rasamani & Other Devine Articles***




## Padmashri Gems Jewellers

**Astro-Gems, Diamonds, Gold & Silver Jewellery**

53-A, North Usman Road, T.Nagar, Chennai - 17. India.
Ph : 52122927, 28157560
Email : powerofgems@yahoo.com Website : www.padmashrigems.8m.com

ADVT.

E-mail: dde@annamalaiuniversity.ac.in Website: www.annamalaiuniversity.ac.in ☎ 04144 - 238610, 237160 FAX: 04144 - 238987



# அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

## தொலைதூரக் கல்வி இயக்ககம்

### திறந்தநிலைப் பல்கலைக்கழக அமைப்பு

அண்ணாமலைநகர் - 608 002



(தேசிய தரச்சான்று மற்றும் மதிப்பீட்டுக்குழு நான்கு நட்சத்திர உயர்நிலை சான்றிதழை அளித்திருக்கின்றது.)

**2005–2006 ஆம் ஆண்டுக்கான சேர்க்கை அறிவிப்பு — இளங்கலை மற்றும் பட்டயப் படிப்பு**

தொலைதூரக் கல்வி இயக்ககம் கீழ்க்கண்ட படிப்புகளைத் திறந்தநிலைப் பல்கலைக்கழக அமைப்பின் கீழ் வழங்குகிறது

**நுழைவுத் தேர்வு இல்லை**

**சேர்க்கைக்கு முறையான கல்வித் தகுதி தேவையில்லை**

## 1. இளங்கலை படிப்புகள் (மூன்று ஆண்டுகள்)

**பி.ஏ.:** வரலாறு*/வரலாறு மற்றும் பண்பாட்டு மேலாண்மை*/ சமூகவியல்* / பொருளாதாரம்*/வாணிப பொருளாதாரம்*/ அரசியல் அறிவியல்*/ஆங்கிலம்/ஆங்கிலம் பரிமாற்றம்/தமிழ்/பயன்முறைத் தமிழ்/மக்கள் தொகையியல்*/ பொதுத்துறை ஆட்சியியல்* மற்றும் பி.லிட்.(தமிழ்)/பி.காம்*/பி.காம் கணக்கியல் மற்றும் நிதி*

**பி.எஸ்ஸி.:** கணிதம்/கணிதம் மற்றும் கணிணி பிரயோகம்/உளவியல் / கணிணி அறிவியல்/தகவல் தொழில்நுட்பம்/விசுவல் கம்யூனிகேஷன்/

பி.சி.ஏ. (B.C.A.)

பி.காம். கணிணி பிரயோகம் (B.Com. C.A.)

பி.பி.ஏ. கணிணி பிரயோகம் (B.B.A. C.A.)

பி.பி.ஏ., பி.எம்.எம். (சந்தையியல் மேலாண்மை)*

* குறிப்பிட்டவை அனைத்தும் ஆங்கிலம் மற்றும் தமிழ் வழி சார்ந்தவை

## 2. பட்டயப் படிப்புகள் (ஓராண்டு)

சைவ சித்தாந்தம்* / யோகா*

**தகுதி:** மேற்குறிப்பிட்ட இளங்கலை மற்றும் பட்டயப் படிப்புகளில் சேர விரும்புபவர்கள் **01.07.2005** அன்று 18 வயது நிரம்பியவர்களாக இருத்தல் வேண்டும்.

**விண்ணப்ப வேண்டுகோள் கடிதத்துடன்** Director, D.D.E., Annamalai University என்ற பெயரில் ரூ. 100/-க்கான வங்கி வரைவினை (Demand Draft) அண்ணாமலைநகர்/சிதம்பரம்/சென்னையில் உள்ள எந்த வங்கியிலும் மாற்றக் கூடிய வகையில் எடுத்து **இயக்குநர், தொலைதூரக் கல்வி இயக்ககம், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலைநகர் - 608 002** என்ற முகவரிக்கு சுய விலாசமிட்ட உறையுடன் (28 செ.மீ. X 22 செ.மீ) அனுப்பி விண்ணப்பப் படிவத்தையும், குறிப்பேட்டையும் **27.04.2005** முதல் பெற்றுக்கொள்ளலாம். மேலும் **25.04.2005** அன்றோ அதற்கு பிறகோ எடுக்கப்பட்ட வங்கி வரைவுகளே ஏற்றுக் கொள்ளப்படும். காசோலைகள், பணவிடைகள் மற்றும் அஞ்சல் ஆணைகள் ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது. **விண்ணப்பிக்க உள்ள படிப்பை தெளிவாகக் குறிப்பிட வேண்டும்.** 3 சதவிகித இடம் குறைபாடுள்ளவர்களுக்கு ஒதுக்கப்பட்டுள்ளது.

**விண்ணப்பப் படிவத்தினை நேரில் பெற விரும்பும் விண்ணப்பதாரர்கள்** ரூ. 75/-ஐ நேரடியாகச் செலுத்தி தொலைதூரக் கல்வி இயக்ககத்திலும் கீழ்க்கண்ட படிப்பு மையங்களிலும் அலுவல் நேரங்களில் பெற்றுக் கொள்ளலாம்.

**விண்ணப்பப் படிவங்கள்** 25.08.2005 **வரை அளிக்கப்படும். நிறைவு செய்யப்பட்ட விண்ணப்பங்கள் வந்து சேரக் கடைசி நாள்:**29.08.2005.

**நேரடிச் சேர்க்கை:** நேரடிச் சேர்க்கை தொலைதூரக் கல்வி இயக்ககம் மற்றும் கீழ்க்கண்ட அனைத்து படிப்பு மையங்களிலும் நடைபெறும். விண்ணப்பப் படிவம் மற்றும் சேர்க்கை பற்றிய விவரங்கட்கு, மாணவர்கள் நேரடியாக படிப்பு மையங்களையும், நேரடியாக அல்லது தபால் மூலமாக தொலைதூரக் கல்வி இயக்ககத்தையும், அணுகும்படி கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள். விண்ணப்பப் படிவங்கள் மற்றும் சேர்க்கை, தனிப்பட்ட அமைப்புகள் அல்லது நபர்கள் மூலம் வழங்கப்படுவதில்லை. முறைகேடான விண்ணப்பங்கள் நிராகரிக்கப்படும்.

| | | |
|---|---|---|
| இடம்: அண்ணாமலைநகர் | டாக்டர் சி.பு. நாகேஸ்வர ராவ் | டாக்டர் மா. இரத்தினசபாபதி |
| நாள் : 14.06.2005 | இயக்குநர் | பதிவாளர் |

**USE ✆: 04144 - 237356, 237357, 237358, 237359 FOR 24 HOUR HELPLINE**

**மேலும் தகவல்களுக்கு அருகில் உள்ள படிப்பு மையத்தை அணுகவும்.**



# விழா மங்கை

***1983-** ஆம் ஆண்டு முதல் இவ்வருடம் மார்ச் மாத இதழ் வரை கடந்த 20 ஆண்டு களுக்கும் மேலாக என்னுடைய கட்டுரை களும், சிறு குறிப்புகளும் 'மங்கையர் மலரில்' பிரசுரிக்கப்பட்டு வருகின்றன.*

*பல்லாயிரக்கணக்கான இதயங்களைத் தன்வசப்படுத்தி, 25 ஆண்டுகளாக வெற்றிநடை போட்டுக் கொண்டிருக்கும் மங்கையர் மலருடனான எனது தொடர்பை நினைத்து பெருமையும், மகிழ்ச்சியும் அடைகிறேன்.*

*- ராஜலட்சுமி என்கிற ராஜி.*

1983-ஆண்டு முதல் ராஜி எழுதி 'மங்கையர் மலர்' இதழ்களில் பிரசுரிக்கப் பட்ட கட்டுரைகளின் சுருக்கப் பட்டியல் :

**1983-** டிசம்பர் - எரிபொருளைக் கவனியுங்கள்
**1984** - பிப்ரவரி - 'தலை'யாய பிரச்னை பொடுகு
**1985** - டிசம்பர் - தாயாகப் போகும் பெண்ணா? வேலைக்கு வேண்டாம்!
**1986** - ஜூன் - கர்ப்பத்திலுள்ள குழந்தைக்குக் காது கேட்கிறதா?
**1986** - ஆகஸ்ட் - உங்கள் பிரஷர் குக்கர்
**1987** - பிப்ரவரி - பாலைப் பாதுகாப்பது எப்படி?
**1987** - ஏப்ரல் - அழகுக்கும் ஆரோக்கியத் துக்கும் தாதுப் பொருட்கள்
**1988** - செப்டெம்பர் - குழந்தையின் மனக்கஷ்டம்
**1988** - அதிக எண்ணெய் ஆபத்து
**1989** - மார்ச் - 50 வயதில் ஆரோக்கியம்
**1989** - ஏப்ரல் - திக்குவாய் பிறவிக் கோளாறா?
**1990** - ஜூலை - க்ளுகோமா - என் கண்ணல்லவா?
**1990** - ஜூலை - குழந்தைகள் விரல் சூப்புவது ஏன்?
**1991** - மார்ச் - இளநீர் குடியுங்கள்
**1991** - மே - குழந்தை வாயினால் சுவாசிக்கிறதா?
**1992** - ஜனவரி - டைபாய்டு ஜுரம் ஏன் வருகிறது?
**1992** - ஏப்ரல் - ஆரோக்கியம் மனநிலையைப் பொறுத்தது
**1993** - செப்டெம்பர் - சோர்வுக்குக் காரணம் உடலா? மனமா?
**1993** - அக்டோபர் - வாழைப்பழம் சாப்பிடுங்கள்
**1994** - ஜனவரி - சொல்லவும் மெல்லவும் முடியாமல்...
**1995** - டிசம்பர் - வெண்டைக்காய் சாப்பிடுங்கள்
**1996** - ஜூன் - குழந்தையின் காலணியைக் கவனியுங்கள்
**1997** - மே - குழந்தைகள் தங்கள் பெற்றோரை ஏன் தர்மசங்கடமாக உணருகின்றன?
**1997** - நவம்பர் - உங்கள் குழந்தையின் தனிமையை மதியுங்கள்
**1998** - பிப்ரவரி - வீட்டை விட்டு ஓடிப்போகும் விடலைப் பருவத்தினர்
**1998** - அக்டோபர் - குதிகாலுயர் அணிகள் முழங்காலில் வலி ஏற்படுத்துகின்றனவா?
**1999** - மார்ச் - குழந்தைகளை மணல், களிமண்ணோடு விளையாட அனுமதியுங்கள்
**2000** - பிப்ரவரி - உயில் எழுதுங்கள்
**2000** - மார்ச் - குழந்தைகளைத் தட்டிக் கொடுங்கள், தட்டி வைக்காதீர்கள்
**2002** - ஜூலை - பகிர்ந்து கொள்ளப்படும் மகிழ்ச்சியும் கண்ணீரும்
**2003** - டிசம்பர் - அதென்ன ஹால்மார்க்?
**2004** ஜனவரி - உயிரே தயிரே!
**2005** - மார்ச் - அவர்களுக்கென்று ஓர் உலகம்



மங்கையர் சக்தி
மகத்தான சக்தி

மங்கையர் மலர் வெள்ளிவிழா




## அன்பு வட்டத்தில் கைகள் இணைப்போம்! உலகை வெல்வோம்!



மங்கையர் சக்தி மகத்தான சக்தி

மங்கையர் மலர் வெள்ளிவிழா

அன்பால் சாதிக்க முடியாதது எதுவும் இல்லை! உங்கள் அன்பின் வெளிப்பாடாகத் தோழிக்கோ, உறவினருக்கோ 'மங்கையர் மலர்' வாசகி ஆகும் வாய்ப்பினை நீங்கள் தரலாமே!

குறிப்பாக திருமணநாள், பிறந்த நாள், மணநாள் பரிசாக அமைந்தால் இரட்டிப்பு மகிழ்ச்சி அல்லவா?

இந்த சந்தா திட்டத்தில் புதிதாகச் சேருபவருக்கும், சேர்ப்பவருக்கும் பரிசுகளோடு அன்பு வட்டம் அட்டையும் தரப்படும்! பிப்ரவரி 2006 வெள்ளி விழாவில் மெகா பரிசும் காத்திருக்கிறது!



**பரிசு!**

**1 ஆண்டுச் சந்தா ரூ. 190க்கு வெள்ளி குங்குமச் சிமிழ்**

**2 ஆண்டு சந்தா ரூ. 380/-க்கு வெள்ளிக் கிண்ணம்**

**3 ஆண்டுச் சந்தா ரூ. 570/-க்கு வெள்ளி விளக்கு**



பெயர் : ..................................................

முகவரி : ..................................................

..................................................

..................................................

..................................................

தோழியின் பெயர் : ..................................................

முகவரி : ..................................................

..................................................

..................................................

..................................................

சந்தாத் தொகையை டிமாண்ட் டிராஃப்ட் அல்லது மணியார்டராக அனுப்புங்கள். இந்தத் தொகை 'Mangayar Malar' என்ற பெயருக்கு இருக்க வேண்டும். வெளியூர் காசோலைகள் அனுப்பினால் ரூ. 20/- கூடுதலாகச் சேர்த்து அனுப்புங்கள்.

அனுப்ப வேண்டிய முகவரி :

**சர்க்குலேஷன் மானேஜர், மங்கையர் மலர், கல்கி பில்டிங்ஸ்,**
**47 NP, ஜவாஹர்லால் நேரு சாலை, சென்னை - 600 032.**

# இந்த மாதம் எப்படி?

## ஜூலை 2005

(பார்த்திப வருஷம் ஆனி 18 முதல் ஆடி 15 வரை)

ஜூலை முதல் தேதியன்று உள்ள கிரக நிலவரம் : (வாக்கியப் பஞ்சாங்கப்படி)

| | | | |
|---|---|---|---|
| செவ் ராகு | சந் | | சூரி |
| | இம்மாத கிரக மாற்றங்கள்<br>17.7.2005 - கடக - சூரியன்<br>17.7.2005 - மேஷ - செவ்வாய்<br>19.7.2005 - சிம்ம - சுக்ரன் | | சனி சுக் புதன் |
| | | | |
| | | | குரு கேது |



### மேஷ ராசி :

அஸ்வினி, பரணி, கிருத்திகை 1 - ஆம் பாதம்.

**பொது :** பயணங்கள் நிறைந்த மாதம் இது. பண வரவு அதிகரிக்கும். எனினும், சேமிப்பு இராது. மாத பிற்பகுதியில் நிதி நிலவரம் திருப்திகரமாக விளங்கும். உடலாரோக்கியம் சிறந்து விளங்கும். காவல் துறை, இராணுவம் ஆகியவற்றில் பணிபுரிபவர்களும், விளையாட்டு வீரர்களும் சாதனை புரிவர். ரியல் எஸ்டேட் கட்டுமானப் பணி, விவசாயம் போன்ற பூமி தொடர்பான தொழிலில் உள்ளவர்கள் அதிக நன்மை பெறுவார்கள்.

**இல்லத்தரசிகள் :** பிறந்த வீட்டு வழி உறவினர்களுடன் கருத்து வேறுபாடு ஏற்படலாம். தாயாரின் உடல் நலன் பாதிக்கப்படலாம். கணவன் மனைவி உறவில் உள்ள மகிழ்ச்சி மனதிற்கு ஆறுதல் அளிக்கும்.

**பணிபுரியும் பெண்கள் :** பதவி உயர்வுடன் கூடிய இடமாற்றம் ஏற்படும். அலுவலகத்தில் லோன் வாங்க வேண்டிய அவசியம் உண்டாகலாம்.

**பரிகாரம் :** ஆதித்ய ஹிருதயம் அதிகாலையில் படித்து வந்தால் சூரியனைக் கண்ட பனி போல் அனைத்துத் தொல்லைகளும் நீங்கும்.

**சந்திராஷ்டம நாட்கள் :** 17ம் தேதி அதிகாலை 2.42 முதல் 19ம் தேதி காலை 6.54 வரை.



### ரிஷப ராசி :

கிருத்திகை 2, 3, 4 ஆம் பாதங்கள், ரோகிணி, மிருக சீரிஷம் 1, 2 ஆம் பாதங்கள்.

**பொது :** தடை என்னும் சொல்லுக்குத் தடைவிதிக்கும் மாதம் இது. நினைத்ததை நடத்தியே முடிப்பவர்களாக வெற்றி வாகை சூடுவீர்கள்.

இல்லத்தில் சுபநிகழ்ச்சிகள் நடைபெறும். தொழிலில் குறிப்பிடத்தக்க வகையில் மிகப் பெரிய முன்னேற்றம் காண்பீர்கள். உத்தியோகத்தில் இருந்து வந்த தொல்லைகள் அனைத்தும் அறவே அகலும்.

**இல்லத்தரசிகள் :** மருத்துவச் செலவுகள் இனி இல்லை. சேமிப்பு அதிகரிக்கும். உங்கள் கணவரின் சமூக அந்தஸ்து உயரும்.

**பணிபுரியும் பெண்கள் :** செல்வச்

ஹரிகேசநல்லூர் வெங்கட்ராமன்

செழிப்பு உண்டாகும். வைர நகை வாங்கி அணிவீர்கள்.

**பரிகாரம் :** தவ ஜனனீ தாடங்க மஹிமா என்னும் சௌந்தர்ய லஹரி வரிகளை மீண்டும் மீண்டும் உச்சரித்துக் கொண்டிருங்கள். அபரிமிதமான நன்மைகள் நடைபெறும்.

**சந்திராஷ்டம நாட்கள் :** 19ம் தேதி காலை 6.54 முதல் 21ம் தேதி காலை 9.45 வரை.



## மிதுன ராசி :

*மிருகசீரிஷம் 3, 4 ஆம் பாதங்கள், திருவாதிரை, புனர் பூசம் 1,2,3 ஆம் பாதங்கள்.*

**பொது :** உடல் ஆரோக்கியம் சிறப்பாக விளங்கும். திருமணத் தடை விலகும். அயல்நாடு செல்லும் வாய்ப்பு வலுவாகக் காணப்படுகிறது. திடீர் திருப் பங்கள் ஏற்பட்டு தொழிலில் வியக்கத்தக்க முன்னேற்றம் ஏற்படும். சக்திக்கு மீறிய செலவுகள் ஏற்பட்டு திக்குமுக்காடச் செய்யும். ஆனால் சமாளித்து விடுவீர்கள்.

**இல்லத்தரசிகள் :** ஜென்ம சனி விலகியதால் மனம் நிம்மதி பெறும். பொருளாதார ரீதியான சிறு சிறு பிரச் னைகள் தொடர வாய்ப்புள்ளது. மற்ற அனைத்து விஷயங்களும் உங்களுக்கு மிகவும் சாதகமாக நடைபெறும்.

**பணிபுரியும் பெண்கள் :** உத்தியோகம் பார்க்கும் இடத்தில் உற்சாகமான சூழ் நிலை உருவாகும். மதிப்பும் மரியாதையும் கூடும்.

**பரிகாரம் :** வெள்ளிக் கிழமைகளில் காலை 6 மணியிலிருந்து 7 மணிக்குள் சுக்ர ஹோரையில் செந்தாமரை மலர் சூட்டி லக்ஷ்மிதேவியை வழிபட்டு வரவும். தினமும் லக்ஷ்மி ஸஹஸ்ரநாம கேசட் வீட்டில் ஒலிக்கச் செய்யுங்கள்.

**சந்திராஷ்டம நாட்கள் :** 21ம் தேதி காலை 9.45 முதல் 23ம் தேதி மதியம் 12.12 வரை.



கோடைகாலத்தில் சாலையில் தார் உருகுவதால், புடைவைகளில் தார் கறை ஏற்பட வாய்ப்பு உண்டு. இந்தக் கறைகளைப் போக்கச் சிறிது டர்பென் டைனைத் தடவிச் சிறிது நேரம் ஊற வைத்து, அதன் மேல் சோப்புப் பவுடர் போட்டு வெந்நீரில் அலச வேண்டும்.

**- ஜரினா பானு**



## கடக ராசி :



*புனர்பூசம் 4 -ஆம் பாதம், பூசம், ஆயில்யம்.*

**பொது :** புதிய வீடு வாங்குவதும், இருக்கும் வீட்டைப் புதுப்பிப்பதும், கிருஹப்பிரவேசம் செய்வதும் இம் மாதம் நடைபெறும். சக்திக்கு மீறிக் கடன்பட்டா வது வீடு வாங்கி விடுவீர்கள். சனி பகவான் ராசியில் அமர்ந்து ஏழாம் இடத் தைப் பார்ப்பதால் திருமணத் தடை விலகும்.

**இல்லத்தரசிகள் :** அனைத்தும் நன்மைகளாகவே நடைபெற்றாலும் மனதில் ஏதோ ஒரு இனம்புரியாத அச்சம் இருந்து கொண்டே இருக்கும். மெடிடே ஷன் செய்து மன இறுக்கத்தைக் குறைத் துக் கொள்ளுங்கள்.

**பணிபுரியும் பெண்கள் :** உங்கள் கடமையை நிறைவேற்றுவதில் கண்ணும் கருத்துமாகச் செயல்படுங்கள். பிறருடைய பிரச்னைகளில் தலையிட வேண்டாம். யாருக்கும் கியாரண்டி கையெழுத்துப் போட்டு விடாதீர்கள்.

**பரிகாரம் :** சனிக்கிழமைதோறும் சிவ தரிசனம் செய்து நவக்ரஹ வழிபாடு செய்யவும். சனீஸ்வர பகவானுக்கு எள்ளுக்கிழி நல்லெண்ணெய் தீபம் ஏற்றி வரவும்.





# நீங்கள் உதவினால் இவர்கள் வாழலாம்...,

**வருடத்தில் ஒரு நாள் உணவு வழங்கி உதவி செய்யுங்கள்.**



கோயம்புத்தூர், சத்தி ரோடு, குரும்பபாளையத்தில் இயங்கி வருகிறது 'தி யுனைடெட் ஊனமுற்றோர் பள்ளி'. எழுந்து நிற்கமுடியாத, நடக்கமுடியாத, பேசும் சக்தியற்ற, மனவளர்ச்சி குன்றிய ஆதரவற்ற சிறுவர், சிறுமியர்களை கொண்டுள்ளது இந்த இல்லம். நீங்களும் உங்கள் பிறந்த நாள், பண்டிகைநாள், திருமணநாள், பெற்றோரின் நினைவு நாட்களில் அவர்களை நினைவுகூறும் விதமாக 'ஒரு நாள்' உணவு வழங்கி உதவி செய்யுங்கள். பொருள் உதவி செய்தோ அல்லது மாதாமாதம் ஒரு சிறு தொகையை பள்ளியின் பெயரில், வங்கி டிராப்ட் / மணியார்டர் மூலம் அனுப்பலாம். இந்த இல்லத்தினை பார்வையிட்டும் உதவி செய்யலாம்.



## The United Physically Handicapped School

(an Institution for orphaned disabled children)

**96, Sathy Main Road, Kurumbapalayam, Coimbatore-641 107.**

**Tamil Nadu. INDIA Phone : 91-422-2667578, 2667636. www.unitedhandicapped.org**

"ஊனமுற்றோர்களுக்கு செய்யும் தொண்டு! இறைவனுக்கு செய்யும் தொண்டு!!"

* Donations are Tax exempt

சந்திராஷ்டம நாட்கள் : 23ம் தேதி மதியம் 12.12 முதல் 25ம் தேதி மதியம் 2.42 வரை.



## சிம்ம ராசி :

மகம், பூரம், உத்திரம் 1-ஆம் பாதம்.

**பொது** : மாத முற்பகுதியில் சில நன்மைகள் நடைபெறும். 17ம் தேதியிலிருந்து சொத்து, வீடு, நிலம் போன்றவற்றில் சட்டச் சிக்கல்கள் ஏற்பட வாய்ப்பு உள்ளது. ஒன்பதாம் இடத்துச் செவ்வாயும் 12ம் இடத்துச் சனியும் ஒன்றை ஒன்று பார்ப்பதால் பூர்வீகச் சொத்து தொடர்பாக உடன்பிறந்தவர்களுடன் பகைமை உண்டாகலாம். பெருந்தன்மையுடன் விட்டுக் கொடுத்தால் வக்கீல் ஃபீஸ் மிச்சமாகும்.

**இல்லத்தரசிகள்** : பண வரவு மட்டும் திருப்திகரமாக இருக்கும். தந்தை அல்லது மாமனாரின் உடல்நலன் பாதிக்கப்படலாம். அலைச்சல் அதிகமாகும். அகாலத்தில் சாப்பிடுவதும் போதிய உறக்கமின்மையும் இருக்கும். சிலருக்கு கண்புறை நீக்கும் அறுவை சிகிச்சை செய்ய வேண்டி வரும்.

**பணிபுரியும் பெண்கள்** : உங்களுக்கோ அல்லது உங்கள் கணவருக்கோ வெளியூருக்குப் பணி இடமாற்றம் ஏற்படும். கூட்டுக் குடும்பமாக உள்ள சிலருக்கு உள்ளூரிலேயே தனிக்குடித்தனம் செல்ல வேண்டிய சூழ்நிலை உருவாகும்.

**பரிகாரம்** : சுந்தர காண்டம் பாராயணம் செய்வது நலம்.

சந்திராஷ்டம நாட்கள் : 25ம் தேதி மதியம் 2.42 முதல் 27ம் தேதி மாலை 6.42 வரை.

## கன்னி ராசி :



உத்திரம் 2, 3, 4 - ஆம் பாதங்கள், ஹஸ்தம், சித்திரை 1, 2 ஆம் பாதங்கள்.

**பொது** : இது ஒரு பொற்காலம். உங்களின் தொழில் வளர்ச்சியைக் கண்டு அனைவரும் ஆச்சரியப்படுவார்கள். மாணவ மாணவியர்க்கு அவர்கள் விரும்பிய கல்லூரியில் அட்மிஷன் கிடைக்கும். சிலர் ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ். போன்ற அரசுத் தேர்வுகளில் சாதனை புரிவர். திருமணத் தடை விலகும்.

**இல்லத்தரசிகள்** : குடும்பம் ஒரு பல்கலைக்கழகம் போல் விளங்கும். நம்மாலும் சிகரத்தைத் தொடமுடியும் என்னும் தன்னம்பிக்கை பிறக்கும்.

**பணிபுரியும் பெண்கள்** : மிகப் பெரிய பதவிகளும் பொறுப்புகளும் உங்களைத் தேடி வரும் மாதமிது.

சந்திராஷ்டம நாட்கள் : மாதத் துவக்கம் முதல் 2ம் தேதி மாலை 3.24 வரையிலும் மீண்டும் 27ம் தேதி மாலை



டூத் பேஸ்ட் தீர்ந்து போனதும் கொஞ்சம் ஒட்டியிருக்கும் ஃபேஸ்ட்டை கையால் அழுத்திப் பிதுக்கினாலும் சுலபத்தில் வெளியே வராது. டேபிளின் மேல் ட்யூபை வைத்து அடிப்பாகத்திலிருந்து பூரி உருட்டும் குழவியினால் அழுத்தி உருடினால், ஃபேஸ்ட் வெளியே வந்து விடும். அப்படி இல்லையென்றால் டியூபின் நுனியில் கத்தரிக்கோல் கொண்டு கத்தரித்துப் பிதுக்கினால் இரண்டு நாட்களுக்குப் பயன்படுத்தலாம்.

- லக்ஷ்மிதேவி அருணாசலம்.

6.42 முதல் 29ம் தேதி பின்னிரவு 1 மணி வரை.

## துலாம் ராசி :



***சித்திரை 3, 4 - ஆம் பாதங்கள், சுவாதி, விசாகம் 1,2,3 - ஆம் பாதங்கள்.***

**பொது:** பூர்வீகச் சொத்து கைக்கு வந்து சேருவதில் இருந்து வந்த தடைகள் விலகும். வழக்குகளில் உங்களுக்குச் சாதகமாகத் தீர்ப்பு கிடைக்கும். முடங்கிக் கிடந்த தொழில் புத்துயிர் பெற்றுவிடும். ஏற்றுமதி இறக்குமதி தொடர்பான தொழில்களில் உள்ளவர்களுக்கு பல நன்மைகள் நடைபெறும்.

**இல்லத்தரசிகள் :** பிள்ளைகளால் செலவுகள் அதிகரிக்கும். அதைச் சமாளிக்கக் கடன் வாங்க நேரிடலாம். ஆனால் சுபச் செலவுகளாக ஏற்படுவதால் மகிழ்ச்சிக்குக் குறைவிராது.

**பணிபுரியும் பெண்கள் :** உத்தியோகம் பார்க்கும் இடத்தில் நல்ல மாற்றங்கள் உண்டாகும்.

**பரிகாரம் :** வியாழக்கிழமைதோறும் திருப்பதி ஏழுமலையானை மனதார வழிபடுங்கள். திருப்பதி செல்லும் வாய்ப்பு கிடைத்தால் வியாழக்கிழமையன்று நேத்ர தரிசனம் செய்துவிட்டு வாருங்கள்.

**சந்திராஷ்டம நாட்கள் :** 2ம் தேதி மாலை 5.24 முதல் 5ம் தேதி அதிகாலை 2.10 வரையிலும் மீண்டும் 29ம் தேதி பின்னிரவு அதாவது 30ம் தேதி அதிகாலை 1 மணி முதல் மாத இறுதி வரை.

## விருச்சிக ராசி :



***விசாகம் 4 - ஆம் பாதம், அனுஷம், கேட்டை.***

**பொது :** சும்மா பூந்து விளையாடுங்க. உங்க காட்டுல மழை பெய்யுது. எதையெல்லாம் சாதிக்க வேண்டும் என்று துடித்துக் கொண்டிருந்தீர்களோ அவை அனைத்தையும் மிகச் சுலபமாகச் செய்து முடிப்பீர்கள். உங்களுக்குள் மறைந்து கிடக்கும் திறமைகள் விஸ்வரூபம் எடுக்கும். பெயர், புகழ், செல்வாக்கு, உரிய அங்கீகாரம் அனைத்தும் கிடைக்கும் நல்ல நேரமிது. குடத்திலிட்ட விளக்கு போல் இருந்தவர்களெல்லாம் குன்றின் மேலிட்ட விளக்காகப் பிரகாசிப்பீர்கள்.

**இல்லத்தரசிகள் :** புத்துணர்ச்சியுடன் செயல்படுவீர்கள். உடல் சோர்வோ மனச் சோர்வோ இனி இல்லை. அனைவராலும் மதிக்கப்படுவீர்கள்.

**பணிபுரியும் பெண்கள் :** பதவி உயர்வு கிடைப்பது உறுதி. அலுவலகத்தில் ஒரு பிரிவுக்கு நீங்கள் தலைமைப் பொறுப்பு ஏற்க நேரிடும். எதையும் ஒரு சவாலாக எடுத்துக் கொண்டு திறம்படச் செயலாற்றி

### மிளகில் இருக்கு சூட்சுமம்!

அன்றாடம் நாம் உபயோகிக்கும் மிளகு வாசனை மட்டுமல்ல, ஏராளமான மருத்துவக் குணம் கொண்டது.



1. ஒரு ஸ்பூன் மிளகுத் தூள், சிறிதளவு இஞ்சி, ஒரு பிடி துளசி இலை சேர்த்து கஷாயமாக்கி சர்க்கரை, பால் சேர்த்து அருந்த தொண்டைவலி, ஜுரம் குணமாகும்.
2. மூன்று மிளகை வறுத்து, வெற்றிலையில் வைத்து மெல்ல, நீரிழிவு நோய் உள்ளவர்களுக்கு ஏற்படும் தீராத தாகம் தீரும்.
3. நான்கு பாதாம் பருப்புடன், ஆறு மிளகை சேர்த்து

புகழ்பெறுவீர்கள்.

**சந்திராஷ்டம நாட்கள்** : 5ம் தேதி அதிகாலை 2.10 முதல் 7ம் தேதி மதியம் 1.10 வரை.



## தனுசு ராசி :

***மூலம், பூராடம், உத்திராடம் 1 - ஆம் பாதம்.***

**பொது** : மாத முற்பகுதி வெகு ஜோர். அரசுப் பணியாளர்கள் மேன்மை அடைவார்கள். அரசுத் தொடர்புடைய தொழில்புரிபவர்களுக்கு அதிக நன்மை ஏற்படும். 17ம் தேதி சனியுடன் சூரியன் ராசிக்கு 8ம் இடத்தில் இணைவதால் அன்று முதல் தொழிலில் சில

மென்று தின்று (தினமும்) ஒரு தம்ளர் பால் அருந்தி வர நரம்புத் தளர்ச்சி நோய் குணமாகும். உடலும் நல்ல வனப்பு பெறும்.

4. மிளகுத் தூளும், உப்புத் தூளும் சேர்த்துப் பல் துலக்கினால் ஈறுகளில் இருந்து இரத்தம் வடிதல் நிற்கும். மிளகுத் தூள், லவங்கத் தூள் ஒரு சிட்டிகை எடுத்து பல் வலி இருக்கும்போது பல்லில் அழுத்தி வைத்தால் பல்வலி குறையும்.

**- ஏ. சாரதா**

சிக்கல்கள் ஏற்படலாம். வழக்கு வியாஜ்ஜியங்களை தவிர்ப்பது நலம்.

இல்லத்தரசிகள் மகனா, கணவரா என்ற பட்டிமன்றத்திற்கு நீங்கள் நடுவராக இருக்க வேண்டிய ஒரு தர்மசங்கடமான நிலை உருவாகலாம். யார் என்ன பேசினாலும் உணர்ச்சிவசப்படாமல் சிரித்த முகத்துடன் சாலமன் பாப்பையா மாதிரி பட்டிமன்றத்தை நடத்துவதைத் தவிர வேறு வழியே இல்லை.

**பணிபுரியும் பெண்கள்** : வேலைப் பளு மிகக் கடுமையாக இருக்கும். மாத பிற்பகுதியில் உயர் அதிகாரிகளின் கோபத்திற்கு ஆளாக நேரிடும்.

**பரிகாரம்** : "த்ரைகுண்யம் ச மஹாசூரம் ப்ரம்ம விஷ்ணு மஹேஸ்வரம் மஹாபாப ஹரம் தேவம் தம் சூர்யம் ப்ரணமாம்யஹம்" என்னும் ஸ்லோகத்தை தினமும் அதிகாலையில் ஏழு முறை படித்து சூரியனை வணங்கவும்.

**சந்திராஷ்டம நாட்கள்** : 7ம் தேதி மதியம் 1.10 முதல் 9ம் தேதி நள்ளிரவு 12.45 வரை.

## மகர ராசி :



***உத்திராடம் 2, 3, 4 - ஆம் பாதங்கள், திருவோணம், அவிட்டம் 1, 2 - ஆம் பாதங்கள்.***

**பொது** : சுயதொழில் புரிவோர் அதிக லாபம் பெறுவர். சொந்த வீடு வாகனம் வாங்கும் யோகம் உள்ளது. பொருளாதார நிலை பன்மடங்கு உயரும். பங்குச் சந்தையில் ஓரளவு லாபம் கிடைக்கும். உடல் ஆரோக்கியத்தில் அதிக கவனம் செலுத்த வேண்டும்.

**இல்லத்தரசிகள்** : யாகாவராயினும் நா காக்க...

**பணிபுரியும் பெண்கள்** : செல்லிடத்துக் காப்பான் சினம் காப்பான் அல்லிடத்துக் காக்கின் என்? காவாக்கால் என்? ஆபீஸ்ல ஆயிரம் டென்ஷன் இருக்கும். அதுக்காக உங்க கோபத்தை எல்லாம் குழந்தைங்க மேலயா காட்டறது?

**பரிகாரம்** : ஓம் ஜ்வாலாமாலினி வித்மஹே மஹாசூலினி தீமஹி தன்னோ துர்கா ப்ரசோதயாத் என்னும் சூலினி காயத்ரி மந்திரத்தை தினமும் 18 முறை சொல்லி வாருங்கள்.

**சந்திராஷ்டம நாட்கள்** : 10, 11ம் தேதிகள் முழுவதும் 12ம் தேதி காலை 11.36 வரை.

## கும்ப ராசி :



***அவிட்டம் 3, 4 - ஆம் பாதங்கள், சதயம், பூரட்டாதி, 1, 2, 3 - ஆம் பாதங்கள்.***

**பொது** : உடலாரோக்கியம் மிகச் சிறப்பாக விளங்கும். கடன் தொல்லை என்னும் பேச்சிற்கே இனி இடமில்லை. உங்களுக்குப் பிரச்னை கொடுத்து வந்த கோர்ட் கேஸ்கள் பிசுபிசுத்துப் போகும்.



**மூக்குக் கண்ணாடி பயன்படுத்துவோர் கவனத்திற்கு :**

1. கண்ணாடியைக் கழற்றும் போது, இரண்டு கைகளாலும் பிடித்துக் கழற்ற வேண்டும். ஒரு கையினால் எடுத்தால், ஒரு பக்கம் மட்டும் தொய்ந்து விடும். இதனால் லென்சுகள் சரியான இடத்தில் பொருந்தாமல், சரியான பார்வை கிடைக்கக் கஷ்டமாக இருக்கும்.

2. கழற்றியவுடன் மேஜை மேல், ஷெல்ஃபில் என்று கைக்கு வந்த இடங்களில் வைக்காமல், அதற்குரிய பாக்ஸில் போட்டு வைக்க வேண்டும். அப்போதுதான் கீழே தவறி விழுந்து உடையும் அபாயம் ஏற்படாது. நாம் படிக்கும் போது, எழுதும் போது இடையே கழற்றி வைத்தால், கண்ணாடி மேல் நோக்கி இருக்கும்படி வைக்க வேண்டும். அப்போதுதான் கண்ணாடியில் கீறல் விழாது.

3. மூக்குக் கண்ணாடியை மாதம் ஒருமுறையாவது சோப்பு, ஷாம்பூ, வினிகர் கொண்டு துடைத்து அலம்பி வைத்தால், படிக்கும் போது பளிச்சென்றிருக்கும். இல்லாவிட்டால் அழுக்குப் படிந்து மங்கலாகத் தெரியும்.

4. டாக்டர் எழுதிக் கொடுத்த, கண்ணாடிக்குரிய சீட்டைப் பத்திரமாக எப்போதும் நினைவில் வைத்துக் கொள்ளக்கூடிய இடத்தில் வைக்க வேண்டும். புதுக் கண்ணாடி உடனடியாக வாங்க வேண்டும் என்றால் இது உதவும்.

5. டாக்டர் சொன்ன காலக்கெடுவில் போய் கட்டாயம் கண்ணைப் பரிசோதனை செய்து கொள்வது அவசியம்.

**- ஆர். பிருந்தா**

கௌரவம், செல்வாக்கு மேலோங்கும். சுயதொழில் சூடுபிடிக்கும். மெச்சி உம்மை ஊரார் புகழ்வர். அதனால் மேனி சிலிர்க்கும். உச்சி குளிரும்.

**இல்லத்தரசிகள் :** எண்ணங்கள் ஈடேறும் மாதமிது. பிள்ளைகளின் முன்னேற்றம் மனதிற்கு நிம்மதி அளிக்கும். வீட்டை அழகுபடுத்தி மகிழ்வீர்கள். வாகன சுகம் கூடும்.

**பணிபுரியும் பெண்கள் :** உங்கள் திறமைகளை வெளிப்படுத்த அற்புதமான சந்தர்ப்பங்கள் கிடைக்கும். கடுமையாக உழைக்க வேண்டியிருக்கும். எனினும் மகிழ்ச்சியுடனும் திருப்திகரமாகவும் பணிகளைச் செய்து பாராட்டுப் பெறுவீர்கள்.

**பரிகாரம் :** புனர்பூச நக்ஷத்திரத்தன்று ராமபட்டாபிஷேக படத்தை அலங்கரித்து வைத்து மனதை ஒருமுகப்படுத்தி ராமநாம ஜெபம் செய்யவும்.

**சந்திராஷ்டம நாட்கள் :** 12ம் தேதி காலை 10.36 முதல் 14ம் தேதி இரவு 8.22 வரை.



## மீன ராசி :

**பூரட்டாதி 4 - ஆம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி.**

**பொது :** பெரும்பாலான கிரகங்கள் சாதகமான நிலையில் உள்ளதால் வார்த்தைகளால் விவரிக்க முடியாத அளவிற்கு நன்மைகள் நடைபெறும். படமுடியாது இனி துயரம், பட முடியாது இனி அரசே என்று புலம்ப வைத்த அர்தாஷ்டமச் சனி விலகி விட்டது மதி வேண்டும், நின் கருணை நிதி வேண்டும். நோயற்ற வாழ்வில் நான் வாழ வேண்டும் என்னும் உங்களுடைய பிரார்த்தனை பலிக்கும் நேரமிது. சந்தோஷம் ஒன்றைத் தவிர வேறு எந்த தோஷமும் இல்லை.

**இல்லத்தரசிகள் :** தனக்குவமை இல்லாதான் அருளால் மனக்கவலை மாறும். குடும்பத்தார் மனதில் மகிழ்ச்சி அலை வீசும். சுபநிகழ்ச்சிகள் இல்லத்தில் நடைபெறும்.

**பணிபுரியும் பெண்கள் :** உத்தியோகத்தில் இருந்து வந்த அனைத்துத் தடைகளும் முற்றிலுமாக நீங்கி விடும். பதவி உயர்வு நிச்சயம் உண்டு.

**சந்திராஷ்டம நாட்கள் :** 14ம் தேதி இரவு 8.22 முதல் 17ம் தேதி அதிகாலை 2.42 வரை.

அழகிய விளக்குகள் அலங்காரமாய் ஒளிர்ந்து கொண்டிருந்தன. எளிய வேலைப்பாடுடன் கூடிய திரைச்சீலைகள் அழகு மிளிர மேடையை அலங்கரித்திருந்தன. காஞ்சனா டெக்ஸ்டைல்ஸ் நிறுவனத்தின் ஊழியர்கள் இங்குமங்கும் ஓடி பரபரப்புடன் விழாவிற்கு வருபவர்களை வரவேற்று இருக்கைகளில் அமரச் செய்து உபசரித்தனர். காஞ்சனா டெக்ஸ்டைல்ஸ் உரிமையாளர் ஸ்ரீராமின் வருகையை எதிர்பார்த்து காத்திருந்தனர்.

"இன்னும் பத்து நிமிடங்களில் அரங்கத்தில் இருக்க வேண்டும். ப்ளீஸ் உடனே கிளம்புங்கள் அம்மா."

"நீ போ ஸ்ரீராம். என் வார்த்தைக்கு நீ என்று மதிப்பு தரவில்லையோ, நான் உன்னுடன் வருவதில் அர்த்தமில்லை. நான் வரவில்லை."

"நமது விவாதத்தைப் பிறகு வைத்துக் கொள்ளலாம் அம்மா. அனைவரும் அங்கே நமக்காகக் காத்திருக்கிறார்கள். உடனே கிளம்புங்கள்."

வேறுவழியின்றி காஞ்சனா தன் மகனுடன் செல்லத் தயாரானாள். கார் அரங்கை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. இருவரும் பேசிக்

# 'எதிலும் தேடு புதிய கோணம்'



## மதுமிதா

கொள்ளவில்லை.

காஞ்சனா தன் பழைய நினைவுகளில் ஆழ்ந்தாள்.

ஸ்ரீராமின் தந்தை சரவணனும், காஞ்சனாவும் மேலகரத்தில் வசித்து வந்தனர். அன்று அவர்களின் திருமண நாள். வேலை விஷயமாய் திருநெல்வேலிக்குச் செல்ல வேண்டியிருந்ததால், "வர தாமதமாகும். நான் வருவதற்குள்



ஸ்ரீராமை படிக்க வைத்து, சாப்பாடு கொடுத்து தூங்க வைத்து விடு" என்றவன், காஞ்சனாவைப் பார்த்து கண்சிமிட்டி, "திருநெல்வேலி அல்வா வாங்கி வருகிறேன். வேறு என்ன வேண்டும்?" என்றான். "குழந்தை இருக்கிறான். இது என்ன விளையாட்டு, ஜாக்கிரதையாய்ப் போய் விட்டு வேலை முடிந்ததும் திரும்பி வாருங்கள்" என்றாள்.

ஸ்ரீராம் மாலை பள்ளியிலிருந்து வந்ததும் படித்து முடித்தவன் சாப்பிடாமல் பக்கத்து வீட்டில் டி.வி. பார்க்கச் சென்று விட்டான். திருமண நாளன்று கோவிலில் அர்ச்சனை



உங்கள் வீட்டு ஜன்னல் மற்றும் கதவுகளில் தொங்கும் திரைச்சீலைகளை நடுவில் சேர்த்துக் கட்ட ஒரு எளிய அழகான வழி... தலைக்கு வைத்துக் கொள்ளும் எலாஸ்டிக் பாண்டுகளை (சற்று அகலமானவையாக இருக்கட்டும்) வாங்கி வந்து மாட்டி விடுங்கள்... அழகான தோற்றம் எளிமையான அலங்காரம்.

- லக்ஷ்மி சுரேந்திரநாத்

செய்து வந்தாள். கணவனின் ரகசியக் குரலும், கண்சிமிட்டலும் நினைவிற்கு வர ஸ்ரீராமை அழைத்து வரச் சென்றாள். டி.வி.யில் பாடல் காட்சி ஓடிக் கொண்டிருந்தது. "பாலூட்ட ஒரு பிள்ளை அழைக்கின்றது. நான் படும் பாட்டை ஒரு பிள்ளை ரசிக்கின்றது. எனக்காக இரு நெஞ்சம் துடிக்கின்றது. இதில் யார் கேட்டு என் பாட்டை முடிக்கின்றது" கதா நாயகி கணவனுக்கும், குழந்தைக்கும் இடையே படும்பாடு பாடல் காட்சியாக் கப்பட்டிருந்தது. 'ஸ்ரீராமை நான் வரு வதற்குள் தூங்க வை' என்ற சரவணின் நினைவு ஆக்கிரமிக்க, ஸ்ரீராமை அழைத்துச் சென்று சாப்பிடச் செய்து தூங்க வைத்தாள், விதி கைதட்டி சிரிப்பதை அறியாமல்.

சரவணன் இரவு 12 மணியாகியும் வரவில்லை. அவன் விபத்தில் உயிரிழந்ததாகச் சாவுச் செய்திதான் வந்தது. விசேஷ காரியங்கள் முடியும் வரையிலும் காஞ்சனா நினைவிழக்காமல் உயிருடன் இருந்ததே பெரிய விஷயமாகி விட்டது. பக்கத்து வீட்டு அன்னம்மாள்தான் அருகே இருந்து கவனமாகப் பார்த்துக் கொண்டாள்.

**கா**ஞ்சனா தனக்குத் தெரிந்த தையல் வேலையில் பிழைப்பை நடத்தி வயிற்றுக்கும் வாயுக்கும் போதாமல் வாழ்நாளை ஓட்டினாள். சரவணனின் நினைவிலேயே உழைத்து ஓய்ந்து உறங்கப் போகும் போதும் விழிகளில் வழியும் நீர் உறக்கத்தைக் கலைக்கும். சரியாக ஆறு மாதமான போது கனவில் சரவணன் வந்தான். அவன் கூறிய வார்த்தை வேதவாக்கானது. "ஒரு கோணம் + ஒரு கோணம் = வேறு புதிய கோணம். எதிலும் தேடு புதிய கோணம்" காஞ்சனாவிற்கு இது முதலில் புரிபடவில்லை. "ஒரு கோணத்திலிருந்து ஒரு கோணத்தைப் பார்க்கும் போது வேறு ஒரு புதிய கோணம் தோன்றலாம். எதிலும் புதிய கோணம் தேடலாம். எதையும் உற்று நோக்கி புதிய கோணத்திலிருந்து நல்லதையே எடுத்துக் கொள்"

"என்னங்க சொல்றீங்க?" சிரித்தான் சரவணன். காஞ்சனா திடுக்கிட்டு விழித்தாள். கனவென்று புரிந்து கொண்டாள். உயிருக்கு உயிரான உயிரையே இழந்தாகி விட்டது. என்ன நல்லதை புதுக்கோணத்தில் தேடி எடுத்துக் கொள்வது?!

உறக்கம் தொலைந்து விழித்தவள் கணவனைப் பிரிந்த அன்றைய நினைவில் ஆழ்ந்தாள்.

திருமண நாளன்று அவன் ஊருக்குச் சென்றது, ஸ்ரீராமை அழைத்து தூங்க வைக்கச் சென்ற போது டி.வி.யில் அந்தப் பாடலைப் பார்த்தது. சற்றே நிதானித்து அந்தப் பாடலை நினைவுகூர்ந்தாள். அப் பெண்ணின் சிரமம் நினைவில் வந்தது. கணவனுடன் இருக்கையில், தொட்டிலில் தூங்கிக் கொண்டிருந்த குழந்தை அழ ஆரம்பிக்க, குழந்தையின் பசி தீர்க்க நைட்டியில் அப் பெண் பட்ட சிரமம் ஆஹா! இது அல்லவா புதுக் கோணம். ஆமாம் இப்பொழுது சுரிதாரிலும் இதே பிரச்னைதானே! பெண்கள் வெளியூர்





பிரயாணம், பேருந்து பயணங்களில் கைக் குழந்தையுடன் பயணிக்கும் பொழுது படாதபாடுபடும் வேதனை அவள் மனக் கண் முன் வந்தது. இதற்கு என்ன தீர்வு? ஏன் ஆண்களுக்கு சட்டையில் பாக்கெட் வைத்துத் தைப்பது போல் சுரிதாரின் இரு பக்கமும் 'ஓப்பன்' வைத்து இணைத்தால் பால் கொடுக்க எளிதாகுமே! அந்த இடத்தை துப்பட்டாவாலும் மறைத்து விடலாமே! இப்படி இந்த எண்ணம் வந்தவுடன் அதை உடனே செயல்படுத்தி னான். சுரிதாரின் முன்பக்கம் இருபுறமும் ஜிப் வைத்து தைத்து முடிக்கையில் காலை ஆறு மணி ஆயிற்று.

ஸ்ரீராமை பள்ளிக்கு அனுப்பி விட்டு சுரிதாரை 'பிரபல ரெடிமேட்ஸ்' கடைக்கு எடுத்துச் சென்றாள். உரிமையாளர் அதை வாங்கிப் பார்த்து புதுமையைப் பாராட்டி மேலும் பத்து சுரிதார்கள் தைத்துத் தரச் சொன்னார். ஆர்டர் மேல் ஆர்டராக வந்து குவிய 'காஞ்சனா ரெடிமேட்ஸ்' என்று சிறிய கடையாக ஆரம்பித்தாள். இப்போது எல்லா வகை ஆடைகளும் கிடைக்கும் 'காஞ்சனா டெக்ஸ்டைல்ஸ்' ஆக மாறியுள்ளது! காஞ்சனா டெக்ஸ் டைல்ஸ் ஆரம்பித்து இன்றோடு சரியாக ஒரு வருடமாகிறது. ஸ்ரீராமும் 'பேஷன் டெக்னாலஜி' எடுத்துப் படித்து முடித்து இன்று காஞ்சனா டெக்ஸ்டைல்ஸை நிர்வகிக்கும் பொறுப்பை ஏற்றுள்ளான்.

காஞ்சனாவிற்கு மகனின் திறமையில் நம்பிக்கை இருந்தாலும், தான் வந்த பாதையிலேயே அவனையும் அழைத்து வந்ததால் அவனின் தனித்தன்மையை வெளிப்படுத்தும் வகையில் வளர்க்கத் தவறி விட்டோமோ என்ற குற்ற உணர்ச்சி இருந்து வந்தது. தொழிலில் தனித் திறமையை நிரூபிக்க அவனுக்கு ஒரு வருடம் என்று நிர்ணயித்திருந்தாள். இன் றோடு அந்தக் கெடு முடிவடைந்தும் எந்த வித மாற்றமும் நிகழாத ஏமாற்றத்தையே ஆதங்கமாய் வெளிப்படுத்தினாள்.

விழா மேடையில், 'காஞ்சனா டெக்ஸ் டைல்ஸ்' ஊழியர்களுக்கு பல பரிசுகள் அறிவிக்கப்பட்டன. பிறகு பல ஆசிரமங் களிலிருந்தும் அழைக்கப்பட்டிருந்த பிரதி நிதிகள் ஒவ்வொருவராக வந்து வாழ்த்திப் பேசினர் காஞ்சனாவை. புரியாமல் பார்த் தாள். அனாதை ஆசிரமம், அபலைப் பெண்கள் காப்பகம், முதியோர் இல்லம் என ஒவ்வொரு நிறுவனத்திலிருந்தும் வந் திருந்தவர்கள் ஸ்ரீராம் இந்த ஒரு வருடத் தில் செய்த உதவியையும், அவ்விதம் அவன் உதவும் மனப்பான்மையுடன் வளர்ந்திருப்பதற்குக் காரணம் அவனது தாய் காஞ்சனாதான் என்றும் கூறினர். விழிகளில் ஆனந்தக் கண்ணீர் வழிய பெருமிதத்துடன் ஸ்ரீராமைப் பார்த்தாள்.

விழா முடிந்து, அனைவரையும் மதிய உணவு சாப்பிடச் சொல்லி விடைபெற்று வீட்டிற்குத் திரும்பினர். வீட்டிற்கு வந்ததும், "என் மேல் கோபமா அம்மா? இந்தக் கவரைப் பாருங்கள்" என்றான் ஸ்ரீராம்.

கணினியில் அவன் வடிவமைத்துத் தந்திருந்த டிசைனினால் ஆன வண்ண உடையை அணிந்திருந்த ஒரு பெண்மணி மிஸ் யுனிவர்ஸாகத் தேர்ந்தெடுக்கப்பட் டிருந்த புகைப்படமும், மேலும், அவன் தன் நிறுவனத்தின் கிளையை உலகெங்கும் பல நாடுகளில் நிறுவ அழைப்பு விடுத்த தற்கான ஒப்புதல் கடிதம் ஒன்றும் இருந்தது.

ஓடினாள் காஞ்சனா சரவணனின் படமருகே. பின்னால் ஸ்ரீராமும். "புதிய கோணத்தில் உங்கள் மகன் வென்றிருக் கிறான்" ஆனந்த வெள்ளத்தில் காஞ்சனா வும், நான்கு விழிகளின் நீரின் அபிஷேகத் தில் சரவணனும் நனைந்து கொண் டிருந்தனர். ●

சமீபத்தில் ஒரு நண்பர் வீட்டிற் குச் சென்றிருந்தேன். இசை ஆர்வத் தினால் அவர் தன் மூன்று பெண் குழந்தைகளுக்கும் சூடியிருந்த பெயர்கள் கேட்டு மகிழ்ந்தேன். நீங் களும் ரசியுங்களேன்!

நிஸரி
ஸரிகா
ரிகமா

- வி. சுகுந்தா

# பங்குச் சந்தையின் மூலம் சொத்து சேர்க்கலாம்!

பங்குச் சந்தையில் முதலீடு செய்வதற்கு முன் அதைப் பற்றி நிறைய விஷயங்கள் தெரிந்திருக்க வேண்டும்.

பங்கு (அ) ஷேர் என்பது கம்பெனியில் உங்களுடைய முதலீடு ஆகும். முன்பெல்லாம் உங்களுடைய முதலீட்டின் உத்தரவாதமாக ஷேர் சர்டிபிகேட் பேப்பர் வடிவத்தில் வந்து கொண்டிருந்தது. இதனால் சில பிரச்னைகளும் இருந்தன. பங்குகளை வாங்கி விற்பதற்கு காலதாமதம் ஆகியது. தொழில்நுட்பம் வளர வளர பேப்பர் வடிவம் கொண்ட ஷேர் சர்டிபிகேட் (சான்றிதழ்) மறைந்து




பங்கு மார்க்கெட்டில் முதலீடு செய்வதற்கு முன் சில விதிமுறைகளை நாமே நமக்கு விதித்துக் கொண்டு ஒழுக்கமான முதலீட்டாளராக நம்மை உருவாக்கிக் கொள்ள வேண்டும்.

ஒரு நல்ல இன்வெஸ்ட்மெண்ட் அட்வைஸர் மூலம் முதலீடு செய்வது நல்லது. முதன் முதலாக 'டீ-மேட் அக்கவுண்ட்' ஆரம்பித்துள்ளவர்கள் ஐ.பி.ஓவிலும் மியூசுவல் ஃபண்டிலும் முதலீடு செய்யலாம்.

'டி-மேட்' வடிவம் வந்தது. இந்தப் புது அவதாரத்தில், பல நன்மைகள் உண்டு. தபால் மூலம் பங்குகளை அனுப்பவோ பெறவோ வேண்டியதில்லை. ஆகவே கால விரயம் இல்லை. 'டி-மேட்'டில் பங்குகளை காலை பத்து மணிக்கு வாங்கி 10.35 க்கு விற்று அதே பங்குகளை பிற்பகல் 2.15 க்கு வாங்கி 3.15க்கு விற்க முடியும். இதனால் வருகின்ற லாபம் நம்முடைய வங்கிக் கணக்கில் அடுத்த நாளே சேர்ந்து விடும். ஒரு தொலைபேசியின் மூலம் நம்முடைய புரோக்கரிடம் நாம் நினைக்கிற பங்குகளை வாங்கலாம் விற்கலாம்.

'செக்யூரிட்டிஸ் அண்ட் எக்ஸ்சேஞ்ச் போர்டு ஆஃப் இண்டியா (SEBI)' என்ற நிறுவனம் பங்கு மார்க்கெட்டின் நடவடிக்கைகளைக் கண்காணித்து வருவதால், மோசடி நடப்பதற்கும் சாத்தியம் குறைவாக உள்ளது. ஆதலால் நாம் கடினமாக உழைத்து சம்பாதிக்கும் பணத்தின் ஒரு பங்கை பங்குமார்க்கெட்டில் தைரியமாக முதலீடு செய்யலாம்.

ஐ.பி.ஓ. என்பது ஒரு கம்பெனி அதன் வியாபாரத்தை விரிவுபடுத்துவதற்கு தன் பங்குகளை SEBIயின் மூலம் பங்கு சந்தையில் மிதக்க விடும். அதன் மூலம் வரும் பணத்தில் தன்னுடைய வியாபாரத்தை பெருக்கி முதலீட்டாளர்களுக்கும் லாபத்தை பெருக்கித் தரும்.

மியூசுவல் ஃபண்ட் என்பது நம்மைப் போன்ற முதலீட்டாளர்களிடம் பணத்தை வாங்கி நமக்காக அவர்கள் பங்குச் சந்தையில் முதலீடு செய்வார்கள். வரும்



லாபத்தை முதலீட்டாளர்களுக்கு டிவிடெண்டாக பகிர்ந்து அளிப்பார்கள்.

செகண்டரி மார்க்கெட்டில் முதலீடு செய்ய விரும்புவோர் அந்தக் கம்பெனியின் மேனேஜ்மென்ட், ப்ரொமோட்டர்ஸ் பற்றி நன்றாகத் தெரிந்து கொண்டு பிறகு முதலீடு செய்ய வேண்டும். குறிப்பாக அந்தக் கம்பெனியின் பேலன்ஸ் ஷீட், லாப, நஷ்டக் கணக்குகளை நன்றாக ஆராய்ந்து பிறகு நம்முடைய பணத்தை முதலீடு செய்ய வேண்டும். அந்தக் கம்பெனியின் கடந்த கால சரித்திரம், வளரும் திறமை, பங்குதாரர்களுக்கு தரும்

கடையில் (கேரம் போர்ட்டுக்குப் போடும்) போரிக் பவுடர் வாங்கி கிச்சன் மூலைகள், மற்றும் கரப்பான் பூச்சிகள் வருமிடங்களில் தூவி வைத்தால், கரப்பான் பூச்சி வரவே வராது.

- சுலைஹா அஹமது



டிவிடெண்ட், போனஸ் முதலிய ஆதாயங்களைக் கொண்டு ஒரு கம்பெனி பங்கு மார்க்கெட்டில் மதிப்பிடப்படுகிறது.

பங்குச் சந்தை ஓர் ஆழ்கடல். அந்த ஆழ்கடலில் மூழ்கி நல்ல அருமையான முத்துக்களான கம்பெனிகளைத் தேர்ந்தெடுக்க வேண்டும். இப்பொழுது பங்கு மார்க்கெட்டைப் பற்றின விவரங்கள் பல டி.வி. செய்தி சேனல்களில் வருகின்றன. பல ஷேர் புரோக்கர்கள் பலவிதமான ஐடியாக்களைச் சொல்கிறார்கள். அதை அப்படியே பின்பற்றாமல் நாமும் நம்முடைய அறிவை உபயோகப்படுத்தி அந்தக் கம்பெனியின் விவரங்களைத் திரட்ட வேண்டும். ஒரு காய்கறி வாங்கும் பொழுதோ (அ) வேறு சாமான்கள் வாங்கும் பொழுதோ நாம் கொடுக்கும்

விலைக்கு ஏற்ற சாமான் கிடைக்கிறதா என்று ஆராய்ந்துதானே வாங்குகிறோம்!

நம்முடைய இந்திய மார்க்கெட்டில் முதலீடு செய்ய வெளிநாட்டிலிருந்து நிறைய இன்வெஸ்ட்மெண்ட் கம்பெனிகள் வருகின்றன. இவர்களை ஃபாரின் இன்ஸ்டிடியூஷனல் இன்வெஸ்டார்ஸ் (FII) என்பார்கள். இவர்கள் இந்த வருடத்திலேயே ஏழு பில்லியன் டாலர்கள் (அ) இந்திய ரூபாய்படி முப்பத்தி இரண்டாயிரம் கோடி ரூபாய் முதலீடு செய்துள்ளார்கள். ஆசியாவிலேயே சீனாவிற்கு அடுத்ததாக இந்திய பங்குமார்க்கெட்தான் மிக நல்ல மார்க்கெட்டாகக் கருதப்படுகிறது. நம்முடைய பொருளாதாரமும் பெருகி வருகிறது. ஆதலால் நம்முடைய பங்குமார்க்கெட் முதலீட்டாளர்களுக்கு நல்ல லாபத்தைத் தரும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

நம்முடைய பயமும் பேராசையும் தான் மார்க்கெட்டை தீர்மானிக்கும் அளவுகோல்கள். பங்குகளின் விலை மேலே ஏறி இருக்கும் பொழுது முதலீடு செய்யக் கூடாது. எல்லோரும் பயந்து பங்குகளை விற்று விலை குறையும் பொழுது நாம் பங்குகளை வாங்க வேண்டும். உதாரணமாக மே 17 (கருப்பு திங்கள்) அன்று ஒருவர் விப்ரோவின் பங்குகளை 720 ரூபாய் கொடுத்து வாங்கியிருந்தால் அதன் இன்றைய மதிப்பு 2250 ரூபாய்.

இன்றைய தேதியில் பேங்க் டெபாஸிட்களின் வட்டியும் குறைந்து வருகிறது. நம்முடைய பணத்தை நல்ல தரமான கம்பெனியில் முதலீடு செய்தால் இருபது சதவிகிதம் வரை லாபம் எதிர்பார்க்கலாம்.

முதலீட்டாளர்களை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். குறைந்த காலத்திற்கு முதலீடு செய்பவர்கள்; நீண்ட கால முதலீட்டாளர்கள் என்று. நீண்ட கால முதலீட்டில்தான் நிறைய லாபம் கிடைக்கும். நாம் நம்முடைய பணத்தை வளருவதற்கு அவகாசம் கொடுக்க வேண்டும்.

புத்திசாலித்தனமாக நாம் நம்முடைய பணத்தை முதலீடு செய்து அது வளருவதற்கு பங்கு மார்க்கெட்டும் ஒரு நல்ல சாதனம். அதை நல்ல வழியில் உபயோகித்தால் நல்ல பலன் தரும் என்பதில் சந்தேகமில்லை.

- உஷா ரவி



* ரேவதி



* கேள்வி கேட்கும் வாசகி

* பார்வையாளர்களின் ஒரு பகுதி...

ஜூன் 4ம் தேதி கோவை எஸ்.என்.ஆர். கலையரங்கத்தில் 'கணினி ராணி' விழாவுக்கு 'கம்ப்யூட்டரை மையமாக வைத்து நடக்கிற ஒரு விழாவுல பள்ளிப் பிள்ளைகளும் கலந்துக்கறது நல்லதுக்குத்தானே' என்று அம்மாக்களும், பொண்ணுங்களு

## மங்கையர் மலர் கோலாகல வெள்ளி விழா



மாய் ஆயிரக்கணக்கில் வந்து ஆஜராகி விட்டனர்!

காலை 9.30 மணிக்கு நிகழ்ச்சியின் இனிய துவக்கத்தில், கோபுரம் பூசு மஞ்சள் தூள் டப்பா, லோட்டஸ் வாசனைக் குளியல் பவுடர், ஹிமாலயா புரோட்டீன் ஷாம்பூ, குங்குமம், சுகந்தி சாம்பிராணி, சக்தி மசாலா சாம்பார் பொடி, இந்தியன் ஆயுர்வேத மருத்துவ மனையின் இருபது சத தள்ளுபடி கூப்பன், டொரினோ கம்பெனியினரின் எண்பது பக்க நோட்டு. இவைகளுடன் குன்றிலிட்ட விளக்கு போல, மா. ஆன்டோ பீட்டர் எழுதிய மல்டி மீடியா சாஃப்ட்வேர்

* ஆன்டோ பீட்டர்




* பிலிஜி நிறுவன மேலாளர் தேவராஜ் பரிசினை வழங்குகிறார்...





• கணினி அதிர்ஷ்ட ராணி

• பட்டிமன்ற பங்கேற்பாளர்கள்

குறித்த கேள்வி - பதில் புத்தகம் ஆகியவை நிரம்பி வழிய 'அன்பளிப்பு பை'யை கைகொள்ளாமல் வாங்கிக் கொண்டனர் வாசகியர்கள்.

'எல்லா உயிர்களிலும் அன்னை வடிவாக இருப்பவளை வணங்கிச் சிறப்பிக்கும்' சக்தியைப் போற்றி, ஆசிரியர் ரேவதி சங்கரன் இறை வணக்கம் பாட விழா இனிதே தொடங்கியது.

# கோவையில் கணினித் திருவிழா!

சிந்தனையை மலர வைக்கும் காலை நேரம். சிறப்புரை ஆற்ற வந்தவர் மா. ஆன்டோ பீட்டர். கணிப்பொறி குறித்தான தகவல்களை, தமிழ் வாசகர்களுக்குப் புத்தக வடிவில் எழுதி வெளியிட்டு வருபவர். கணினி எழுத்தாளர். கணினி வளர்ச்சியும் தொழில் வாய்ப்பும் குறித்துப் பேச வந்தவர், பயனுள்ள பல தகவல்களைத் தன் பேச்சினூடே அழகிய முல்லைச் சரம் போலத் தொகுத்து அளித்தார்.

இதைத் தொடர்ந்து கேள்வி கேட்டிருந்த வாசகிகளில் பத்து நபர்களுக்கு ஆயுஷ் கிஃப்ட் பையும் விபிஜே வழங்கிய கிருஷ்ணா விக்ரகமும் பரிசளிக்கப்பட்டது.

"இந்த விக்ரகம் கொஞ்சம் சின்னதாகத்தான் இருக்கும். நீங்க இதை உங்க வீட்டில பூஜை அறையில் வெச்சு பூஜை செஞ்சு வந்தீங்கன்னா, கிருஷ்ண ஜெயந்தி அன்னைக்கி அது தானாவே பெரிசா ஆகிடும்!" என நகைச் சுவை சர வெடியை மேடையில் கொளுத்திப் போட்டார் நகைச் சுவை நடிகர் பாண்டு. அன்றைய நிகழ்ச்சி முழுமையுமாக



கல்யாண் சாரீஸ் & ஜுவல்லர்ஸ் உரிமையாளர்கள் ராமச்சந்திரன், ரமேஷ்

• பாண்டு



• முனைவர் கே. மீனா



• பட்டிமன்ற சூடான விவாத மேடை

அவர்தான் தொகுத்தளித்தார்.

திரை நட்சத்திரமும், இயக்குனருமான ரேவதி அவர்கள், பகலில் தோன்றிய நிலவு போல கேள்வியின் நாயகியாய் மேடையில் தோன்றி, கணிப்பொறி குறித்தான வினாடி வினா நிகழ்ச்சியை அசத்தலாக நடத்தி அனைவரையும் ஆச்சரியக் கடலில் மூழ்கடித்தார்.

பரிசாக பிவிஜி வெட்கிரைண்டர்கள், பட்டுப் புடைவைகள், விஜய் ஹோம் அப்ளையன்ஸஸ் வழங்கிய மல்டி பர்பஸ் பான்கள் வழங்கப்பட்டன.

அடுத்து வந்தது விளம்பரதாரர் நிகழ்ச்சி. இளம்பெண்கள் முதல், அறுபது வயது நிரம்பிய பாட்டி வரை ஒரு பெண்கள் படையே மேடையேறி வந்து கல்யாண் சாரீஸ் அண்ட் ஜுவல்லர்ஸ் குறித்து விளம்பரப் பாடல் மெட்டமைத்துப் பாடி வெளுத்துக் கட்டி விட்டனர்.



• ஆரவாரிக்கும் கோவை வாசகிகள்...

உன்னி கேட்டரர்ஸ் வழங்கிய அருமையான மதிய உணவுக்குப் பின்னர், சூடான சுவையான பட்டிமன்றம் 'கணினி வாழ்வை எளிதாக்குகிறதா? சிக்கலாக்குகிறதா?' என்கிற தலைப்பில் நடுவராகப் பொறுப்பேற்றிருந்தவர், மிகவும் பொருத்தமானவர். திருச்சி, ஸ்ரீமதி இந்திரா காந்தி கல்லூரி முதல்வர், கல்லூரியின் கணிப்பொறித் துறைத் தலைவர் முனைவர் கே. மீனா அவர்கள்.

மதிய வெயிலை விட அனல் தெறித்து விழுந்தது இரு அணியினர் உரை வீச்சிலும். இரண்டினையும் சமச்சீராய் எடை நிறுத்திப் பார்த்து, கணினி வாழ்க்கையை எளிதாக்குகிறது, என்று இறுதித் தீர்ப்பளித்தார் பட்டிமன்ற நடுவர்.

அதனைத் தொடர்ந்து கல்யாண் சாரீஸ் மற்றும் ஜுவல்லர்ஸ் உரிமையாளர்கள் ராமச்சந்திரன், ரமேஷ் ஆகிய இருவரும் மேடையில் தோன்றி, விளம்பரதாரர் நிகழ்ச்சியில் மெட்டமைத்துப் பாடிய எல்லாப் பெண்களுக்கும் பரிசுகள் தந்து மகிழ்வித்தனர்.




# சிறுநீரக கோளாறுக்கு சிறந்தது
# தெய்வீக மூலிகை மருத்துவம்

## பத்தியம் கிடையாது. பக்க விளைவு கிடையாது

சிறுநீரகம் என்பது நமது உடலின் மிக முக்கியமான ஒரு கழிவு நீக்க உறுப்பாகும். இது நம் உடலின் இடுப்புக்கு சற்று மேலே முதுகெலும்பின் இருபுறமும் பக்கத்திற்கு ஒன்றாக இடது, வலது அமைந்துள்ளது. இவைகள் ஒவ்வொன்றிலும் சுமார் 10- லட்சம் நெப்ரான்கள் என்னும் நுண்ணிய வடிகுழல்கள் உள்ளது. இந்த நெப்ரான்கள்தான் சிறுநீரகத்தில் பணிபுரியும் முக்கிய திசு ஆகும். உடலிலுள்ள இரத்தம், சிறுநீரகத்தில் உள்ள நெப்ரான்களின் வழியே செல்லும்போது உடலுக்கு தேவையான நீர், நீட், திரவ பொருட்களை உறிஞ்சிக்கொண்டு, தேவையற்ற கழிவுப்பொருட்களை சிறுநீர் குழாய் மூலம் சிறுநீராக வெளியேற்றப்படுகின்றன. சிறுநீரகங்கள் பழுதடையும் போது, யூரியா, கிரியேட்டினின், சோடியம், பொட்டாசியம், நீர் போன்ற கழிவுப்பொருட்கள் இரத்தத்தில் அதிகமாகின்றன. இதனை செயற்கை முறையில் இரத்த சுத்திகரிப்பு செய்தல் (Dialysis) மற்றும் சிறுநீரகமாற்று அறுவை சிகிச்சை (Kidney transplantation) போன்றவை செய்யும் நிலை ஏற்பட்டு இறுதியில் உயிரிழக்கும் நிலை ஏற்படுகிறது.

**சிறுநீரக கோளாறின் அறிகுறிகள்:** இரத்த சோகையினால் வெளிறிப்போன முகம். 2 கைகால், முகம், வயிறு போன்றவை வீங்கி முற்றிய நிலையில், நுரையீரல், இதயம் போன்ற முக்கிய உறுப்புகளை பாதிக்கின்றது. இதனால், மூச்சுத்திணறல்,நெஞ்சுவலி, சளி, இருமல், பலவீனம், போன்றவை தோன்றும். 3. சிறுநீர் போகும் போது எரிச்சல், மேலும் சிறுநீர் காப்பி கலரில் இருக்கும். அடிக்கடி இரவில் சிறுநீர் கழிக்க தோன்றும். 4. கண்ணின் கீழ் ஒரு சிறு பை போல் வீங்கி இருக்கும். 5.கீழ் முதுகில் வலியெடுக்கும். 6. யூரியா, கிரியேட்டினின், சோடியம், பொட்டாசியம் போன்றவை இரத்தத்தில் அதிகமாக காணப்படும்.

**சிறுநீரகம்செயல் இழப்பின் காரணங்கள்** : சர்க்கரை வியாதிதான் முதல் முக்கிய காரணம் ஆகும். கட்டுப்படுத்தப்படாத உயர் இரத்த அழுத்தம், எய்ட்ஸ் நோய் கிருமியான எச்ஐவி வைரஸ் மற்றும் மஞ்சள் காமாலையின் வைரஸ் ஆ-யும் தொற்றாலும், இரத்த சோகை, சிறுநீரககற்கள், மூட்டுக்கள், இணைப்புத் திசுக்களை, பாதிக்கும் நோய்களாலும் அதிக வயிற்றுப்போக்கு, வாந்தி, சிறுநீர் குழாயில் ஏற்படும் தசை சுருக்கம், கற்கள், கட்டிகள், புற்றுநோய் போன்றவற்றாலும் அடைப்புகள் ஏற்பட்டு சிறுநீரகம் பழுதாகலாம். மேலும் மற்ற நோய்களுக்காக எடுக்கப்படும் வீரியமான மாத்திரைகள், அதிகமான பாதரச உணவுகள் பாம்பின் விஷம், தீக்காயம், மின்சார தாக்குதல் போன்றவற்றால் சிறுநீரகம் பாதிக்கலாம்.

**ஒவ்வொரு மாதமும்**

2 வேலூர்
2 காஞ்சிபுரம்
4 கடலூர்
4 விழுப்புரம்
4 திருவண்ணாமலை
7,8 மும்பை
9 பெங்களூர்
12 சேலம்
12 ஈரோடு
12 திருப்பூர்
13 கோவை
13 உடுமலைபேட்டை
14 மதுரை
14 திருநெல்வேலி
15 விருதுநகர்
15 தஞ்சாவூர்
16 திருச்சி
16 கரூர்
20,21 புது டெல்லி

டாக்டர் C.K. மாணிக்கவாசகம் அவர்களால் 34வருட அனுபவ ஆராய்ச்சியில் எழுதப்பட்ட "எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்" என்ற நூலினை பதிவுத்தபாலில் பெற ரூ. 120/-ம், "என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்" என்ற புதிய நூலினை பதிவுத் தபாலில் பெற ரூ.120/- ம் தலைமை முகவரிக்கு M.O. அனுப்பவும். மேலும் விவரங்களுக்கு:

## CKM தெய்வீக மூலிகை மையம்
## CKM DIVINE HERBAL CENTRE

தலைமை முகவரி : P.B. NO. 30, 1,திருநாத முதலி நகர் (காலேஜ் எதிரில்), திருப்பத்தூர், வேலூர் மா 635601
✆04179-220469, 222769 செல் : 9842369696

சென்னை கிளை : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, (பிரின்ஸ் மேனர் பக்கத்தில்) கெல்லீஸ், சென்னை - 600 010. ✆ : 044-26424285, 26427638. செல் : 9444001447

: T-4,3வது மாடி, பிளாட் -3, 5வது தெரு, ஸ்ரீ லட்சுமி ஹோம்ஸ், அய்யாவு நகர், கோயம்பேடு, சென்னை- 107. ✆ : 044-55643347 செல் : 9282405758

டெல்லி கிளை : 8/34, W.E.A., Karolbagh, New Delhi - 5. ✆ 011-25736220 Cell : 9868026743

மேலே உள்ள முகவரிகளில் ஆலோசனை நேரம் காலை 10.00-1.00 p.m. மாலை 5.00-7.00 P.M.



• கோவை முதல்வர் சுப்பிரமணியம் அவர்களுக்கு சால்வை அணிவித்தல்

கோயம்புத்தூர் வெள்ளி விழா நிகழ்ச்சிகளை ஜெயா டீ.வி.யில் ஜூலை மாதம் 9-ஆம் தேதியிலிருந்து ஒவ்வொரு சனிக்கிழமையும் இரவு 8.30 மணி முதல் 9.00 மணி வரை கண்டுகளியுங்கள்.

அனிமேஷன் நிகழ்ச்சியில் மேடையில் திரையில் ஒளிர்ந்த படத் தொகுப்புக்கு விளக்கமளித்தவர் மா. ஆன்டோ பீட்டர். கிராஃபிக்ஸ் அனிமேஷன் துறைக்கு வேலை வாய்ப்புகள் நிறைய இருக்கிறது எனக் குறிப்பிட்டவர், ஒரு வினாடிக்கு இருபத்தி நான்கு படங்களை வரைந்து ஒரு அசைவினை உருவாக்க முடியும் என்று விரிவாக

• வினாடி -வினா நிகழ்ச்சியில்...





விளக்கம் தந்தார்.

தேநீர் இடைவேளையில் 'மில்கா வொண்டர் கேக் மற்றும் ந்யூ வொண்டர் பிரெட்' நிறுவனம் வழங்கிய கேக்கை சுவைத்து விட்டு சுறுசுறுப்பானார்கள் வாசகிகள். முதல் நிகழ்ச்சியாக கணினியில் ஏற்பட்ட 'வேடிக்கை அனுபவங்களை' வாசகிகள் மேடையில் ஏறி பகிர்ந்து கொள்ள, நடிகர் பாண்டுவும், அவர்களுடன் வேடிக்கையாகப் பேசி நிகழ்ச்சியை கலகலப்பாக்கினார். அடுத்ததாக, கலக்கல் கரோக்கி நிகழ்ச்சியில் பெண்கள் பலரும் பங்கேற்று, திரையிசைப் பாடல்கள் பாடி பரிசு பெற்றனர்.

நிகழ்ச்சிகளுக்கு மிகவும் உறுதுணையாக இருந்த வாலண்டியர்கள் கஸ்தூரிபா மகளிர் சங்கத்தைச் சேர்ந்தவர்கள்.

கணினி ராணி விழாவில் கம்ப்யூட்டர் பரிசு அளிப்பதுதானே மிகவும் சிறப்புப் பரிசாக அமையும்? வாசகியர் கூப்பனை குலுக்கிப் போட்டு குலுக்கல் முறையில் அதிர்ஷ்டசாலி ஒருவர் தேர்ந்தெடுக்கப்பட்டார். கோவை, செல்வபுரத்தில் வசித்து வரும், ட்ரெயினி ஸ்கூல் (இராஜ வீதி) பத்தாம் வகுப்புத் தேர்வு எழுதியுள்ள மாணவி எஸ். பிரியா கம்ப்யூட்டர் பரிசு பெற்ற 'கணினி ராணி' ஆனார். அன்று பத்தாவது தேர்வில் கிடைத்த வெற்றிச் செய்தியும், விழாவில் கிடைத்த கணினி பரிசும் அவரைத் திக்குமுக்காடச் செய்து விட்டது. இதுவே நிகழ்ச்சிக்கு சிகரமாகவும் அமைந்து விட்டது!

கட்டுரை : **ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

நிருபராக ஒரு வாசகியின் அனுபவம்




**பள்ளிப் பாடம் -**

சேவாமந்திர் பெண்கள் மேல்நிலைப் பள்ளி (மகாத்மா காந்தி அவர்களால் அடிக்கல் நாட்டப்பட்டது) பரங்கிப்பேட்டை (கடலூர் மாவட்டம்) இங்கே படித்த சமயத்தில் பள்ளி இலக்கிய மன்ற விழாக்கள், குறுவட்டம் : வட்டம் : மாவட்ட அளவிலான போட்டிகளில் கிடைத்த

# பயிற்சிக் களங்கள் பாடம் பயின்ற இடங்களே!

அனுபவங்கள் தமிழ் எழுத்தாற்றலுக்கும் பேச்சாற்றலுக்கும் வித்திட்டன.

• அனுராதா

**கல்லூரிப் பாடம் :**

திருச்சி ஸ்ரீமதி இந்திரா காந்தி கல்லூரி. கல்லூரி வளாகத்தில் முனைவர் திருமதி மீனா அவர்கள் தந்த ஊக்கத்தையும், மாநில அளவில் கல்லூரிகளுக்கு இடையேயான போட்டிகளில் பங்குபெற்று வெற்றி பெற பயிற்சி தந்த தமிழ்ப் பேராசிரிய பெருமக்களையும் தலைவணங்குகிறேன்.

**திருமண வாழ்க்கை :**

பிறகு, திருமணமாகி புதுதில்லி சென்ற பிறகு தமிழ் வட்டம் குறைந்து விட்ட சமயம்.. விசு அவர்கள் சிறந்த முறையில் நடத்தி வரும் அரட்டை அரங்கம் புதுதில்லியில் நடைபெற்றது. அதில் கலந்து கொண்டேன். நிகழ்ச்சியின் சிறந்த பேச்சாளர் என விசு அவர்களே பாராட்டினார். விசு







• அரட்டை அரங்கம் விசு

## மாவிலைத் தோரணம் கட்டுவது ஏன்?

எங்கள் ஊர் அதவத்தூர் கிராமத்தின் விரிவாக்கப் பகுதி ஆகும். அந்தக் கிராமத்தில் 53 ஆண்டுகள் கழித்து இந்த ஆண்டு சித்திரை மாதம் ''ஏகிரி பிடாரி'' அம்மன் திருவிழா நடைபெற்றது. இத் திருவிழாவை முன்னிட்டு ஒவ்வொரு வீடுகளிலும் சொந்தபந்தங்கள் நிறைந்து இருந்தன. எங்கள் வீட்டிற்கு வந்திருந்த என் தாத்தா தென்னை குருத்து, வாழை மரம், மாவிலைத் தோரணங்கள் கட்டும் பொழுது மாவிலைத் தோரணத்தை மட்டும் வீட்டைச் சுற்றிலும் இரண்டு, மூன்று வரிசைகளில் கட்டச் சொன்னார். அதே போல் அங்குள்ள எல்லா வீடுகளிலும், எல்லாத் தெருக்களிலும் மாவிலைத் தோரணத்தை மட்டும் அதிகமாகவும், கட்டாயமாகவும் கட்டும்படி கூறிக் கொண்டேயிருந்தார்.

ஏன் என்று நாங்கள் கேட்கும்பொழுது மாவிலை கரியமில வாயுவை தன்னுள் ஈர்த்துக் கொள்ளும் சக்தி கொண்டது. அதனால், இத் திருவிழாவிற்கு வரும் மக்கள் கூட்டம் வெளியிடும் கரியமில வாயுவை எல்லாம் தன்னுள் ஈர்த்துக் கொள்ளும். கூட்டத்திற்கு தகுந்த மாதிரி மாவிலைத் தோரணம் கட்டி விட்டால், கூட்டத்தினரால் ஒருசிலருக்கு ஏற்படும் மயக்கம் போன்றவை ஏற்படாமல் அனைவருக்கும் சுத்தமான காற்று கிடைக்கும். அதனால்தான் திருவிழாக் காலங்களிலும், வீடுகளில் விசேஷ நாட்களிலும் மாவிலைத் தோரணங்களைக் கட்டுகிறோம் என்கிற காரணத்தை விளக்கமாகக் கூறினார்.

- கீதா சந்திரசேகரன்

அவர்களைச் சந்தித்தது என் வாழ்வின் இனிய... சுவையான விபத்து என்றுதான் கூற வேண்டும். உரத்த சிந்தனை ஆசிரியரும் அரட்டை அரங்கத்தின் தேர்வுக் குழு தலைவருமான திரு. உதயம்ராம் மூலம் தில்லியில் ஒரு பெண் நிருபராகும் வாய்ப்பு அளிக்கப்பட்டபோது பூரண ஒத்துழைப்பு கொடுத்து, இன்று வரை எனக்கு உறுதுணையாக இருந்து வருகின்றனர் எனது கணவரும், மாமியாரும்.

**தில்லி - தமிழ்க்களம் -**

நித்தம் நித்தம் தமிழ் நிகழ்ச்சிகள் - ஏராளமான தமிழ் அமைப்புகள்... இலக்கிய ஆர்வலர்கள்... செவிச் செல்வத்திற்கு குறைவில்லை... செம்மொழி ஆகி விட்ட தமிழ்த் தாய்க்கு குறைவில்லாத தொண்டர்கள்.... நட்புகரம் நீட்டும் பத்திரிகை தோழர்கள்... வடக்கிலும் தமிழன்னை வாழ்ந்து கொண்டுதான் இருக்கிறாள்.

**நிருபராக வெற்றி பெற -**

சமுதாயநலன் கருதி பயணிக்க பக்குவமும், எழுத்து முனைக்கு கூர்மையான அறிவு மட்டுமன்றி மன உறுதியும் வேண்டும். மிக முக்கியமாக ஒரு பெண் நிருபருக்கு நிறைய வைராக்கியம் வேண்டும்.

**நிருபரின் கடமை -**

'நிலத்தைப் பார்த்து பயிரிடு
நேரம் பார்த்து முடிவெடு' என்பார்கள்.

சமுதாய நிகழ்வுகள் எதுவானாலும் அதனைக் கூர்ந்து கவனித்து, அதனை நன்கு திறன் ஆராய்ந்து குறிப்பிட்ட நேரத்திற்குள் வாசகர்கள், மக்களின் கவனத்திற்கு கொண்டு செல்ல வேண்டியதே.

நம்முடைய பணிகள், தேவைகள், அவசரங்கள் இவை அதிகமாக உள்ளன. நேரமோ குறைவாக உள்ளது. ஆகவே, நேரத்தை பணிகளின் பொருட்டு முதன்மைப்படுத்திச் செய்தால்தான் நன்மை அடையலாம்.

- வி. அனுராதா, புதுதில்லி.

# Murugan's

# "MAJAA" kitchen deal!

## Murugan, Leaders in cutlery since 1985, offers:

### Unique Combo Packs




***Kitchen in a box!***

### Pressure Cookers




***Speed is our Strength!***

Chennai : Adambakkam - Sri Kumaran Stores - 24451951, Jayalakshmi Stores - 22455663, Mary Metal - 22311568 Ambattur - New Valarmathy Marketing - 26574509, Anna Nagar - Yeses Super Market - 22640587, Arakonam - Mahalakshmi Textiles - 232274 Avadi - Selvan Steel House - 26551055 Sri Venkateswara Stores, Chromepet - Mahalakshmi Stores, StationRoad, Mahalakshmi Stores, Radha Nagar, Jayalakshmi Stores Chengalpattu - Anbu Stores - 04114 - 223910 Guduvancherry - Lakshmi Stores, Iynavaram - New Raja Stores - 26471321 Iyappan Thangal - Chandra Stores - 9884499168 Kelambakkam - Saravana Stores Kovilambakkam - Venkateswara Stores - 22475783 Kodambakkam - Sekar Stores - 24731575 Madipakkam - Metro Metal - 22420683 Manapakkam - Subbiah Metals - 22522090 Mandavell - P.S.S. Metals - 24950172, Moolakadai - Dinakaran Steel - 25583939 Medavakkam - Ambal Stores - 22462007 Mogapair - Hindustan Home Needs Mylapore - New Indira Stores - 24643554 K. Ramanathan & Co 24980821 M.G.R. Nagar - Gowri Stores - 24742309 Nesapakkam - Gowri Stores Nanganallur - Bala Subramanyam Metals - 22343344 Nungambakkam - Ramachandra Stores - 28221517 Otteri - Padmanaba Stores - 26430122 Palavakkam - Murugan Stores - 24511456 Pallavaram - Chellamani & Co. - 22640587 Pallikaranai - Krishna Steel - 2457477 Park Town - M.A. Ethirajulu Naidu - 25353215 Perungudi - Ganapathy Stores - 24985358 Perambur - Pandian Stores - 2670-1028 Peravallur - New Pandian Stores - 26713144 Poonamallee - Selvam Stores - 26273078, Balaji Metal Ware - 26492225 Pondy Bazaar - Kanchi Steel Place - 2433384 Porur Chandra Stores - 24828710 Ramapuram - Gowri Stores Royapettah - Shiek Farieth St. Thomas Mount - Gokul Metal - 22347645 T. Nagar - Murugan Stores - 24345444, Jayachandran Stores Triplicane Rehman Plaza - 52155200 Thiruninravur - Abirami Stores Tiruvallur - Packiam Stores 263334 Teynampet - Thanigaivel Stores - 24350259 Washermenpet - S. Selladurai Nadar - 25696778 Thiruvottiyur - Tutukudi Metals - 55681573 Valasaravakkam - Latha Stores - 24866065 Thirumullaivoyal - Porkodi Stores.

Other Parts of Tamilnadu : Annuparpalayam - Saravana Stores - 2471359 Aranthangi - Mahalakshmi Stores Arani - Krishna Pathirakadai - 04173 - 227030 Avinasi - Velavan, Kumaran Coimbatore - Authorised Distributor Sri Kirthi Stores - 2392070/2399463, Srinivasa Stores - 2396408, K. Swaminathan Chettiar - 0422 - 2392350 Dindigul - New Jaikrishna Steel Mart - 2420120 Eral - Ramakrishna Nadar Stores - 46330271293, Erode - Sri Lakshmi Metal Mart - 2213942 Karaikudi - Murugan Stores Karur - Thirumurugan, Ravi Eversilver Mart 04324 - 260453, Sri Kumaran Stores - 260602, Sri Meenakshi Pathira Maaligai - 04324 - 264428 Kumbakonam S.T. Thangaswamy Nadar Stores, Valli Vilas, Murugan Pathirakadai Madurai - Manimaran, Mathuranthakam - Veeramani Metal - 04155 - 225176 Marthandam - S. Andi Nadar Metal - 04651 - 270314 Nagapatinam - Ravi Steel Centre, Shanthi Eversilver Mart Nagercoil - Kasi Steel House - 231049, Madavi Metal Mart - 25986, Andi Nadar & Co - 04652 - 220739, Paneer Selvam Stores -04652 - 223661, Namakkal - Abirami Metal Panruti - Rajalakshmi - 04142 - 242020 Pattukottai - New Vedavalli Pathira Maligai Perambalur - Kali Chettiar Pollachi - Steel House - 04259 - 227208, Meenakshi Metals - 04259 - 231566 Pudukottai - Tamilarasi Stores Sivakasi - Aruna Home Appliances Surandai - S. Vellayutha Nadar - 04633 - 260769 Salem V. Chandrasekar & Sons - 2265580, The Jaihind Metal Stores - 211774, Bright Metal Corporation - 213096 Tirupur - K.J. Home Appliances, K. Ramanathan Chettiar & Co - 2249061, Ramnath Agencies Theni - V.V.G Stores - 04546 - 252603 Tanjore - R. Jayakumar - 336760, V. Ponniahnadar Thiruvannamalai - 04175 - 252006, Velavan Stores Thenkasi - Krishna Steels - 04633 - 227153 Mani Metal - 04633 - 220840 Tiruvarur - Santhi Metal, Thangaiya Nadar Stores Tiruthuraipondi - Raja Stores, Shanthi Metal Tirunelveli - Andi Nadar Stores 2334387, Andi Nadar & Sons - 339656, R. Andi Nadar Metal - 337301, Trichy - Aruna Stores - 98424 - 77744 Thuraiyur Laxmi Metal Tutukorin - Murugan Stores - 2322830 Raja - 0461 - 2322830 Udumalaipet - Sri Rajalakshmi Pathira Ankadi - 223628 Villupuram - Sri Meenakshi Stores.

**Cooking solutions... Not just cookers!**

எங்கள் நெருங்கிய உறவினர் ஒருவர் தவறி விட்டதால், பத்து நாட்களுக்குள் அவர்களைத் துக்கம் விசாரிக்க ஜெய்ப்பூர் செல்ல நேர்ந்தது. வயதான மாமியார், மாமனாருடன் நான் ஜெய்ப்பூரை நோக்கிப் பயணித்த போது, மனதுக்குள் ஒரு 'பயம்'. தெரியாத ஊர், புரியாத பாஷை, திரும்பி வர எடுத்த டிக்கெட்டோ வெயிட்டிங் லிஸ்ட். நாங்கள் செல்ல விருந்த உறவினர் வீடு ஜெய்ப்பூரில் எந்த திசையில் உள்ளது என்று கூடத் தெரியாது. துக்கம் நேர்ந்த வீடு என்பதால் யாரும் ஸ்டேஷனுக்கு வருவார்கள் என்றும் எதிர்பார்க்க முடியாது. ஒரு அசட்டுத் துணிச்சலில் கிளம்பி விட்டோம்.

விடியற்காலை ஜெய்ப்பூரில் இறங்கினால், ஒரு பக்கம் நடுக்கும் குளிர், மறுபக்கம் பயம். மாமியார், மாமனாரை ஆசுவாசப்படுத்தி ஒரு பெஞ்ச்சில் உட்கார வைத்து, டீ வாங்கிக் கொடுத்து விட்டு நானும் கையில் ஒரு டீ கப்புடன் நிதானமாக யோசிக்க ஆரம்பித்தேன்.

திடீரென்று பார்த்தால் கல்யாண க்ரூப் போட்டோவுடன் ஒரு ஐம்பது வயது மதிக்கத்தக்க மனிதர் அவர்கள் வீட்டிற்கு எங்களை அழைத்துப் போக வந்திருப்பதாகச் சொன்னார். "பேட்டி, (பெண்ணே) நீதானே சென்னையிலிருந்து வந்திருக்கும் பீதா?" என்று ஆங்கிலம் கலந்த ஹிந்தியில் கேட்டார். "ஆம்" என்று சொன்னவுடன் கையில் இருந்த ஃபோட்டோவைக் காண்பித்தார். நாங்கள் யார் வீட்டிற்கு துக்கத்திற்கு வந்திருக்கின்றோமோ, அவர்கள் சென்னைக்கு வந்த போது எடுத்த புகைப்படம்.

ஒரு மகனைப் போல் என் மாமியார், மாமனாரை கையைப் பிடித்து அழைத்

# இதுவும் ஓர் இறைவழிபாடுதான்!





காரட், பீட்ரூட், முள்ளங்கி, சௌசௌ இவற்றை
நன்கு அலம்பி துருவியோ பொடியாக நறுக்கியோ
சிறிது எண்ணெய் விட்டு வதக்கி வறுத்த
வெள்ளை உளுத்தம் பருப்பு, மிளகாய், உப்பு
பெருங்காயம், சிறிது புளி வைத்து துவையலாக
அரைத்தால் மேற்கண்ட காய்கறி சாப்பிடப்
பிடிக்காதவர்கள் கூட இந்தத் துவையலைச்
சாப்பிடுவார்கள்.

- எஸ். சரோஜா ஸ்ரீதர்.

துச் சென்றார். துக்கம் விசாரித்து முடித்தவுடன், அவர் (பெயர் பவன்ஷா என்று பின்பு தெரிந்து கொண்டேன்) என்னை அழைத்து, "நீங்கள் தொலைதூர பிரயாணத்தினால் களைத்துப் போயிருப்பீர்கள், எங்கள் வீட்டிற்கு வாருங்கள்'' என்று கூறியதோடு அல்லாமல் எங்கள் லக்கேஜையும் எடுத்துக் கொண்டு அவர் வீட்டிற்கு அழைத்துச் சென்றார்.

மேல் மாடியில்தான் அவர் வீடு. எங்களுக்கு சூடான டீ, பிஸ்கட் கொடுத்தார். அதற்குள் அவர் மனைவி என்னைச் சமையலறைக்கு அழைத்துச் சென்று, பல் இல்லாத என் மாமனாரால் என்ன சாப்பிட முடியும் என்று சைகை மொழியில் கேட்டார். "அவர்களால் என்ன சாப்பிட முடியுமோ, அதை நீங்களே செய்து விடுங்கள்'' என்றார் பவன்ஷா. சட்டென்று நான் குளித்து விட்டு, குழைந்த சாதமும் மிளகு ரசமும் வைத்து தயிருடன் பரிமாறினேன். இரண்டு நாட்களாகப் பிரயாணத்தின் போது சரியாகச் சாப்பிடாமல் திண்டாடிய என் மாமியாருக்கும் மாமனாருக்கும் அப்போதுதான் சற்றே தெம்பு வந்தது. அதற்குள் பவன்ஷாவின் மனைவி என் மாமியாரின் ஒன்பது கஜம் புடவை, மாமனாரின் எட்டு முழ வேட்டி என் அத்தனை துணிகளையும் துவைத்து உலர்த்தி விட்டார். நான் சைகை மொழியில் அவரை உரிமையுடன் கோபித்துக் கொள்ள, அவர் புன்னகை மாறாமல் அபிநயம் புரிய, எங்கள் நடனக் கச்சேரியைப் பார்த்து துக்கத்தில் ஆழ்ந்திருந்த என் மாமியார், மாமனார், பவன்ஷா கூட சிரிக்க ஆரம்பித்து விட்டார்கள்.

இந்த உதவிகளுடன் நிற்கவில்லை பவன்ஷா. என்னைத் தனியே கூப்பிட்டு, "பேட்டி, திரும்ப சென்னை செல்வதற்கான ரிசர்வேஷன் செய்ய வேண்டுமென்றால் ஏற்பாடு செய்து தருகிறேன்" என்று தானே முன்வந்து கூறினார்.

எங்கள் டிக்கெட் கன்ஃபர்ம் செய்ய உதவினார். நாங்கள் சென்னைக்குத் திரும்ப ரயிலேறும் வரை அவர் குடும்பம் எங்களுக்கு செய்த உதவிகள் எண்ணில் அடங்காதவை. அவர்களிடமிருந்து பிரியும் பொழுது, எங்கள் கண்களில் இருந்து வழிந்த கண்ணீரைக் கட்டுப் படுத்த முடியவில்லை. என் மாமனாருக்கோ, 'பவன்ஷா' அவர் வழிபடும் ஆஞ்சநேயரின் அவதாரமாகவே தெரிந்தார்.

சென்னைக்கு வந்த பின்தான் தெரிந்தது, வெளியூரிலிருந்து வந்த எல்லா உறவினர்களையும் அதே பில்டிங்கில் இருந்த குடும்பங்கள் இரண்டு, மூன்று நாட்களுக்கு 'தத்து' எடுத்துக் கொண்டு இப்படி உதவினார்கள் என்று.

விஞ்ஞானம், எவ்வளவு முன்னேறினாலும் சமய சந்தர்ப்பத்தில் 'ஆள் பலம்' என்பது எவ்வளவு மகத்தானது என்பதை அந்தச் சந்தர்ப்பத்தில் உணர்ந்தேன்.

அப்போது நான் எனக்குள்ளே ஓர் உறுதிமொழி எடுத்துக் கொண்டேன். 'மற்றவர்களுக்கு, இப்படிப்பட்ட சூழ்நிலையில், நம்மால் முடிந்த உதவியைச் செய்ய வேண்டும்' என்று. இப்படிச் செய்யும் சேவையும் ஒருவிதமான இறைவழிபாடு தான்.

**- கீதா கிருஷ்ணமூர்த்தி**

Smart technology for the smart people




TABLE TOP WET GRINDERS

A Product of ISO 9001 - 2000 Certified Company



SUPER EXCEL





SUPER GRIND






SUPER TILTING



SUPER PLUS



MULTI GRIND

Multi purpose table top wet grinders

**PRICE : Rs 1990/- onwards**

FOR ENQUIRIES :

PVG SHOWROOM

PVG Towers, Avinashi Road, Peelamedu, Coimbatore - 641 004, Phone : 2574453, 2574645

BRANCHES :

COIMBATORE · TUTICORIN · CHIDAMBARAM · MADURAI · TRICHY · SALEM · RAJAPALAYAM · VELLORE · CHENNAI · PONDICHERRY

*The Choice of Smart Women Worldwide*

# மணி மங்கை



• மே மாதம் பரிசு பெற்ற வாசகி இராதா மனோகர், கோவை மாவட்டம்.



## எனக்காகவே எழுதியது போல் இருந்தது

**ரூ.25,000/-**

**மதிப்புள்ள தங்க நகை பரிசு பெறும் கட்டுரை**

1995-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் மங்கையர் மலரில் வெளியான "இது சரியா?" வாசகிகளின் கேள்விகள் என்ற பகுதி எங்களுக்காகவே எழுதப்பட்ட வரிகள் போல அமைந்ததுடன் என் குடும்பத்தில் நிலவிய குழப்பமான சூழ்நிலையைத் தகர்த்தெறியச் செய்தது! பொதுவாக வழக்கத்திலுள்ள மூலநட்சத்திர ஜாதக சம்பந்தமான சந்தேகங்களைப் போக்கி, 'பளிச் பளிச்' என்று விளக்கம் தந்து என் குடும்பத்தினரின் மகிழ்ச்சிக்கும் ஆதாரமாக அமைந்தது என்பதை நன்றியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது மகன் தான் விரும்பிய பெண்ணைத் திருமணம் செய்து கொள்ள விரும்பிய போது அந்தப் பெண்ணுக்கு மூலநட்சத்திரம் என்ற காரணத்தால் நாங்கள் மறுத்தோம். அவனும் வைராக்கியமாக எந்தப் பெண்ணையும் மணக்க மறுத்ததுடன் திருமணமே வேண்டாம் என்று மிகவும் பிடிவாதமாக இருந்தான். அது சமயம்



மங்கையர் சக்தி மகத்தான சக்தி

மங்கையர் மலர் வெள்ளிவிழா

# மணி மங்கை

## ஆகஸ்ட் மாத போட்டித் தலைப்பு: மனதில் நின்ற கதாபாத்திரம்!

**ரூ.25,000/-** மதிப்புள்ள தங்கநகைப் பரிசு

1995-லிருந்து ஒரு சிறிய ஏணியில் ஏறிச் செல்வோம் 1998-க்கு! அந்த ஆண்டில் வெளியான கதைகளில் உங்கள் மனதில் நீங்காமல் நிலைபெற்ற கதாபாத்திரம் யார்? இன்றளவும் நீங்கள் மறவாத அந்தப் பாத்திரத்தைப் பற்றி எழுதலாம்!

1. பழைய இதழின் பிடித்த பக்கத்தின் ஜெராக்ஸ் பிரதியை அனுப்ப வேண்டும்.
2. ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.
3. பரிசு வருமானவரி விதிமுறைகளுக்கு உட்பட்டது.
4. கூப்பனை இணைத்து அனுப்ப வேண்டும்.
5. கடைசி தேதி **15.7.2005**

ஆசிரியர், மங்கையர் மலர்,
47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல்,
சென்னை - 600 032.

பெயர்: ..........
வயது: ..........
முகவரி: ..........
..........
..........
..........
தொலைபேசி எண்: ..........
ஈமெயில்:
..........

---

மங்கையர் மலரில் வெளிவந்த மூலநட்சத்திரம் பற்றிய விளக்கத்தை நாங்கள் படித்து மனம் தெளிவு பெற்று முழுமனதுடன் அந்தப் பெண்ணையே அவனுக்கு மணம் முடித்து வைத்தோம். இன்று அவன் இரு குழந்தைகளோடு எந்தக் குறைவுமின்றி செல்வாக்குடன் வாழ்ந்து வருவதால் நாங்களும் மகிழ்ச்சியாக உள்ளோம். வருகின்ற தலைமுறையினருக்கும் 'மங்கையர் மலர்' நல்ல வழிகாட்டியாக அமையும் என்பதால் மலர மலர கோர்த்து பொக்கிஷமாகப் பாதுகாத்து வருகிறேன்.

எங்களுக்காக எழுதப்பட்ட வரிகள் :

ஆண் மூலம் அரசாளும். பெண் மூலம் நிர்மூலம் என்பார்கள். ஆணி மூலம் அரசாளும் என்பதே சரி. பெண் மூலம் நிர்மூலம் அல்ல நிர்மலம். நிர்மலம் என்றால் தூய்மை. மூலநட்சத்திரத்தில் பிறந்த ஆண்-பெண் இருபாலரும் செல்வாக்குடன் வாழ்வார்கள்.

- எஸ். அறிவுக்கொடி,
திண்டுக்கல்.

# கண்கவர் ஆடைகள் - நிஜத்தில்

'ஆள் பாதி, ஆடை பாதி' என்பது எல்லோரும் அறிந்த மொழி. நீங்கள் அணியும் ஆடைகள், மற்றவர்களை விழிகள் விரியப் பார்த்து வியக்க வேண்டுமா? திரையில் வரும் நட்சத்திரங்கள் அணிந்திருக்கும் ஆடைகளைக் கண்டு நீங்கள் வியப்பது போல, நீங்கள் வடிவமைக்கும் ஆடைகளைக் கண்டு மற்றவர்கள் வியக்க வேண்டுமா? ஆடைகள் வடிவமைக்க உங்கள் மனதில் ஓர் ஆசை, ஏக்கம் எழுகிறதா? இப்போதே அந்த ஏக்கம், ஆசை, எல்லாவற்றுக்கும் ஓர் முற்றுப்புள்ளி வைத்திடலாம். உங்களது கற்பனை குதிரையைத் தட்டிவிட்டு, விதவிதமான கண்கவர் ஆடைகளை வடிவமைக்கத் தேவையான கல்வித் தகுதியைப் பெற ஒரு அரிய சந்தர்ப்பம்.



உங்களுக்காகவே அப்பேரல் டிசைனிங் கோர்ஸ்களை கிண்டியில் உள்ள மத்திய அரசு ஜவுளித்துறையின் ஆளுமைக்குட்பட்ட ஆயத்த ஆடை பயிற்சி மற்றும் வடிவமைப்பு மையம் (Apparel Training Design Centre - ATDC) வழங்குகிறது. ஆயத்த ஆடையில் தயாரிப்பில் ஆர்வம் மற்றும் விருப்பம் உள்ளவர்களுக்குத் தேவையான எல்லாவிதமான பயிற்சிகளையும் அளித்து, அவர்களுக்கு வேலைவாய்ப்புடன் ஆடை தயாரிப்பு மற்றும் நாட்டின் ஆடை ஏற்றுமதியை மேம்படுத்துவதுதான் இந்த மையத்தின் முக்கிய நோக்கமாகும். எனவே, இந்த அரிய சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி, உங்களை ஒரு தொழில் அறிந்தவராக்கிக் கொள்ளுங்கள்.



இந்த டிப்ளமோ கோர்ஸில் கார்மெண்ட் இண்டஸ்ட்ரியின் உற்பத்தியை அதிகரிக்கத் தேவையான அடிப்படைகள், மாறிவரும் ஃபேஷன்களில் எப்படி ஆடைகள் வடிவமைப்பது, தரக்கட்டுப்பாட்டை மேம்படுத்துவது, ஏற்றுமதி - இறக்குமதி நுணுக்கங்கள் மற்றும் ISO 9000 உட்பட எல்லாவற்றையும் கற்றுத் தருகிறார்கள்.

சென்னை மையத்தின் முதல்வர் வி. நாகராஜன் அவர்கள், ''இந்தியாவின் அந்நிய செலாவணியை ஈட்டித் தரும் தொழில்களில் முதலிடம் வகிப்பது கார்மெண்ட்ஸ் எக்ஸ்போர்ட்தான். 35 ஆயிரம் கோடி மதிப்புள்ள ஆடைகள் ஏற்றுமதி ஆகின்றன. இத்துறையில் வேலை பார்ப்பவர்கள் மூன்று மில்லியனுக்கு அதிகமாக இருக்கிறார்கள். உலக மார்க்கெட்டில் ஆடை உற்பத்தியை இதுநாள்வரை இருந்து வந்த நிர்ணயிக்கப்பட்ட விற்பனை சதவிகித முறை நீக்கப்பட்டு, 2005-லிருந்து Open Market System அமலுக்கு வந்துள்ளது. இதனால், இந்தியாவுக்கு இத்துறையில் உலக சந்தையில் போட்டியைச் சமாளிக்க, கார்மெண்ட் துறை பற்றி படித்தவர்கள் 20 லட்சத்துக்கு மேலான வேலைவாய்ப்பு உள்ளது. இதனால், இக்கோர்ஸைப் படிப்பவர்களுக்கு வேலை நிச்சயம்' என்கிறார் உறுதியாக.



இந்த கோர்ஸுகளில் சேருவதற்குக் குறைந்தபட்ச கல்வித் தகுதி - பத்தாம் வகுப்பு தேர்ச்சி பெற்றிருக்க வேண்டும். நம் வசதிக்கேற்ப காலைநேர வகுப்பு மற்றும் மதிய நேர வகுப்புகளைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். இந்தப் பயிற்சி தமிழிலும், ஆங்கிலத்திலும் கற்றுத் தரப்படுகிறது. மேலும் விவரங்களுக்கு அணுகவும் : **அப்பேரல் டிரெய்னிங் டிசைன் சென்டர்,** திரு.வி.க., இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், கிண்டி, சென்னை - 32. போன் : 044-22312121 மற்றும் 5/147, திருப்பூர் சாலை, கைகாட்டிப்புதூர் பஸ் நிறுத்தம் அருகில், அவினாசி, கோயம்புத்தூர் மாவட்டம். தொலைபேசி : 04296-275688.

வி.ம.



**ஆர். சியாமளா, சென்னை - 13.**

'பாவாடை கட்டி கட்டி பதிஞ்ச இடம் கறுப்புதான்' - கறுப்பு மறைய என்ன செய்வது?

இடுப்பில் இறுக்கமாகக் கட்டும் பாவாடையினால் ஏற்படுகின்ற கறுப்பு நிறம் மாற எளிய வழி இதுதான் : வில்வக் கட்டையைச் சந்தனக் கல்லில் இழைத்து அந்த விழுதை கறுப்புத் தழும்பின் மீது தொடர்ந்து தடவி வாருங்கள். மெல்ல மெல்ல கறுப்பு நிறம் மாறிவிடும்.

**ச. சித்ரா சத்திய நாதன், இரவாஞ்சேரி.**

மஞ்சள் காமாலைக்கு மருந்து சொல்லுங்களேன்?...

மஞ்சள் காமாலை என்பது கல்லீரலைப் பாதிக்கும் நோய். கீழா நெல்லி (சிறு இலைகளைக் கொண்டு இலையின் அடிப்புறம் கடுகளவில் காய்கள் இருக்கும்) செடியினை வேரோடு எடுத்து நன்றாகக் கழுவி விட்டு மையாக அரைத்து மோரில் கலந்து காலையில் வெறும் வயிற்றில் குடிக்க வேண்டும் - ஒரு வாரம் சாப்பிட்டால் குணம் தெரியும். குணமான பிறகு கரிசலாங் கண்ணிக் கீரையோடு பாசிப் பருப்பு சேர்த்து சமைத்து சாதத்தோடு கலந்து தினமும் சாப்பிட்டால் கல்லீரலின் பாதிப்பு குணமாகும்.

**ரேவதி பாலாஜி, சென்னை - 107.**

என் 14 வயது மகளுக்கு அந்த மூன்று நாட்களில் வயிற்று வலி வருகிறது. நிவாரணம் சொல்லுங்களேன் அம்மா...

இளம்பெண்களுக்கு வயிற்று வலி வருவது உண்டு. உளுந்தம் களி செய்து கருப்பட்டி நெய்யுடன் கொடுத்தால் கருப்பை வலிவு பெறும். கோதுமை மாவை சிவக்க வறுத்து அதில் நெய் விட்டுச் சாப்பிட்டால் வயிற்றுவலி குறையும். மாதுளம்பழம், அகத்திப்பூ, வாழைத்தண்டு அவசியம் உணவில் சேர்க்க வேண்டும். உடற்பயிற்சியும் தேவை.

# பாலுண்ணி மறைய என்ன செய்வது?




**எஸ். ரஞ்சனி, ஈரோடு - 4.**

என் முகத்தில் மங்கு உள்ளது. அதைப் போக்க ஒரு மருந்து சொல்லுங்களேன்...

பொதுவாக வீட்டு விலக்கு நிற்கின்ற பருவத்தில் இந்த மங்கு ஏற்படும். அதற்கு ஒரு ஸ்பூன் கசகசா, ஒரு ஸ்பூன் பயத்த மாவு, 2 வேப்பங்கொட்டை, 7, 8 துளசி இலை ஆகியவற்றை நன்நாக அரைக்துத் தயிரில் கலக்கி முகத்தில் தினமும் பூசி வர குணம்



மங்கையர் சக்தி மகத்தான சக்தி

மங்கையர் மலர் வெள்ளிவிழா



## பித்த வெடிப்புக்கு வாசகியின் அனுபவக் குறிப்பு

மே, 2005 மங்கையர் மலர் இதழில், 'அம்மா சொல்லுங்களேன்' பகுதியில் 'கால் பித்த வெடிப்பிற்கு நிவாரணம் என்ன?' என திருச்சி எஸ். மீனா கேட்டிருந்தார்.

இதற்கு எனக்குத் தெரிந்த அனுபவ வைத்தியம் கூறுகிறேன்:

சிறிது சுத்தமான மஞ்சள் தூள் (உருண்டை கிழங்கு மஞ்சளைப் பொடித்து உபயோகிப்பது நலம்) எடுத்து அதில் சிறிது விளக்கெண்ணெய் சேர்த்துக் குழப்பி, இக் கலவையில் சிறிது சிறிதாகச் சுண்ணாம்பு சேர்த்து மருதாணிச் சிவப்பு வரும் வரை கலக்க வேண்டும். இக் கலவையைப் பாதம் முழுவதும் ஒரு வாரம் இரவில் தொடர்ந்து தடவி வந்தால் போதும். பித்த வெடிப்பு மறைந்து விடும்!

(சகோதரி மீனா, பயன்படுத்தி விட்டுப் பலன் பற்றி எழுதுங்களேன்!)

- அறிவுச்சுடர்

தெரியும், சோப்பு, அழகு சாதனங்களைப் பயன்படுத்தாமல் இருப்பது நல்லது. வீட்டில் இருக்கும் போது ஆலிவ் எண்ணெயைத் தடவிக் கொள்ளுங்கள்.

ஆர். மீனலதா, மும்பை.

'நல்லெண்ணெய் கொப்பளிக்கும் வைத்தியம்' எல்லாவிதமான உடல் சம்பந்தப்பட்ட நோய்களுக்கும் நிவாரணம்

என்பது சரியா? எல்லா வயதினரும் இதைச் செய்யலாமா?

உண்மையிலேயே நல்லெண்ணெய் கொப்பளிப்பது நன்மையைத் தரும் என்பது அனுபவத்தில் கண்ட உண்மை. நேரமின்மை காரணத்தினால் அதை விட்டு விட்டது இன்றைய தலைமுறை. முகத்தின் தசைகளுக்கு நல்ல இரத்த ஓட்டத்தைத் தரும் பயிற்சி 'எண்ணெய் கொப்பளிப்பது' என்று பழைய நூல்களும் குறிப்பிடுகின்றன. எல்லா வயதினருக்கும் ஏற்ற பயிற்சி எண்ணெய் கொப்பளிப்பது - என்ன?

**வே. அருணாதேவி, வடமாதிமங்கலம்.**

என் மகன்கள் இருவருக்கும் பிறப்பிலேயே அனைத்துப் பற்களும் மஞ்சள் நிறமாகவே அமைந்து விட்டன. ஆங்கில மருத்துவத்தில் பயனில்லாமல் போனது. என்ன செய்ய?

வெங்காயச் சாறு மஞ்சள் கறையைப் போக்கும். எலுமிச்சைச் சாற்றில் உப்புப் போட்டு பிரஷ்ஷால் தேய்க்க வேண்டும். சோடா உப்பும், பொடி உப்பும் சேர்த்து விரல்களால் அழுத்தித் தேய்க்க வேண்டும். பற்கள் விழுந்த பின் நல்ல வெண் பற்கள் முளைக்க வாய்ப்புகள் இருக்கிறதே!

**எஸ். சரஸ்வதி, சென்னை.**

எனக்குக் கழுத்தின் பின்புறம் பாலுண்ணிகள் அதிகம் இருக்கிறது. இந்தப் பாலுண்ணி மறைய ஏதாவது ஒரு எளிய வழி சொல்லுங்களேன்...?

கைப்பக்குவமாக இவற்றிற்கு வெற்றிலைச் சாறு இடித்துச் சிறிதளவு சுண்ணாம்பு சேர்த்துப் பாலுண்ணி மீது போடலாம். வெங்காயச் சாறு எடுத்துப் பாலுண்ணிகள் மீது தடவி வரவும். விரைவில் குணமாக ஹோமியோபதியில் தூஜா என்ற மாத்திரை தருவார்கள். மருத்துவரின் ஆலோசனைப்படி அதையும் நீங்கள் முயன்று பார்க்கலாம்.

என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர்

ஆஹா... சேலம் வாசகிகளே உங்களுக்கு சூப்பர் சான்ஸ்! பணம் பண்ண ஈஸி வழிகள். ஹா... பணம் பண்ண சேலத்து வாசகிகளுக்குச் சொலித் தரவா வேணும்? இப்பவே வெளுத்துக் கட்டிக்கிட்டு வர்றாங்களே.... ஆமாம், இன்று சிறுதொழிலில் கொடிகட்டிப் பறக்கும் நகரம் சேலம்தானே! அப்போ 'பணம் பண்ணலாம் வாங்க' வெள்ளி விழா நிகழ்ச்சியும் சேலத்தில்தானே நடத்த வேண்டும்!

சேலம் வாசகிகளே தயாராக இருங்கள். காலை முதல் மாலை வரை கலக்கல் நிகழ்ச்சியில் கலக்கப் போவது நீங்கள்! பரிசு மழையில் நனையப் போவதும் நீங்களே!



நிகழ்ச்சியில்...

- சேலம் நகர மகளிருக்கு மட்டுமே முன்னுரிமை.
- சிறு குழந்தைகள், 12 வயதுக்குட்பட்ட சிறுவர்கள், கண்டிப்பாக அரங்கிற்குள் அனுமதிக்கப்பட மாட்டார்கள்.
- நிகழ்ச்சியில் மற்றும் போட்டிகளில் வாசகியர் அவர்களது சொந்தச் செலவிலேயே வந்து கலந்து கொள்ளும்படி கேட்டுக் கொள்கிறோம்.
- இங்கு கொடுக்கப்பட்டிருக்கும் விழா கூப்பனுக்கு இருவர் அனுமதிக்கப்படுவர்.
- போட்டி முடிவுகள் நிகழ்ச்சியின் இறுதியில்தான் அறிவிக்கப்படும். ஆகவே, நிகழ்ச்சி முடியும் வரை ஒவ்வொருவரும் அரங்கினுள் கட்டாயம் இருக்க வேண்டும்.
- காலை முதல் மாலை வரை நிகழ்ச்சி நடைபெறும். மதிய உணவு எல்லோருக்கும் வழங்கப்படும்.

# பணம் பண்ணலாம்

நாள் : **24.07.2005 (ஞாயிற்றுக் கிழமை)**

பதிவு நேரம் : **காலை 8 மணி முதல் 9 மணி வரை**

இடம் : **சுமங்கலி கல்யாண மண்டபம், (தினத்தந்தி அருகில்),**
**9-C, 9-D ஓமலூர் மெயின் ரோடு,**
**சேலம் - 636 009.**

சேலத்தில் 24-ம் தேதி காலை 9.30 மணிக்குத் தொடங்கும் நிகழ்ச்சிக்கு இந்த கூப்பனுக்கு இருவர் அனுமதிக்கப்படுவர்.

(ஆர்.)

**சேலம் - விழா கூப்பன்**

# வெள்ளி விழா

## ஜூலை 24 சேலத்தில்

## போட்டி - I
### பட்டிமன்றம் : ஆடித் தள்ளுபடி - லாபமா? / நஷ்டமா?

ஆடித்தள்ளுபடியில் தள்ளப்படுவது (கூட்டத்தில்) வேறு விஷயம். ஆனாலும் இந்தத் தள்ளுபடி விஷயத்தில் பெண்கள்தானே முன்னால் போய் நிற்கிறார்கள். ஆடித் தள்ளுபடியில் யாருக்கு லாபம்? யாருக்கு நஷ்டம்? சூடாக விவாதிப்போமா? இந்த விவாதத்தின் எந்தப் பக்கம் நீங்கள் என்பதைக் குறிப்பிட்டு அனுப்பவும்.

## போட்டி - II
### வினாடி - வினா நிகழ்ச்சி - காசா லேசா

இது ஒரு குழு நிகழ்ச்சி. ஒரு குழுவில் மூன்று வாசகியர் இடம்பெறலாம். பணம், பொருள், பொருளாதாரம் சம்பந்தமான கேள்விகள் கேட்கப்படும். பொருளாதாரம் சமாச்சாரங்களை உருப்போட்டு வாருங்கள். ஒரு நிமிஷம்... பொருளாதார அமைச்சர் ப. சிதம்பரத்தை மட்டும் விட்டு வைச்சிடுங்க ப்ளீஸ்.




## போட்டி - III
### திட்டத் திலகம்!

எந்த ஒரு தொழில் தொடங்கினாலும் அதற்கு முன்பே திட்டமிடல் என்பது அவசியமாகிறது. இப்போது உங்கள் கையில் ரூ. 25,000/- வங்கி மூலம் கடனாகப் பெற்று கொடுக்கப்படுகிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். அதை வைத்து என்ன தொழில் தொடங்குவீர்கள், எப்படிச் செய்வீர்கள்? வங்கிக் கடனை எத்தனை நாட்களுக்குள் திருப்பிச் செலுத்த முடியும் போன்ற விவரங்கள் அடங்கிய ஒரு பக்கா தொழில் திட்டத்தை உருவாக்குங்களேன். அந்தத் தொழில் திட்டத்தையும் எங்களுக்கு கூப்பனுடன் இணைத்து அனுப்பி வையுங்கள். சிறப்புத் தொழில் திட்டத்துக்கு அரங்கில் 'திட்டத் திலகம்' பட்டம் காத்திருக்கிறது.

**மூன்று போட்டிகளுக்குமான பொது விதிமுறைகள் :**

- இந் நிகழ்ச்சிகளில் சேலம் வாசகியர் அனைவரும் கலந்து கொள்ளலாம்.
- மூன்று நிகழ்ச்சிகளுக்கும் முதல் நாள் தேர்வு நிகழ்ச்சி நடத்தப்படும். (இதற்குண்டான இடம், நேரம் பின்பு கடிதம் மூலம் தெரிவிக்கப்படும்).



* இத் தேர்வு நிகழ்ச்சிக்கு போட்டியில் கலந்து கொள்ளவிருக்கும் வாசகியர் அனைவரும் கண்டிப்பாக இடம்பெற வேண்டும்.

* நுழைவுத் தேர்வு மற்றும் விழாவில் கலந்து கொள்ள ஏற்படும் போக்குவரத்து மற்றும் இதர செலவுகள் அனைத்துக்கும் வாசகியரே பொறுப்பேற்றுக் கொள்ள வேண்டும்.

* தேர்வு நிகழ்ச்சியில் தேர்ந்தெடுக்கப்படும் குழுவில் உள்ள வாசகியரே மறுநாள் விழாவில் நடைபெறும் மேடை நிகழ்ச்சிக்கு அனுமதிக்கப்படுவார்கள்.

* அந்தந்தப் போட்டிக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் கூப்பனில் பெயர், விலாசம் எழுதி கூப்பனை ஆசிரியர், மங்கையர் மலர், 47 NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032 என்ற முகவரிக்கு அனுப்பவும். **கடைசித் தேதி 15.7.2005**

* ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

**போட்டி - I கூப்பன்**

**ஆடித் தள்ளுபடி லாபமா? ☐ நஷ்டமா? ☐**
**(✔ செய்யவும்)**

பெயர் : ..............................

வயது : ..............................

முகவரி : ..............................

..............................

..............................

தொலைபேசி எண் : ஈமெயில் :



**போட்டி - II கூப்பன்**

**வினாடி - வினா நிகழ்ச்சி - காசா லேசா**

பெயர்

1. ..............................
2. ..............................
3. ..............................

முகவரி :

..............................

..............................

..............................

..............................

தொலைபேசி எண் : ஈமெயில் :

**போட்டி - III கூப்பன்**

**திட்டத் திலகம்!**

பெயர் : ..............................

வயது : ..............................

முகவரி : ..............................

..............................

..............................

தொலைபேசி எண் : ஈமெயில் :



அனைத்து கூப்பனும் அனுப்ப கடைசித் தேதி : 15.7.2005





# 'பைபாஸ்' அறுவை சிகிச்சைக்கு இனி 'பை-பை' தான்!

## Oxymed Hospital

**Chennai's first non-surgical treatment center for heart attack problems.**



மாரடைப்பு, நெஞ்சு வலி போன்ற இதய நோய்களுக்கு ஆஞ்சியோப்ளாஸ்டியும் பைபாஸ் சர்ஜரியும் மட்டுமே தீர்வுகள் என்று நினைக்கிறீர்களா? ஓஸோன் மற்றும் கிலேஷன் சிகிச்சைகள் மூலம் நிவாரணம் பெறுவீர்! இதயம் சம்பந்தமான நோய்களுக்கு இத்தகைய சிகிச்சைகள் குணமளிப்பது நிரூபணம் செய்யப்பட்டு, உலகில் 24 நாடுகளில் பின்பற்றப் படுகின்றன. ஜெர்மனி, அமெரிக்கா, இங்கிலாந்து, ரஷ்யா, ஃபிரான்ஸ், கியூபா, மலேசியா, ஜப்பான் என்றுபல நாடுகளில் பின்பற்றப்படுகிறது. இன்னும் சொல்லப் போனால், 12 கோடிக்கும் மேற்பட்ட ஜெர்மனியர்கள் தங்களுக்கு ஏற்படக் கூடிய இதய நோய்கள், மூட்டு நோய்கள் மற்றும் புற்றுநோய்க்கும் இம்முறைகளையே நம்புகின்றனர். ஜெர்மனியில் மட்டுமே இவ்வகை மருத்துவ சிகிச்சைகள் அளிக்க 7000க்கும் மேற்பட்ட புகழ் பெற்ற மருத்துவர்கள் இருக்கிறார்கள். உங்களுக்கும் இந்த சிகிச்சை முறைகள் பற்றி அறிய ஆவலா? உடனே எங்களைத் தொடர்பு கொள்ளுங்களேன். அறுவை சிகிச்சையில்லை, வலி இல்லை, நீண்ட நாள் மருந்துகள் இல்லை. ஆனால் உங்கள் பிரச்சினைகளுக்கு தீர்வுகள் மட்டும் கட்டாயம் உண்டு!

**Timing: Week days 9 a.m. to 6 p.m. Sunday 10 a.m. to 5 p.m.** *(enquiries only)*

***Anna Nagar:*** *2180, L-Block, 12th Main Road (Behind Nilgiris), Chennai - 600 040.*
***Ph.: 26201147 / 30910237***

***Adyar:*** *5, First Main Road, Kasthurba Nagar, Chennai - 600 020.* ***Ph.: 24452753***



**OXYMED HOSPITAL**
PRIVATE LIMITED
CLOSE TO YOUR HEART

# ஏரிபொருள் சிக்கனம் தேவை இக்கணம்!

**எ**ங்கள் குடும்பத்தில் மூன்று பேர். இரண்டு பெரியவர்கள். ஒரு சிறியவர். காஸ் சிலிண்டர் எனக்கு 76 நாள் வருகிறது.

மூன்று பேர் உள்ள எனக்குத் தெரிந்த மற்ற குடும்பத்தில் காஸ் சிலிண்டர் எத்தனை நாள் வருகிறது என்று விசாரித்த போது 60 (அ) 64 நாட்கள் வரும் என்று சொன்னார்கள். இதைக் கேட்கும் போது எனக்குப் பெருமையாக இருந்தது. எரிபொருள் விஷயத்தில் சிக்கனமாக இருக்கோம் என்ற சந்தோஷம் ஏற்பட்டது.

**நான் கடைப்பிடிக்கும் விஷயங்கள் :**

1. அரிசியைக் களைந்து, காய்கறிகள் நறுக்கிய பிறகு காஸ் அடுப்பை பற்ற வைத்தல். தாளிப்பதற்குத் தயாராக வைத்து விட்டு கடாய்ப் போடுதல்.

2. குழம்போ, ரசமோ, சாம்பாரோ, கூட்டோ, குருமாவோ எதுவாக இருந்தாலும் அது எவ்வளவு கொதிக்க வேண்டுமோ அதற்கு மேல் ஒரு நிமிடம் கூட அடுப்பில் வைப்பதில்லை.

3. குக்கரின் மேலே டபரா அல்லது கிண்ணம் வைத்து தண்ணீர் ஊற்றி புளி (அ) தக்காளி போட்டால் அந்தச் சூட்டிலேயே தக்காளி பாதி வெந்து விடும். புளியை எளிதாகக் கரைக்கலாம். சாம்பார், ரசம் சீக்கிரம் ஆகிவிடும்.

4. பருப்புகளை முதலிலேயே தண்ணீர் விட்டு ஊறவைத்தல், அரைக்க வேண்டியவற்றை முதலிலேயே அரைத்து வைத்துக் கொள்ளுதல். பருப்பு, பயறு, கிழங்கு வகைகளை வேகவைக்க குக்கரையே உபயோகித்தல்.

(குறிப்பு : காஸ் தீர்ந்து போய் மற்றொரு சிலிண்டரை மாட்டும் பொழுது அன்றைய தேதியை சாக்பீஸினால் சிலிண்டரில் எழுதவும்)

**(வாசக சகோதரிகளில் இதைவிடச் சிக்கனமாக எரிபொருளை உபயோகிப்பவர்கள், என்னென்ன வழிகளில் என்று கூறினால் மற்றவர்களுக்கும் பயனுள்ளதாக இருக்குமே!)**

**- எஸ். சரோஜா ஸ்ரீதர்.**

## போஸ்ட் கார்டு போட்டி முடிவுகள்

### முதல் பரிசு ரூ. 1000/-

மீன் தராதீர்கள். மீன் பிடிக்கக் கற்றுத் தாருங்கள். இது ஜப்பானியப் பழமொழி. பழமொழியல்ல. பொன் மொழி. நம் நாட்டு சகோதரர்கள் தேவைக்கேற்ப உழைத்தாலும் போதிய முன்னேற்றம் காண முடியவில்லை. காரணம், கூட்டு முயற்சி என்ற பெயரால் பொறுப்பில்லாமல் பொறுப்புகளை போற்றிப் பாதுகாக்காமல் அடுத்தவர்களின் தலையில் சுமத்தி விடுகிறார்கள். இதனால் அரசாங்கம் முதல் வீடு வரை எதிர்பார்த்த பலன் இல்லை. ஜப்பானியர்கள் போல்.. சீனர்கள் போல் பொறுப்புகளை... தன்னந்தனியே சுயவேலை என்ற பெயரில்... அவர்கள் தலையில் சுமக்க வைத்தால் அதிக பொறுப்புணர்வு வந்து நாட்டுக்கும், வீட்டுக்கும், பொறுப்பை சுமந்தவருக்கும் நன்மை கிடைக்கும் ஆக.. சுயவேலை தருவதுதான்... எல்லோருக்கும், எல்லா காலங்களிலும் நன்மை பயக்கும். இதில் எள்ளளவும் சந்தேகமில்லை.

- எஸ். ஷிரின் தாஜ், திருவரங்கம்.

# சுயவேலை தருவது பலனா? பாதிப்பா?

### இரண்டாம் பரிசு ரூ. 500/-

| சாதனையாளர்கள் | முந்தைய நிலை | தற்போதைய நிலை | வெற்றி ரகசியம் |
|---|---|---|---|
| 1. ஏழுமலை நாயக்கர் | ஹார்டுவேர் கடையில் எடுபிடி ஆள் | ஸ்டீல் நிறுவனத்தின் லட்சாதிபதி | ஓயாத உழைப்பு. தன் கையால் இன்றும் ஸ்டீல் செய்தல் |
| 2. ஏ.சி. ஈஸ்வரன் | டெய்லருக்கு ஹெல்ப்பர் | 'ஆனந்த்', 'வைகிங்' பனியன் நிர்வாகத்தின் நிர்வாக இயக்குநர் | புதுப்புது யோசனைகள். ஓயாத உழைப்பு. நியாயமான லாபம். குடும்ப ஆதரவு |
| 3. விஜயராகவன் | மூட்டை தூக்கியவர். லோடு அடித்தவர் | விஜய் பார்க்கின் ஓட்டல் அதிபர் | இலக்கு. மனதில் தன்னம்பிக்கை, ஆடம்பரச் செலவுகளைத் தவிர்த்தல் |
| 4. ஆதியன் பழங்குடி மகளிர் | பூம் பூம் மாட்டுப் பிச்சைக்காரர்கள் | பழைய துணி சேகரித்தல், சீர்படுத்தல், தேர்தலில் நிற்கும் சமூக அந்தஸ்து | அநாகரிகச் சடங்குகளை எதிர்த்து களையும் ஆற்றல், ஒற்றுமை |
| 5. பாலகிருஷ்ணன் | சர்வர், டிரைவர் | அந்தஸ்து 6 கோடி ரூபாய் மதிப்பு. பாலா டூரிஸ்ட் சர்வீஸ் அதிபர் | விடாது உழைத்தல். முடங்காமல் யோசித்தல். |

போதுமா? ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு போதும்! நிறையப் பேரைப் பட்டியலிடலாம்.

- ராதா, சேலம் - 6.

### மூன்றாம் பரிசு ரூ. 300/-




13. மொத்தத்தில் சுயவேலை தரும் பலன் → சமூகத்தில் நல்ல அந்தஸ்து.

- விசாலாட்சி, பெங்களூர்.

## ஆறுதல் பரிசு ரூ. 200/-

இன்றையச் சூழ்நிலையில் இளைஞர்கள் வேலை தேடி அலைவதை விட சுய தொழில் மேற்கொள்வது சாலச்சிறந்தது. அவரவர் படிப்பிற்கேற்ப சுயதொழில் மேற்கொள்ளலாம். நம்மால் மற்றவர்களுக்கும் வேலை கொடுக்க முடிகிறதே என்கிற மகிழ்ச்சியும் ஒருபுறம். இந்த சுயதொழில் மூலம் சிகரத்தை எட்டியவர்கள் தமிழ்நாட்டில் பலருண்டு. அதில் முதன்மையானவர் வி.ஜி.பி. சகோதரர்கள். அது ஏன், நம் மங்கையர் மலரில் சில வருடங்களுக்கு முன்பு 'கிருஷ்ணா ஸ்வீட்ஸ்' உரிமையாளர் பேட்டி வெளியாகியிருந்தது. மிகச் சிலரோடு ஆரம்பித்த அந் நிறுவனம் தங்களது விடா முயற்சியாலும், உழைப்பாலும் இன்று பல கிளைகளிலும் மணம் பரப்பி வருகிறது. சக்கைப்போடு போட்டுக் கொண்டிருக்கும் மசாலா நிறுவனம் என்று வரிசைப்படுத்தலாம்.

சுயதொழில், சிறந்த பலனை நம் நாட்டிற்கும் வீட்டிற்கும் தரும் என்பது நிதர்சன உண்மை.

**- ஜி. துளசி, கும்பகோணம்.**

## ஆறுதல் பரிசு ரூ. 200/-

சுயவேலை சுகமான சுமையே! பயனும் பாதிப்பும் அவரவர் கையில் இருக்கிறது. ஒரு கதை கூடச் சொல்வார்கள். ஒருவர் முனிவரிடம் கேட்டாராம், 'சொர்க்கம், நரகம் என்றால் என்ன?' என்று. 'இங்கே வா, காண்பிக்கிறேன்' என்று ஓர் அறைக்கு அழைத்துச் சென்றிருக்கிறார். அங்கே ஒரு மேஜையில் எதிர் எதிராக நான்கு பேராக உட்கார்ந்திருந்தனர். தட்டில் சாதமும், ஒரு பெரிய கரண்டியும் கொடுத்து சாப்பிடச் சொல்லப்பட்டிருந்தனர். ஆனால் அவர்கள் யாரும் பெரிய கரண்டி என்பதால் சாப்பிட முடியாமல் அப்படியே வைத்திருந்தனர். வேறு அறைக்கு அழைத்துச் சென்றிருக்கிறார். அங்கும் இதே மாதிரிதான். ஆனால் எல்லோரும் சாப்பிட்டுக் கொண்டிருந்தனர். எப்படி? இந்தப் பக்கத்தில் உள்ளவர்கள், எதிர்ப்பக்கத்தில் உள்ளவர்களுக்கும் ஒருவருக்கொருவர் ஊட்டிக் கொண்டிருந்தனர். முனிவர் சொன்னார், "சொர்க்கம் எங்கே இருக்கிறது? அவரவர் கையில் இருக்கிறது" என்று. அது போல் சூட்சுமமாக வேலை செய்தால் பலன் பலமாகவே கிடைக்கும்.

**- பி. ஜானகி, பாளையங்கோட்டை**

## மங்கையர் மலர் - வெள்ளி விழா போஸ்ட் கார்டு போட்டி! - 7

ஒவ்வொரு மாதமும் ஏதாவதொரு தலைப்பில் மினி கட்டுரைப் போட்டி! சிறந்த மூன்று 'போஸ்ட் கார்டு' கட்டுரைகளுக்கு முறையே **முதல் பரிசு, இரண்டாம் பரிசு, மூன்றாம் பரிசு** மேலும் **இரண்டு ஆறுதல் பரிசுகள்** உண்டு.

**போட்டி விதிமுறைகள் :**

* 50 பைசா போஸ்ட் கார்டில் மட்டுமே எழுத வேண்டும்.
* யார் வேண்டுமானாலும் கலந்து கொள்ளலாம்.
* கடைசித் தேதி 15.7.2005
* ஆசிரியர், மங்கையர் மலர், கல்கி பில்டிங்ஸ், 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 32 என்ற முகவரிக்கு அனுப்ப வேண்டும்.
* ஆசிரியரின் தீர்ப்பே இறுதியானது.




**ஆகஸ்ட் மாத போட்டித் தலைப்பு :**

**அழகு நிலையங்களுக்கு அதிகம் செல்வது ஆண்களா? பெண்களா?**

**உங்கள் கருத்தை போஸ்ட் கார்டில் எழுதி அனுப்புங்கள்.**

# ஆகஸ்ட் மாத மெகா போட்டி

2 நபருக்கு வீனஸ் ஹோம் அப்ளையன்ஸஸ் பிரைவேட் லிமிடெட் வழங்கும் வாட்டர் ஹீட்டர்.







1

இந்த படத்தில் நீங்கள் காண்பது என்னென்ன ?

படம் 1. விடை :



2

இந்த படத்தில் இருக்கும் தவறு என்ன ?

படம் 2. விடை :



மங்கையர் சக்தி
மகத்தான சக்தி

மங்கையர் மலர் வெள்ளிவிழா

(திருப்புக)

# ஆகஸ்ட் மாத மெகா போட்டி




**போட்டி விதிமுறைகள் :**

- ❑ முன்பக்கம் கொடுக்கப்பட்டிருக்கும் படங்களுக்கான விளக்கங்களை அந்தந்த விடை கட்டங்களிலேயே எழுதி கூப்பனுடன் இந்தப் பக்கத்தைக் கத்தரித்து அனுப்பவும்.
- ❑ அனைவரும் கலந்து கொள்ளலாம்.
- ❑ வயது வரம்பு இல்லை.
- ❑ எத்தனை கூப்பன்கள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- ❑ **கடைசித் தேதி : 15.7.2005**
- ❑ பரிசுகள் அனைத்தும் விதிமுறைகளுக்கு உட்பட்டவை.
- ❑ ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.
- ❑ சரியான விடை அளிப்பவர்களிலிருந்து குலுக்கல் முறையில் இருவர் பரிசுக்குரியவராகத் தேர்ந்தெடுக்கப்படுவர்.
- ❑ முகவரி : ஆசிரியர், மங்கையர் மலர், 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை-600 032.

பெயர்: ..............................................

வயது: ..............................................

முகவரி: ..............................................

..............................................

..............................................

..............................................

..............................................

தொ.பே. எண்: ..............................................

## ஜூலை மாத மெகா போட்டி முடிவு



| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 வ | ண் | ண | மீ | ன் | ■ | ல் | ய | தை 2 |
| ட | ■ | ■ | ■ | ளா | ■ | 3 நா | ■ | சி |
| க | ■ | ■ | ■ | கா 4 | ■ | ■ | ■ | ய |
| ம | ய | ண | நா 5 | ■ | 6 ஒ | வி | ய | ம் |
| ■ | ■ | ■ | ■ | ■ | ■ | ■ | ■ | ■ |
| பு | ம் | ரு | க 7 | ■ | வெ 8 | ந் | தி | லை |
| ப | ■ | ■ | ■ | பா 9 | ■ | ■ | ■ | ஒ |
| று | ■ | 10 க | ■ | ன | ■ | ■ | ■ | லை |
| 11 பொ | ம் | மை | ■ | ம் | ஏ | கா | ல | ப 12 |



பெயர்: S.KowSalya

பெயர்: R. அம்புலு

1. எஸ். கௌசல்யா, தூத்துக்குடி.
2. வானதி வரதராஜன், இராணிபேட்டை, வேலூர்.
3. ஆர். அம்புலு, திரிப்பாதிரிப்புலியூர், கடலூர்.

நான் நீண்ட நாட்களாக மங்கையர் மலர் வாசகி. அதில் வரும் கதை, கட்டுரைகள் சிறப்பானவை. இதன் மூலம் நிறைய ஊக்கமும், தைரியமும் அடைந்துள்ளேன். என் வாழ்வில் நடந்த துயரமான அனுபவங்களை இங்கு பகிர்ந்து கொள்ள விருப்பப்படுகிறேன். இதைப் படித்து மற்ற சகோதரிகள் விழிப்புடன் செயல்பட வேண்டுகிறேன்.

நானும் என் கணவரும் பிரபலமான ஓர் ஆன்மிக இயக்கத்திற்குச் சென்றோம். அங்கு வாழ்க்கைக்கு ஏற்ற சில நல்ல கருத்துகளையும், மனதை ஒருநிலைப் படுத்துவது பற்றியும் முதலில் சொன்னார்கள். போகப் போக 'அந்த இயக்கத்தை ஆரம்பித்தவர் உடலில் சிவன் பிரவேசம் ஆகி ஞானத்தைக் கொடுத்ததாகவும், இந்த இயக்கத்தைச் சேர்ந்தவர்களுக்கு மட்டுமே ஞானம் கிடைக்கும் என்றும் இவர்கள் தூய்மையானவர்கள்,' இவர்கள் மட்டுமே சத்திய யுகம் செல்ல முடியும் என்றெல்லாம் சொல்லி மூளைச் சலவை செய்ய ஆரம்பித்தார்கள்.

இந்த இயக்கத்தில் சேர்ந்தவர்கள் அம்மா, அண்ணன், சகோதரி யார் வீட்டிலும் சாப்பிடக் கூடாது. ஏனெனில், அவர்கள் நல்ல எண்ணத்துடன் சமைக்க மாட்டார்களாம்! இப்படிச் சொல்லிச் சொல்லி உறவினர்களிடம் இருந்து முதலில் பிரித்து விடுகின்றனர்., சதா ஆண்டவன் நினைவில் இருக்க வேண்டும். சொந்தங்கள், மனைவி, குழந்தைகள், கணவன் எல்லோரும் மாயை. நாம் கடமையைச் செய்து விட்டுக் குடும்பத்தில் இருந்து விடுபட்டு இருக்க வேண்டும். தேகம், தேக சம்பந்தங்களில் இருந்தும் விடுபட வேண்டுமாம்.




இப்படிச் சொல்லி என் கணவரைக் குடும்பத்தில் இருந்து விடுபட வைத்து விட்டார்கள்.

முதலில் வகுப்பு இலவசம் என்றார்கள். பின்பு தினமும் வர வேண்டும், இந்த

# இணையற்ற வாழ்க்கைத்தரம்...

## Madhuban

GRANDEUR IN SPACE

## "வசந்த வாழ்வின் விலாசம்"



**மதுபன்.** கோவை புலியகுளத்தில் ரெட் ஃபீல்ட்ஸ் அருகே எழிலுற உருவாகி வரும் ஓர் உன்னத அடுக்கு மாடி குடியிருப்பு. 'தேன் பொழியும் வனம்' என்ற அர்த்தம் கொண்ட இக்குடியிருப்பு தன் பெயருக்கேற்ப பல்வேறு இனிய சிறப்புக்களை பெற்றுள்ளது.

**வான் மழை பொய்க்கும் காலத்திலும், தேன் மழையாய் நிலைக்கும் சிறப்புக்கள்**

- இரண்டு / மூன்று படுக்கையறைகள் கொண்ட 25 அடுக்குமாடி குடியிருப்புகள்
- கூரையற்ற திறந்த வெளி லாபி
- உள்வர, வெளிச் செல்ல தனித்தனி வாயில்கள்
- குடியிருப்போர் கார்களுக்கென பாதுகாப்பான கார் பார்க்கிங் வசதி
- நீச்சல் குளம் மற்றும் உடற்பயிற்சி மையம்
- முற்றிலும் குளிரூட்டப்பட்ட ஓய்வு அறை
- குழந்தைகள் பூங்கா
- இண்டர்காம் வசதியுடன் 24 மணி நேர பாதுகாப்பு
- சென்ட்ரல் கேஸ் விநியோகம்
- இரு தானியங்கி லிப்ட்டுகள்
- தயார் நிலை ஜெனரேட்டர்
- கார்ப்பரேஷன் குடிநீர் மற்றும் சுத்திகரிக்கப்பட்ட ஆழ்குழாய் கிணற்று நீர்
- சூரிய வெப்பத்தில் இயங்கும் வாட்டர் ஹீட்டர்
- அதிநவீன தீயணைப்பு வசதி
- தண்ணீர் வீணாவதை தவிர்க்கும் அதி நவீன முறை
- சிறந்த, தரமான கட்டுமானப் பொருட்கள்
- அழகுற வடிவமைக்கப்பட்ட லேண்ட்ஸ் கேப்



**COVAI**
PROPERTY CENTRE
(INDIA) PRIVATE LIMITED

இத்திட்டங்களை நிர்மாணித்து வழங்குவோர் :

**Colonel A.Sridharan, VSM (Retd.),**

Mobile : 098943 17840

C-601, Pioneer Apartments,1075, Avinashi Road, Coimbatore - 641 018.
Ph : 91-422-2216867, 5572625. Fax : 91-422-2216867. Mobile : 098943-1784
www.covaiprop.com E-mail : covaiprop@vsnl.net

# நிகரற்ற சிக்கனத்தில்...

## Gem
## NIRMAALAYAM

### "தூய வாழ்வின் இனிய சங்கமம்"



**ஜெம் நிர்மாலயம்.** வாழ்வின் அதிமுக்கிய வசதிகளுடன், நிறைவு தரும் பசுமைச் சூழலில், உங்கள் குடும்பத்தின் விருப்பத்திற்கும், ரசனைக்கும் ஏற்ப வடிவமைந்த ஓர் பிரம்மாண்டமான குடியிருப்பு. நீங்கள் விரும்பும் நிம்மதி, அமைதி, இருப்பிடத் தூய்மை, பாதுகாப்பு உள்ளிட்ட அனைத்தும் சங்கமிக்கும் இந்த இணையற்ற விலாசம், கோவை மாநகரின் மையத்தில், காந்திபுரத்தின் மிக அருகே கணபதியில் 12 ஏக்கர் நிலப்பரப்பில் உங்களுக்கெனவே சிறப்புடன் உருவாகி வருகின்றது.

**சிறப்பு அம்சங்கள்**

• இரண்டு / மூன்று / நான்கு படுக்கையறைகள் கொண்ட 145 வீடுகள் (1190 முதல் 2965 சதுர அடி வரை) • வாஸ்து சாஸ்திர அடிப்படையில் உருவானவை • அத்திக்கடவு குடிநீர் • சுத்திகரிக்கப்பட்ட ஆழ்குழாய் கிணற்று நீர் • ஒவ்வொரு வீட்டிற்கும் சூரிய வெப்பத்தால் இயங்கும் வாட்டர் ஹிட்டர் • மதில் சுவர் • கழிவு நீர் வெளியேற வசதி • மழை நீர் சேமிப்பு வசதி • தெரு விளக்குடன் தார் சாலைகள் • இரு மருங்கிலும் மரங்கள் அமையப்பெற்ற நடைபாதைகள் • கிளப் ஹவுஸ் • ஹெல்த் கிளப் • கூடைப்பந்து, வாலிபால் விளையாட மைதானங்கள் • குழந்தைகள் பூங்கா • மின்னொளி வசதி மற்றும் செயற்கை புல்தரை கொண்ட டென்னிஸ் கோர்ட் • இண்டர்காம் வசதியுடன் 24 மணி நேர பாதுகாப்பு • வணிக வளாகம் • பல சிறப்பு மருத்துவ கிளினிக் • தானியங்கி லிப்ட் • தயார் நிலையில் ஜெனரேட்டர் • தீ விபத்து, கலவரத்தால் விளையும் சேதாரம், நிலநடுக்கம் போன்றவற்றிற்கு 10 வருட காப்புரிமை இலவசம்.

எமது இதர திட்டம்

## சௌந்தர்யம்

சிறுவாணி ரோடு, கோவை

(For people above 50 years of age)

Phase 1 - அனைத்தும் விற்பனையாகிவிட்டது

Phase 2 - அறிவிப்பு விரைவில்

Consulting Architect for all projects :
**Ms. Mini M. Fowler**

Our Chennai Representative :
**Ms. Gita Ramesh,**
**Ph : 044 - 24463063**

**முன்னாள் ராணுவ வீரரின் சேவை நிறுவனம்**

Manipal/CPC05

ஆன்மிகக் குடும்பத்திற்கான செலவை நீங்கள்தான் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்றார்கள். என் கணவரும் மற்றும் இங்கு வரும் எல்லோரும் மாதந்தோறும் ஒரு தொகையைக் கொடுத்து வருகிறார்கள். அடிக்கடி சேவை, சேவை என்று பணமாகக் கேட்கின்றார்கள்.

இவர்கள் திருஷ்டி என்ற பெயரில் கண்ணை இமைக்காமல் (நிமித்தமான சகோதரர், சகோதரி) மற்றவர்களை பார்க்கின்றார்கள். மற்றவர்களும் இமைக்காமல் பார்க்க வேண்டும். அதன் பிறகுதான் வகுப்பு எடுக்கின்றார்கள். அதில் அவர்கள் சொல்வது புத்தியில் பதிய ஆரம்பித்து விடுகிறது. அவர்கள் என்ன சொன்னாலும் கடவுள் சொன்னதாக எடுத்துக் கொள்கிறார்கள்.

இந்த இயக்கம், வேலை பார்க்கும் ஆண், பெண் செல்வந்தர்களை தங்களின் சொல்படி கேட்கும்படி வைத்துள்ளது. ஒவ்வொருவரும் தங்களின் வருமானத்தில் பாதியை ஆன்மிக சேவைக்குக் கொடுக்க வேண்டும் என்பது இங்கு கட்டாய விதி!

இந்த இயக்கத்திற்கு நிறைய மாணவி, மாணவர்களும் வருகின்றார்கள். அவர்களிடம் குறிப்பாக இளம்பெண்களிடம், "கல்யாணம் செய்து கொள்வது படுபாதாளத்தில் விழுவதற்குச் சமம். அவர்கள் தங்களை கடவுளின் சேவைக்கு அர்ப்பணித்து சேவை செய்தால் சத்திய யுகத்தில் உயர்ந்த பதவி கிடைக்கும். மேலும் தினமும் வகுப்பிற்கு வந்தால் உயர்ந்த பதவி கிடைக்கும்" என்றெல்லாம் கூறி மூளைச் சலவை செய்கிறார்கள்.

பிறகு, பெண்கள் பெற்றோரை எதிர்த்து சேவையில் சரண்டர் ஆகிவிடுகிறார்கள். காலை, மாலை 6.30 முதல் 8.00 மணி வரை வகுப்பு நடைபெறும். குறிப்பிட்ட நேரம் வந்ததும் போதை மருந்துக்கு அடிமையானவர்கள் போல இவர்கள் இந்த வகுப்புச் செல்ல ஆரம்பித்து விடுகிறார்கள். குடும்பத்தைக் கவனிக்காமல் அவர்கள் புத்தி முழுவதும் அங்கேயே உள்ளது.

இதில் நுழைந்து விட்டால் வெளியே வர முடியாது. என் கணவரை எவ்வளவோ சொல்லியும், அவரை திருத்தி வெளியே கொண்டு வர முடியவில்லை. சகோதரிகளே இங்கு இதைப் போல நிறைய ஆண்களும், பெண்களும் மாட்டிக் கொண்டு பல குடும்பங்கள் கஷ்டப் படுகின்றன.

இத்தகைய கொடுமைகளுக்கு என்றுதான் விடிவுகாலம்? பெண்களுக்குப் பெருமை சேர்க்கும் நமது தமிழக முதல்வருக்கு, கணவரே உலகம் என்று வாழ்ந்து வரும், இந்த அபலையின் சிறிய வேண்டுகோள் : இப்படிப்பட்ட ஆன்மிக இயக்கங்களைக் கட்டுப்படுத்த அரசு சட்டம் இயற்றுமா?

**- கண்ணீரில் தத்தளிக்கும் ஒரு மங்கையர் மலர் வாசகி.**

### வேண்டாமே!

**பேசாத ஒரு குண்டூசி இரண்டு பேப்பர்களை இணைக்கிறது. குத்தும் ஊசி கூட, பொத்தல் தெரியாமல் தைக்கிறது. பேசும் மனிதனும் நளினம் தெரிந்தவனும், பெண்மையைத் தனிமைப்படுத்துவதேன்?**

**- என். சாந்தி நடராசன்.**

# 'பல்லாங்குழியில்' சீதாப்பாண்டி!

பல்வேறு பல்லாங்குழி விளையாட்டுக்களிலேயே இறைத்தத்துவத்தை தன்னுள் அடக்கிய வித்தியாசமான விளையாட்டு இந்த சீதாப்பாண்டி.

இந்த விளையாட்டை ஒருவர் மட்டுமே(!) விளையாட முடியும். எதிராளி கிடையாது!

வெற்றியுமில்லை; தோல்வியுமில்லை அதுமட்டுமல்ல, முடிவும் இல்லை; ஆனாலும் சுவாரஸ்யத்துக்கு பஞ்சமும் இல்லை! அக்காலப் பெண்டிரின் கணித அறிவுக்குச் சான்றாக விளங்கும் இதை விளையாடுவது எப்படி?

எதிரெதிர் வரிசையில், ஏழு குழிகளிலும் 1, 2, 3, 4, 5, 6, 7 என்று ஏறு வரிசையில் காய்களைப் போட வேண்டும்.

⑦ ⑥ ⑤ ④ ③ ② ①

① ② ③ ④ ⑤ ⑥ ⑦

இப்போது -

ஏதேனும் ஒரு பக்கத்தில் (பொதுவாக வலது கைக்கு அருகில் இருக்கும்) குழியில் இருக்கும் ஏழு காய்களை எடுத்து, குழிக்கு ஒன்றாகப் போடவும். முடிந்ததும் அதற்கு அடுத்த குழியில் இருக்கும் காய்களை எடுத்து இதே போலப் போடவும். தொடர்ந்து இதே போல (தடவும் பாண்டி போல) போட்டு விளையாடி வரவும். தடவும் பாண்டியில், கையிலிருக்கும் சோழி காலியானவுடன், பிரிக்க வேண்டிய குழியும் காலியாக இருக்குமானால், அதைத் தடவி அடுத்த குழியில் உள்ளதை எடுத்துக் கொண்டு, எதிராளிக்கு ஆட விட்டு விட வேண்டும்.

ஆனால் -

இதில் எத்தனை நேரம் ஆடினாலும்



பிரிக்க வேண்டிய குழி காலியாக இருக் கவே இருக்காது. ஆகவே எதிராளிக்கு வேலையே கிடையாது! சுற்றிச் சுற்றி வந்து கொண்டே இருக்கும். சோழிகள் ஒவ் வொரு சுற்றுக்கும் ஒருவித லயத்துடன் குழிகளில் அமைவது சுவாரஸ்யம். கவனம் சிறிது சிதறினாலும், பிரிக்க வேண்டிய குழி காலியாக காட்சி அளித்து 'டக்'கென ஆட்டம் நின்று விடும்.

நீண்ட சுற்றுகளுக்குப் பின் நாம் ஆரம்பத்தில் போட்ட அதே வரிசையில் குழிகளில் காய்கள் சேர்ந்து மறுபடி பிரியும் - பிரபஞ்சம் திரும்பத் திரும்ப ஆரம்ப நிலைக்கே ஒடுங்கி விரிவது போல!

அது சரி! அதென்ன பெயர் சீதாப் பாண்டி? வாஸ்தவத்தில் இது விளையாட் டல்ல; சீதாப்பிராட்டியாரின் தவம்! அசோகவனத்தில், தலைகுனிந்தபடி தரையில் குழிகள் பறித்து அங்குள்ள பழங் கள், விதைகளை ஒவ்வொரு குழிக்கும் ராமநாமத்தை ஜபித்தபடி இடைவிடாது வேறு சிந்தனையே இன்றி போட்டுக் கொண்டே இருந்தாளாம், முடிவில்லாத ராமஜபத்தின் அடிப்படை யில் பிறந்ததே சீதாப்பாண்டி.

- எஸ். பட்டம்மா

**சீ**தாப்பாண்டியை பற்றி எழுதி அனுப்பியிருக்கும் மேலும் இரு வாசகிகள் ஆர். சபீதா, டி.கே. சீதாலட்சுமி.

## ராஜா பாண்டி

**ப**ல்லாங்குழியில் விதவிதமான விளை யாட்டுகள் பற்றி, கோமதி நமசிவாயம் என்ற வாசகி எழுதியதைப் படித்ததும், சிறு வயதில் எங்கள் ஊரில் நாங்கள் விளையாடியதை மனக்கண்ணில் கண்டு களிக்கிறேன். எனக்குத் தெரிந்த ஒரு வகை பல்லாங்குழி விளையாட்டை எழுது கிறேன் :

இதற்கு ஒவ்வொரு குழியிலும் 12 முத்துக்கள் வீதம் மொத்தம் 12X14 = 168 முத்துக்கள் தேவை. இருபுறமும் நடுகுழி ராஜா குழி ஆகும். இதை விளையாட

## 4 இன் 1 பல்லாங்குழி



எங்கள் ஊர் கடையில் விசாரித்ததில் 'பல்லாங்குழி' கிடைக்கவில்லை. உடனே வேண்டும் என குழந்தைகள் அடம்பிடிக்க, கடையில் ஆறு முட்டைகள் வைக்கும் பெட்டியை வாங்கினோம். மூடியையும் சேர்த்து 12 குழிகள் இருந்தன. ஆனால், 'காசி பொத்த' நடுவில் பக்கத்திற்கு ஒன்றாக இரு குழிகள் தேவைப்பட்டது. அதற்கு சின்ன ஐஸ்க்ரீம் (25 மில்லி) கப் இரண்டை வைக்க பல்லாங்குழி 'ரெடி...' எங்களிடம் பல்லாங்குழி ஆட சோழி இல்லை, புளியங்கொட்டையும் இல்லை. வீட்டில் சமைப்பதற்காக வைத்திருந்த 'ராஜ்மா' (பெரிய காராமணி போன்றது)வை சோழிக்குப் பதிலாக வைத்துக் கொண்டோம்!

பி.கு : முட்டை சாப்பிடாதவர்கள், ஆடி முடிந்தபின் இதில் பட்டன், பின், ஊசி என்று போட்டு வைத்துக் கொள்ளலாம்.

மார்கழி மாதம் ரங்கோலி போட கலர் பொடிகள் வைத்துக் கொள்ளலாம்.

ஃபேப்ரிக் பெயிண்ட் செய்ய கலர் மிக்ஸ் பண்ண ரொம்ப உபயோகமாக இருக்கும்.

- சங்கரி வெங்கட்

இருவர் தேவை. ஒரு குழி முத்துக்களை எடுத்து வரிசையாக ஒவ்வொன்றாகப் போட வேண்டும். முடியும் போது எந்தக் குழியில் போடுகிறோமோ, அதை எடுத்து ஆட வேண்டும். முடியும் போது குழி காலியாக இருந்தால், அதில் போட்டு விட்டு, அடுத்தவரை ஆட விட வேண்டும். பிரித்து ஆடிய குழியில் 6 முத்துக்கள் சேர்ந்தால், 'பசு' என்று எடுத்துக் கொள்ளலாம். குழியில் 5 முத்துக்கள் இருக்கும் போது கடைசி முத்தை அதில் போட நேர்ந்தால் அது 'பசு' ஆகாது.

இரண்டு வரிசைகளிலும் நடுவில் 4 முத்துகள இருக்கும் குழி ராஜாகுழி. ராஜா குழிக்கு வலதுபுற முத்துகளை எடுத்து ஆடும்போது எதிர் வரிசை ராஜா குழியில் கடைசி முத்து விழுவதற்குள் எதிராளி அந்தக் குழியைப் பொத்திக் கொள்ள வேண்டும். அசந்து விட்டால் ஆடுபவர் அந்தக் குழியைப் பொத்தி முத்துக்களை எடுத்துக் கொள்ளலாம். பொத்தி எடுத்த பின்பு அந்தக் குழியில் முத்துக்கள் சேராது!

சில சமயம் இரண்டு ராஜா குழிகளையும் ஒருவரே பிடித்துக் கொள்வதும் உண்டு. கவனமாக, சாமர்த்தியமாக விளையாட வேண்டும். இது விளையாட, சிறிது சிக்கலாகத் தோன்றுகிறதல்லவா? அதனால்தான் இது "ராஜாபாண்டி". விளையாட விளையாட ஈஸியாக இருக்கும்.

- கமலா ராஜசேகரன்

பித்தளைப் பாத்திரங்களைப் பளபளவென துலக்கியவுடன், அதன் மேல், தோல் சீவிய பச்சை உருளைக்கிழங்கை வைத்து தேய்த்து வைத்தால், வெகு நாட்கள் பளபளப்பு குறையாமல் இருக்கும்.

- ஏ. ஹம்ஸத்



பொதுவாக எல்லாத் துறைகளிலும் பெண்கள் வந்து விட்டார்கள். ஏன் புகைப்படத்துறையை நிறையப் பேர் தேர்வு செய்வதில்லை என்பது எல்லோரும் கேட்கும் கேள்வி. இதற்குப் பத்திரிகைகளுக்கு ஃப்ரிலேன்ஸ் புகைப்படக்காரராகவும், சொந்தமாக ஸ்டுடியோ நடத்தி வருபவருமான ஸ்ரீஹரி இத் துறையைப் பற்றி அழகாக விளக்கமளிக்கிறார். ஆண்களே கோலோச்சும் இத் துறையில் பெண்களும் அதிகம் வர வேண்டும்.



புகைப்படக் கலைஞர்களுக்கு நேரம், காலம் எதுவும் கிடையாது, எந்த நேரத்திலும் வெளியே செல்ல வேண்டும். உதாரணத்திற்கு விழாக்களை படமெடுக்கச் செல்லும் போது சில நேரங்கள் மேடைகள் மீது, ஓடி, குதித்து எடுக்க வேண்டி வரும், அதே போல விழாக்கள் முடிய இரவு வெகுநேரம் ஆகி, அதிகாலையில் திரும்பிச் செல்ல வேண்டியிருக்கும். இந்தச் சங்கடங்களையெல்லாம் பெண்கள் பொறுத்துக் கொண்டு, திறமையாக முடியும் என்ற பட்சத்தில் காமிராவை தோளில் தூக்குவது எளிதான காரியமே.

புகைப்படத் துறையில், பத்திரிகை, விளம்பரம், மாடலிங், ஃபேஷன், விழா புகைப்படம் என்று பல பிரிவுகள் உண்டு. நாம் எந்தத் துறை எடுக்கப் போகிறோம் என்று முதலில் முடிவு செய்து கொள்ள வேண்டும். இப்போது எல்லாக் கல்லூரிகளிலும் 'விஷுவல் கம்யூனிகேஷன்' மூலமாக புகைப்படக் கலையைப் பாடமாக நடத்துகிறார்கள்.

# ஸ்மைல்








# ப்ளீஸ்!

அடிப்படைக் கல்வி, கணினி அறிமுகம் இருந்தால் புகைப்படத் துறையின் அடுத்த பரிமாணமான 'டிஜிட்டல் ஃபோட்டோகிராபி'யை எல்லோரும் கையாள முடியும். இந்த காமிராவிற்கு ஃபிலிம் ரோல் தேவையில்லை. மெக்கானிகல் ஷட்டர் மூலமாக இயங்குவதால் படங்கள் மிகத் தெளிவாக, துல்லியமாக எடுக்க முடியும்.


● ஸ்ரீஹரி

பத்திரிகைகளுக்கு புகைப்படம் எடுப்பது ஒரு தனி அனுபவம்தான். ஒரு சமயம் முன்னாள் பிரதமர் வாஜ்பாய் பிரதம மந்திரி பதவியேற்ற பிறகு சென்னை ராஜ்பவனில் பத்திரிகையாளர்களைச் சந்தித்தார். கடுமையான சோதனைக்குப் பின்பு படம் எடுக்க உள்ளே சென்றோம். அவருடைய படம் தான் இந்த வாரம் அட்டையில் வருகிறது, நன்றாக எடுத்து வா என்று ஆசிரியர் கூறியதை நினைவில் கொண்டு உள்ளே சென்ற எனக்கு பயங்கர அதிர்ச்சி.


● வாஜ்பாய்

இருபதடி தூரத்தில் எங்களுக்கு இடம் ஒதுக்கியிருந்தார்கள். என்ன செய்வது ஜூம் லென்ஸ் போட்டு எடுக்கலாம் என்றால் பிரதமரின் செக்யூரிட்டி வாயிலில் பேக்கை வாங்கி வைத்து விட்டார்கள். மற்ற எல்லோரும் படங்கள் எடுத்துக் கொண்டிருந்தார்கள். என்னால் எடுக்க முடியாமல் கண்கலங்கி, என்ன செய்வது நல்ல சந்தர்ப்பத்தை இழந்து விட்டோமே, நாம் தொழிலுக்கே லாயக்கில்லை என்றெல்லாம் நினைத்து கிட்டத்தட்ட அழுது விட்டேன்.



சற்று நேரத்தில் சுதாரித்து விட்டேன். அமைதியாக இருந்தேன். நடப்பது நடக்கட்டும் என்று காத்திருந்தேன். கிட்டத்தட்ட நிகழ்ச்சி முடியும் தருவாயில், நான் மிக அருகில் சென்று, அவரை எல்லோரை விடவும் குளோஸப்பில் விதவிதமாக எடுத்தேன்.

பின்பு பிரதம மந்திரியின் செக்யூரிட்டியால்

## புதிதாகத் தொழில் தொடங்குவோருக்கு டிப்ஸ்:

1. பிரதம மந்திரியின் ரோஜ்கர் யோஜனா மூலமாக இரண்டு இலட்சம் வரை கடன் பெறலாம்.

2. ஸ்டூடியோ நல்ல பளிச்சென்று, குடியிருப்புகள், முக்கியமாக பள்ளிகள் நிறைந்த இடத்தில் வைக்கலாம்.

3. ஸ்டூடியோவிற்கு வருபவர்கள் வியக்கும்வண்ணம் நல்ல அழகான படங்கள், கலர்ஃபுல் பேக்கிரவுண்ட், அன்பான உபசரிப்பு, குறித்த நேரத்தில் படங்களைத் தருதல் போன்றவை மக்கள் உங்கள் இடத்திற்கே திரும்பத் திரும்ப வருவார்கள்.

## அழகான படங்கள் எடுக்க டிப்ஸ் :

1. மேக்-அப் லைட்டாக இருக்கும்வண்ணம் பார்த்துக் கொள்ள வேண்டும். இல்லையெனில் லைட்டிங்கின் வெளிச்சத்தால் முகத்தில் உள்ள பவுடர் ப்ளீச்சாக வாய்ப்புள்ளது.

2. பருமனான முகமுடையவர்களை குளோஸ்-அப் ஷாட் எடுக்காமல் சற்றே வொயிட் ஷாட் படங்கள் எடுத்தால் அழகாக இருக்கும்.

3. ஒரு படம் எடுக்கும் முன்பு அதை எந்தக் கோணத்தில் எடுக்கலாம் என்று மனதில் சற்று அலைபாய விடுங்கள். நிச்சயமாக ஒரு கோணத்தில் அந்தப் படம் அருமையாக அமையும்.

4. நம்மைச் சுற்றி நடக்கும் விஷயங்களைக் கவனித்துக் கொண்டு, நம் மனதை இளமையாக வைத்துக் கொண்டால், நம்மால் நல்ல அழகான படங்களைத் தர முடியும்.

கடுமையாக எச்சரிக்கப்பட்டாலும், நான் எடுத்த அந்தப் படம் அட்டைப் படத்தில் பார்த்து பல பேர் பாராட்டிய போது கிடைத்த சந்தோஷமே, எனக்கு, இனி எந்த நேரத்திலும் பதற்றப்படக் கூடாது என்ற பாடத்தைக் கற்றுக் கொடுத்தது.

"நீங்கள் எடுத்த படம் என்னை விட அழகாக இருக்கிறது" என்று சமீபத்தில் பாரதிய ஜனதாவின் அகில இந்திய செயலாளர் இல. கணேசன் அவர்கள் எனக்குக் கடிதம் எழுதியிருந்தார்.

ஆம்! ஒருவரை நாம் படமெடுக்கும் விதமே அவரை அழகாகக் காட்ட முடியும். ஒருவரை நேராக நிற்க வைத்து படமெடுத்தால் நன்றாக இருப்பார். மற்றொருவர் பக்கவாட்டில் படமெடுத்தால் நன்றாக இருப்பார். இப்படி ஒவ்வொருத்தரையும் நம் காமிரா கண்களால் தேர்வு செய்ய வேண்டும்.

பின்பு ஃபோட்டோகிராபியில் முக்கியமாக நாம் பார்க்க வேண்டியது லைட்டிங் செய்வது. ஸாஃப்ட் லைட்டிங்கில் நல்ல தெளிவான அழகான படங்களை எடுக்க முடியும். நல்ல படத்திற்கு உதாரணமே நம் மனதை சற்று நேரம் நிற்க வைத்துச் செல்வது தான்.

பெட்டகம் I, பெட்டகம் II அட்டை
வண்ணப்படம் : **ஸ்ரீஹரி**





ரசிகர்களின் நினைவில் இன்றும் மலர்ந்திருக்கும் திருமதி. சரோஜாதேவியை ஒரு மாலை வேளையில் காணச் சென்ற போது இன்முகத்துடன் நம்மை வரவேற்றார்.

# நான் பேச நினைப்பதெல்லாம்...

**"தங்களது வாழ்க்கையில் மகிழ்ச்சியான நாள், துயரமான நாள் எது?"**

திரு ஹர்ஷாவை மணந்த நாள் மகிழ்ச்சிகரமான நாள். கிடைத்தற்கரிய பொக்கிஷமான அவரை இழந்தது என் வாழ்வின் துக்கமான நாள். ஒரு சமயம் என் குடும்ப நண்பர் ஒருவர் நான் நடித்த 'அன்பே வா!' படத்தைப் பார்த்து விட்டு அன்று முழுவதும் இரவு தூங்கவில்லை என்றார். இதைக் கேட்ட என் கணவர் மிகப் பெருமையாகச் சந்தோஷப்பட்டார். எப்படிப்பட்ட உயர்ந்த உள்ளம்; அந்த நிலையில் வேறு ஆணாக இருந்தால் தன் மனைவியை மற்றவர் புகழ்வதில் பொறாமைப்படுவார்கள். அதற்கு விதிவிலக்கு என் கணவர்.

**"தற்சமயம் திரை உலகின் நிலை...?"**

"திரை உலகம் டெக்னிகலாக முன்னேறி இருக்கிறது. படம் எடுக்கும் கருவிகளும் புதுமையாக வந்திருக்கின்றன. இப்பொழுதும் நல்ல படங்கள் பல வரத்தான் செய்கிறது. ஆனால் ஒரே மாதிரி கதைகள், ஆபாசமான காட்சிகள், நடனங்கள் அடங்கிய படங்களும் ஏராளம். இப்படிப்பட்ட படங்களை ரசிகர்கள் நிராகரித்தால் தரமான படங்கள் தானாக வரும்.

**"தற்போதைய பெண்கள் நிலை...?"**

வீட்டில் பணிபுரியும் இல்லத்தரசிகளுக்குப் பலவித பிரச்னைகள். வீட்டினுள் சண்டை, பூசல்கள்

வேறு இருக்கும். ஆனால் அது வெளியில் தெரியாது. இந்த வகைப் பெண்களுக்கு ஒருவிதத்தில் சௌகரியமும், சில அசௌகரியங்களும் உண்டு.

வேலைக்குச் செல்லும் பெண்களுக்கு மாதா மாதம் பணம் கையில் கிடைக்கிறது. ஆனாலும் அவர்களுக்கும் வேறு வகையில் அசௌகரியங்கள். வீட்டு வேலைகள் செய்து விட்டு பணி, அலுவலகம் செல்ல வேண்டிய நிர்ப்பந்தம்.

**நடிகைகளின் வாழ்வு பற்றி...?**

மக்கள் நினைவில் இருக்கும் பிரபலங்கள் என்ற விதத்தில் அரசியலில் ஈடுபடுபவர்களுக்கு இப்பொழுது மிக சௌகரியங்கள் இருக்கிறது. ராஜ்ய சபா மெம்பராக தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். நேரிடையாக உயர்பதவி சர்க்காரிடமிருந்தே அவர்கள் வாழ்க்கைச் செலவுகள் சமாளிக்கப்படுகிறது. பல எதிர்ப்புகளைச் சமாளிக்கும் பக்குவமும் இவர்களுக்கு இருக்க வேண்டும்.

நடிகைகள் - இவர்கள் வாழ்க்கை மற்றவர்களை பிரமிக்கச் செய்யும் மாயவலை. பிரபலங்கள் என்ற வரிசையில் மக்கள் நினைவில் அதிகம் நிற்பவர்கள். எந்த காட்டிலும், கிராமங்களிலும் மக்கள் சுலபமாக அடையாளம் கண்டுபிடித்து அவர்கள் அன்பைப் பெறும் பாக்கியம் உள்ளவர்கள் நடிகைகள். ஆனால், அதே ரசிகர்கள், சகோதரனாக, தோழனாக நினைத்து சக நடிகர்களுடன் சிறிது சுதந்திரமாக நடந்து கொண்டாலோ, உடனே அந்த நடிகருடன் நடிகைக்கு எந்தச் செலவும் இல்லாமல் (கற்பனையில்) திருமணமே நடத்தி முடிந்து விடுவார்கள். ஆக, இந்த வாழ்க்கையில் பல சிக்கல்கள் உண்டு என்பது அதில் பழகியவர்களுக்கே தெரியும்.

மொத்தத்தில் ரசிக ரசிகைகளின் எந்த உணர்ச்சிகளையும் ஈடுகொடுத்து சமாளிக்க வேண்டிய பக்குவமும், கட்டாய நிலையும் நடிகை என்ற பெண்களுக்கு இருக்க வேண்டும்.

இங்கு ஒன்று குறிப்பிட விரும்புகிறேன். எந்த வகை பெண்களானாலும், மாமியார் மருமகள் என்ற உறவுகள் ஏற்பட வாய்ப்புண்டு. மாமியார், மருமகளை பெண்ணாகவும், மருமகள் மாமியாரை தாயாகவும் நினைக்க வேண்டும். பெண்களில், கணவனை இழந்த பெண் இந்தச் சமூகத்தில் மிகவும் கீழ்த்தரமாக நடத்தப்படுகிறாள். பெண் உரிமைக்கு குரல் எழுப்பும் பெண்களே, பெண்களுக்கு எதிரியாக இருக்கிறார்கள். கைம்பெண்ணிற்கு மங்கல நிகழ்ச்சிகளில் பங்கு கொடுத்து வரவேற்பதில் பெண்கள் மிகக் கடுமையாக நடந்து கொள்கிறார்கள். அவளும் பெண் தானே; மங்கலச் சின்னங்களுடன் வாழ்ந்தவள்தானே. கணவனை இழந்து விட்டால் அவர்கள் எல்லாவற்றையும் இழக்க வேண்டுமா?

பெண்களே சிறிது சிந்தித்துப் பாருங்கள். சமூக மூடநம்பிக்கைகளை மாற்ற முன்வாருங்கள். இது எனது வேண்டுகோள்'' என்று மிக உணர்ச்சியுடன் கூறுகிறார்.

பல அலுவலகளிடையே நம்மிடம் பகிர்ந்து கொண்டு, மனம் விட்டுப் பேசிய திருமதி சரோஜா தேவியிடம் நன்றி தெரிவித்து விடைபெற்றோம்.

(ஒரு ரகசியம். திருமதி சரோஜா தேவி வீட்டில் தயாரிக்கும் காப்பி மிக ருசி. மிக அருமை. அவர்கள் வீட்டிற்குச் செல்பவர்கள் காப்பியைக் கேட்டு வாங்கி சாப்பிடத் தவறி விடாதீர்கள்.)

நேர்காணல்: **சியாமளா நாராயணன்**



**ஹைக்கூ?**

**வீட்டின் முன், பசுமையாய் மாமரம்;**
**வரவேற்பறையை அலங்கரிப்பதோ,**
**பிளாஸ்டிக் மாவிலைத் தோரணம்.**
**- எஸ்.பி. சுசீலாதேவி.**

‘மங்கையர் சக்தி மகத்தான சக்தி' என்பது உண்மைதான். அதற்கு ஓர் உதாரணம்தான் ஆபிதா. அப்பொழுது நான் +2 முடித்து விட்டு ஒரு வருடம் வீட்டில் இருந்தேன். அந்தச் சமயத்தில் இலவச தையல் பயிற்சி ஒன்றை அரசு அறிவித்திருந்தது. நான் ஒரு அப்ளிகேஷன் எழுதிக் கொண்டிருந்தேன். 18 வயதுக்கு மேற்பட்டவர்கள் மட்டுமே சேர்க்கப்படுவர் என்றன விண்ணப்ப வரிகள். அப்பொழுது என்னைத் தேடி வந்த எங்கள் பக்கத்து வீட்டுப் பெண் ஆபீதா (வயது 14) “அக்கா எனக்கும் தையல் படிக்க ஆசையாய் இருக்கு” என்றாள். ஆபீதா பள்ளிப் படிப்பைப் பாதியில் விட்டவள். முஸ்லீம் பெண் வீட்டை விட்டு எங்கேயும் செல்ல மாட்டாள். இருப்பினும் “சரி எழுதி அனுப்பு” என்று கூறி நானே அவளுக்கு ஒரு அப்ளிகேஷனை எழுதி அனுப்பினேன்.






எனக்கு மட்டும் இன்டர்வ்யூ கார்டு வந்திருந்தது. ஆபிதாவுக்கு வரவில்லை. ஆபீதாவுக்கு ஏமாற்றம் ஏற்பட்ட போதிலும், “அக்கா உங்களுக்குத் துணைக்கு வருகிறேனே” என்றாள். வரும் பொழுது ஒரு தாவணி ஒன்றையும் முதன் முதலாகச் சுற்றி வந்தாள். உயரமாக இருந்ததால் பெரிய பெண் போன்ற தோற்றத்தை அடைந்திருந்தாள். இன்டர்வியூ வெட்டவெளியில் நடந்தது (பந்தல் போடப்பட்டிருந்தது). இரண்டு பெண்கள் நடத்துனர்களாக அமர்ந்திருந்தனர். அப்பொழுது ஆபீதா அந்த ஆபீஸர்களை நெருங்கி, “மேடம் எனக்கு ஏன் இன்டர்வியூ கார்டு வரவில்லை?” என்றாள். அதற்கு அந்தப் பெண்மணிகளுள் ஒருவர், “உனக்கு வயது போதாதும்மா அப்படி ஓரமாய்ப் போய் நில்லு” என்றார். ஓரமாய் நின்றாள் ஆபீதா!

# முயற்சி திருவினையாக்கும்!

இன்டர்வியூ நடக்கத் துவங்கியது. இடையிடையே சிலர் ஆப்சென்ட் ஆகியிருந்ததை அறிந்த ஆபீஸர் அந்த அப்ளிகேஷன்களை ‘ஆப்சென்ட்’ என்று விலக்கி அருகிலிருந்த பெண்ணிடம்



மங்கையர் சக்தி மகத்தான சக்தி

மங்கையர் மலர் வெள்ளிவிழா

கொடுத்த உடனே, ஆபீதா ஓடிச் சென்று, "அந்த 'ஆப் சென்ட்' இடத்தில் என்னைச் சேருங்கள்" என்றாள். இப்படியே 2, 3 முறை தொடர்ந்து கேட்டாள். சற்றே எரிச்சலடைந்த அந்த ஆபீஸர் ஆபீதாவை நோக்கி, "இன்னொரு முறை அருகில் வந்தால் வாட்ச்மேனை விட்டுத் துரத்துவேன்" என்றார். சற்றே ஏமாற்றத்துடன் திரும்பிய ஆபிதா பின்னாடி சென்றாலும் அவர்கள் பார்வையில் படும்படியே நின்று கொண்டாள். ஒருவழியாய் இன்டர்வியூ முடிந்தது. அந்த ஆபீஸர்கள் இருவரும் ஆபிதாவைக் கைகாட்டி ஏதோ பேசினர். முடிவில் ஆபீதாவை அழைத்து, "உன்னையும் செலக்ட் செய்து விட்டோம்" என்றார்கள். ஆபீதாவின் மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. பிறகு இருவரும் சேர்ந்தே தையல் வகுப்புக்கு செல்வோம். வீட்டிற்கு வந்த பிறகும் தைப்பதில் அதிக ஆர்வம் காட்டுவாள் அவள்.

பிறகு இருவருக்கும் திருமணமாயிற்று. பல வருடங்கள் கழித்து ஆபீதாவை சமீபத்தில் சந்தித்தேன். வீட்டிலேயே தையல் வகுப்பு வைத்திருக்கிறாள். அது போக இரண்டு டெய்லரிங் கடை வைத்திருக்கிறாள். தனது தையல் வகுப்பில் தனது சித்தி பிள்ளைகளுக்கு வேலை வாய்ப்பு கொடுத்திருக்கிறாள். தகப்பனற்ற அந்தப் பிள்ளைகளுக்கு தையலே பொருளாதார ரீதியாக உதவுகிறது. ஆபீதா இன்று அவளின் குடும்பத்துக்கு ஒரு நம்பிக்கை நட்சத்திரம். அவளின் விடா முயற்சியை நான் அடிக்கடி நினைத்துக் கொள்வேன் - இன்டர்வியூவில் அவளை செலக்ட் செய்யக் காரணம்தான் என்ன? தொடர்ச்சியான விடாமுயற்சி. நீங்கள் இடம்கொடுத்தே ஆக வேண்டும் என்ற தீவிரம். சரி! அடுத்து கிடைத்த பிறகும் அதைத் திறம்பட விரிவாக்கம் செய்தது. அந்தக் காலகட்டத்தில் ஒரு முஸ்லீம் பெண் தைரியமாகச் செயல்பட்டால் அதற்கு வரவேற்பு இருக்காது. அந்த நிலையிலும் தனி ஒரு மனுஷியாய் போராடி வெற்றி கண்டாள். இன்று எங்கள் ஊரின் சிறந்த தொழில் அதிபர்களில் ஒருத்தி ஆபீதா என்றால் அது மிகையாகாது. ஆபீதா எப்படி இப்படி ஒரு வளர்ச்சி? என்று யாரேனும் கேட்டால் 'இதுவல்ல வெற்றி! என் இலக்கு இன்னும்! பெரிய அளவில்' என்கிறாள். மேலும், மேலும் உழைக்க வேண்டும். இதுபோதாது என்கிற இந்தப் பெண்ணின் சக்தி மகத்தான சக்திதானே! அவள் மேலும் முன்னேற்றமடைய மனதார வாழ்த்தி விடை பெற்றேன்.

**- ஜி. அருள்ராணி**

## தேடினாலும் கிடைக்காது!



குழந்தைகளின் உடைகளில் ஏற்பட்ட கறைகள் எவ்வளவு துவைத்தாலும் போகவில்லையா? கறை உள்ள இடங்களின் மேல், கிட்டத்தட்ட கறையின் நிறத்திலேயே ஃபேப்ரிக் பெயிண்ட் கொண்டு ஏதாவது டிசைன் வரைந்து விடுங்கள். கறை இல்லாத இடங்களிலும் ஒன்றிரண்டு அதே டிசைனை வரைந்து விட்டால் இயற்கையாக இருக்கும்.

உடை கிழிந்து தைத்திருந்தாலும், தையலின் மேல் இப்படி டிசைன் வரைந்து விட்டால், தையலை மறைத்து விடும்.

**- லக்ஷ்மி சுரேந்திரநாத்**

பள்ளி ஆசிரியர்/ஆசிரியைகளுக்குப் பத்துக் கட்டளைகள் (வேண்டுகோள்).



1. ஆசிரியர் வேலையை ஏற்பவருடைய அதி முக்கியமான தகுதி - இந்த வேலையை விரும்புபவராக இருத்தல் வேண்டும்.

2. ஆசிரியைகளுக்கு, குழந்தைகள் மேல் பாசம், பரிவு, அன்பு செலுத்தும் குணம் இருக்க வேண்டும். பொறுமை மிக மிக அவசியம். இவை இல்லாத பட்சத்தில், இந்தக் குணங்களை மேற்கொள்ளப் பழக வேண்டும்.

3. வேலையில் சேர்ந்ததும் முதலில், குழந்தைகளிடம் உங்களை அறிமுகப்படுத்திக் கொள்ளுங்கள். மாணவர்கள் ஒவ்வொருவரின் பெயரையும், முகத்தையும் பரிச்சயம் செய்து கொண்டு, மனதில் படம்பிடித்துக் கொள்ளுங்கள். தவறான பெயரில் அவர்களை அழைத்தால் அவர்கள் மனம் புண்

# 'நல்லாசிரியராக' ஆக வேண்டுமா?

படும். அதனால் அதி விரைவில் அவர்களுடைய பரிச்சயம் அவசியம். இது ஒரு முக்கியமான (ஆசிரியையுடைய) அம்சம்.

4. ஒரு நல்ல ஆசிரியை எப்பொழுதும் ஒரு நல்ல மாணவியாக இருக்க வேண்டும். கற்றது கையளவு; கல்லாதது உலகளவு. புதிது புதிதாகக் கற்க வேண்டியவை நிறைய உள்ளன. குழந்தைகளுக்குக் காலத்திற்குத் தகுந்த மாதிரி அறிவை வளர்க்க ஆர்வமுள்ளவராக இருக்க வேண்டும். கணினி உதவியுடன் பாடம் கற்பிக்க வல்லவராக வேண்டும்.

5. ஆசிரியை 'தான்', 'தன்னுடையது' என்னும் சுயநலவாதியாக இருக்கக் கூடாது. ஆணவம் (ஈகோ) என்பதை அறவே ஒழித்து, குழந்தைகளிடமும், சக ஆசிரியைகளிடமும் பணிவுடனும், அனுசரணையுடனும் நடந்து கொள்ள வேண்டும்.

6. குழந்தைகளிடம் கண்டிப்பாக இருப்பது அவசியம். ஆனால் அதற்காக சதா 'கடுகடு'

## பள்ளி நிர்வாகிகளுக்கு ஒரு வார்த்தை!

● பாட சாலையில் சிறுவர்கள் விளையாட மற்றும் உடற்பயிற்சி செய்ய பெரிய மைதானம் (பிளே கிரவுண்ட்) இருக்க வேண்டும்.

● இரண்டாவதாக ஒவ்வொரு வகுப்பிலும், குறிப்பாக ஆரம்பப் பள்ளிகளில் ஒரு வகுப்பில் முப்பது குழந்தைகளுக்கு மேல் சேர்க்கக் கூடாது. அதிகபட்சம் நாற்பது இருக்கலாம்.

● ஆசிரியர்கள் மனிதர்கள் - இயந்திரங்கள் அல்ல. அவர்கள் ஒவ்வொரு குழந்தையின் தனித்தன்மையையும், மனப்பக்குவத்தையும், புத்திகூர்மையையும் அறிந்து, அவர்களுக்குக் கல்வி போதிக்க குறைந்த அளவில் மாணவர்கள் இருந்தால்தான், நல்ல முறையில் செயல்பட முடியும். தனிப்பட்ட கவனத்தை ஒவ்வொரு குழந்தைக்கும் அளிக்க முடியும்.

'சிடுசிடு'வென்று இல்லாமல், அவர்கள் செய்யும் தவறுகளை நயமாகச் சுட்டிக் காட்டி, நல்வழிப்படுத்தல் வேண்டும். குழந்தைகளை, 'எருமை மாடு', 'கழுதை', 'இடியட்', 'மக்கு', 'மண்டு', என்றெல்லாம் பட்டப் பெயர்களைச் சூட்டி இழிவுபடுத் தாதீர்கள். உபத்திரவம் செய்யும் சிறுவர்களையும், அவர்கள் செய்யும் சிறு நற்செயல்களுக்கும் அங்கீகாரமும், பாராட்டும் தெரிவித்து, ஊக்குவித்தால், அவர்களை மிகவும் நல்லவர்களாக உருமாற்றலாம்.

7. ஓர் ஆசிரியை, தானே ஒரு நல்ல வழிகாட்டியாக இருத்தல் அவசியம். எப்பொழுதும் உண்மை பேசுதல், சாந்தமாக இருத்தல், நன்மொழி பேசுதல், நன்னடத்தையுடையவராக இருத்தல், நேரம் தவறாமல் கடமையைச் செய்தல், போன்ற நல்ல பழக்க வழக்கங்களை அவர் கடைப்பிடித்தால், குழந்தைகளும் அவரைப் பின்பற்றுவார்கள்.

8., வீட்டுப் பிரச்னைகளை, வீட்டிலேயே மூட்டை கட்டி வைத்து விட்டு, அமைதியான மனத்துடன் பள்ளிக்குக் கிளம்புங்கள். தூய உடை, மிதமான அலங்காரம், நிர்மலமான சிந்தனை, நேர் கொண்ட பார்வை மற்றும் அழகிய புன்னகையுடன் பள்ளிக்குச் சென்றால், அன்று முழுவதும் வேலையில் நன்கு கவனம் செலுத்த முடியும்.

9. வகுப்பில் நுழைந்தவுடன், குழந்தைகளை வாழ்த்தி, ஒரு சிறு பிரார்த்தனையுடன், பாடத்தை நடத்துங்கள். மாணவ, மாணவிகளை ஊக்குவிக்க, சில சிந்தனையைத் தூண்டும் கேள்விகளைக் கேட்டு விட்டு (பாடத்திற்குச் சம்பந்தப்பட்ட) பாடத்தை ஆரம்பியுங்கள்.

10. பாடசாலைக்குச் செல்லுமுன் அன்றையப் பாடங்களை நன்கு தயார் செய்து கொண்டு செல்லுங்கள். இந்தக் காலத்துக் குழந்தைகள் அதிபுத்தி சாலித்தனமுடையவர்கள். அவர்கள் கேட்கும் கேள்விகளுக்கு விடைகள் உங்கள் விரல் (நாவின்) நுனிகளில் இருக்க வேண்டும். தெரியாத கேள்விக்கு, தவறான பதிலைச் சொல்வதை விட, "எனக்கு இதற்கு விடை தெரியாது. கண்டறிந்து நாளை சொல்கிறேன்" என்று உண்மையைச் சொல்லுங்கள். இல்லாவிடில், மாணவர்களையே கேட்டு அறியுங்கள்.

கடைசியாக - எப்பொழுது உங்களால் உங்கள் மாணவமணிகளின் பெயரை நினைவில் வைக்க இயலவில்லையோ, அவர்களிடம் பொறுமையை இழக்க ஆரம்பித்து விட்டீர்களோ, அல்லது பள்ளிக்குச் செல்வதில் உற்சாகம், ஆர்வம் இழந்து விட்டீர்களோ, அப்பொழுதே நீங்கள் ஆசிரியர் பணியிலிருந்து விலக வேண்டிய நேரம் வந்ததென்று அறிந்து ஓய்வு பெற்று விடுங்கள்! ஆசிரியர் பதவி மிக்க மேன்மையானதொரு பணி. ஒரு தாயை விட, ஒரு தந்தையை விட, முக்கியமானவர் குரு. அவரால்தான் ஒரு மேன்மையான மனிதனை, பிரஜையை உருவாக்க முடியும்.

நல்ல மாணவமணிகளை உருவாக்க முடிபவர்கள் மட்டும் இந்தப் பணியினை மேற்கொண்டு செயல்படுங்கள். மற்றவர்கள் தயவுசெய்து வேறு பணியினைத் தேடிக் கொள்ளுங்களேன்!

**- வசுமதி கிருஷ்ணஸ்வாமி**
(ஓய்வுபெற்ற தலைமையாசிரியை)

# வெற்றிக்கு வழி



ஒரு மனிதனின் வெற்றிக்கும், தோல்விக்கும் மூலகாரணமாக இருப்பது அவரது பெயரும், கையெழுத்துமே ஆகும்.

ஒருவருடைய பெயரையும், கையெழுத்தையும் அதிர்ஷ்டகரமானதாக்கி தொழில் வசியம் செய்து கொண்டால் வெற்றிமேல் வெற்றிகள் கிட்டும். பணம், பதவி, புகழ் யாவும் கிட்டும். நீங்களும் கோடீஸ்வரர் ஆகலாம் என்று நிரூபித்துக் காட்டியுள்ளார் கோவை மாவட்டம், கனுவக்கரையில் வசிக்கும் ஜோதிட விஞ்ஞானி **கே.ஆர்.பிரபாகர்ராஜ்** அவர்கள்.

அதிர்ஷ்டப் பெயர் என்பது ஏற்கெனவே உள்ள பெயரில் மிகச் சிறிய திருத்தம் (குறியீடு) செய்வதே ஆகும். பெயரை முழுவதுமாக மாற்றத் தேவை இல்லை. அதிர்ஷ்டப் பெயரால் மனித வாழ்வில் உண்டாகும் அனைத்துப் பிரச்சனைகளுக்கும் மிக நல்ல முறையில் தீர்வுகாண முடியும்.

ஒரு மனிதனுக்கு விடாமுயற்சி, அயராத உழைப்பு, தர்ம குணம், தன்னம்பிக்கை போன்ற நற்குணங்கள் இருந்தும் அவர் வாழ்வில், தொழிலில், உத்தியோகத்தில் வெற்றி பெற முடியவில்லை எனில் அவருக்குப் பெயரில் அதிர்ஷ்டம் (ராசி) இல்லை என்பதுதான் உண்மை.

தொழில் நிறுவனங்களுக்கு அதிர்ஷ்டப் பெயர் வைத்தால் தொழில் அமோக வெற்றி பெறும்.

அதிர்ஷ்டப் பெயர், அதிர்ஷ்டக் கையெழுத்து, தொழில் வசியம் செய்து கொண்டால் அன்பான, அழகான மனைவி (நல்ல கணவர்) அறிவுள்ள குழந்தைகள், வசதிமிக்க வீடு, வளமான தொழில், உயர்வான உத்தியோகம், சுகமான வாழ்க்கை, ஆரோக்கியமான உடல், பணம், பதவி, புகழ் பெற்று அனைத்து அதிர்ஷ்டங்களையும் பெற்று வளமுடன் வாழலாம்.

அதிர்ஷ்டப் பெயர் எந்த வயதிலும் மாற்றி அமைத்து வெற்றி பெறலாம். இதற்கு வயது ஒரு தடை அல்ல.

தொழில் முடக்கம், வியாபார மந்தம், உத்தியோகத்தில் இடையூறு, கணவன் - மனைவிக்கிடையே ஒற்றுமை இல்லாமை, செக்ஸ் கோளாறு, மனபயம், குடிப்பழக்கத்திற்கு அடிமை, நோய், செய்வினை, மாந்திரீக பாதிப்பு, திருமணத் தடை, குழந்தை பாக்கியம் இல்லாமை, முன்னேற்றத் தடை, புகழ் இல்லாமை போன்ற எண்ணற்ற வாழ்க்கைப் பிரச்சனைகளுக்கும் அதிர்ஷ்டப் பெயரால் நிரந்தரத் தீர்வு காண முடியும்.

அதிர்ஷ்டப் பெயர் நியூமராலஜிப்படி அமைத்துக் கொண்டால் இவ்வுலகில் பெற வேண்டிய அனைத்துச் செல்வச் சுகங்களையும் பெற்று இன்புற்று வாழலாம்.

பெயர் வசியம், தொழில் வசியம் (தொழில் கவர்ச்சி), மனித வசியம் எனும் மனக்கவர்ச்சி இருக்கும்படி பெயர் சூட்டினால் பிரபல அதிர்ஷ்டங்களைப் பெறலாம்.

இன்றைக்குப் பிரபலமாக உள்ள, அரசியல் தலைவர்கள், சினிமா நட்சத்திரங்கள், விளையாட்டு வீரர்கள், தொழிலதிபர்கள், வெளிநாட்டினர் மேலும் பல துறைகளைச் சார்ந்தவர்களும் பெயர் மாற்றத்திற்குப் பின்பு பிரபலமானவர்களே ஆகும். பெயரில் வசிய சக்தி, காந்த சக்தி, கோபுரசம்சம் (பிரமிட்) இருக்க வேண்டும்.

அதிர்ஷ்டப் பெயரால் அரசியலில் சாதனை, சினிமாவில் புகழ், விளையாட்டில் வெற்றி, தொழில் மேன்மை, உத்தியோகத்தில் சிறப்பு, குடும்பத்தில் சந்தோஷம் உண்டாகும்.

அந்தக் காலத்து இராஜராஜ சோழன், உத்தம பாண்டியன், புத்தர், அசோகர், நெப்போலியன், பாரதியார், பாரதிதாசன், கண்ணதாசன், இந்திரா காந்தி, வீரமா முனிவர், மில்டன், செங்வேல் சேரன், சிவாஜி, எம்.ஜி.ஆர். போன்றோரும் மேலும் பலரும் அதிர்ஷ்டப் பெயர் மாற்றத்திற்குப் பின் பிரபலமானவர்களே ஆவர்.

பெயர் மாற்றத்தால் பெரும் செல்வந்தர் ஆகலாம். கையெழுத்தால் தலை யெழுத்தை வெல்லலாம்.

பெயரையும், கையெழுத்தையும் வளமானதாக்கிக் கொண்டால் என்றென்றும் வெற்றிகள்தான். இதை இவர் விஞ்ஞான ரீதியில் நிரூபித்துக் காட்டி வெற்றியும் பெற்றுள்ளார்.

இவரிடம் அதிர்ஷ்டப் பெயர், அதிர்ஷ்டக் கையெழுத்து அமைத்துக் கொண்டவர்கள் அனைவரும் சிறப்புடன் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

இக்கலை இனம், மொழி, மதம் சார் பற்றது. அனைவருக்கும் அதிர்ஷ்டத்தை அள்ளித்தரும்.

ஆண்-பெண் எந்த தேதியில் பிறந்தவராக இருந்தாலும் அவர்கள் திருமணம் செய்த நாளின் கூட்டு எண். (திருமணத் தேதி, மாதம், வருடம் மூன்றையும் கூட்டி வரும் எண்) 2, 4, 5, 7, 8 வரும் நாளில் கண்டிப்பாக திருமணம் செய்யக் கூடாது. அப்படிச் செய்தால் சோதனைகளும், போராட்டங்களும் நடக்கும். இதிலிருந்து விடுபட "மறுமாங்கல்ய பூஜை" - அதிர்ஷ்ட நாளில் செய்து கொண்டால் குடும்ப வாழ்க்கை சந்தோஷமுடனும், வெற்றியுடனும் இருக்கும்.

அதிர்ஷ்டப் பெயர் எண் சாஸ்திரப்படி பெயர் அமைத்தால் பணம், பதவி, புகழ் உண்டாகும். வெற்றிகள் பல குவியும். நீங்களும் மிகப் பெரிய சாதனையாளர் ஆகலாம்.

**இவர் எழுதிய புத்தகங்கள்:**

1. **அதிர்ஷ்ட பெயர் எண் சாஸ்திரம்** (தமிழ், ஆங்கிலம்) ரூ. 300/
2. **வெற்றிக்கு வழி** ரூ.1,050/-
3. **பணம், பதவி, புகழ்** -ரூ.550/-

தபால் மூலம் பெற - M.O செய்யுங்கள். வெளிநாடு உட்பட எல்லா ஊர்களிலும் கிடைக்கும்.

## சென்னை வருகை

**ஜூலை - 6,7 ஆகஸ்ட் - 3,4**
**செப்டெம்பர் 7, 8**
**தேதிகளில் மட்டும்**
**ஹோட்டல் தாச பிரகாஷ்**
100, பூந்தமல்லி ஹைரோடு
செல்: (0) 94430 56366
போன்: 044 - 28255111

**உங்கள் வெற்றிக்கு வழி காட்டும் நியூமரோ - பவர் கே.ஆர். பிரபாகர்ராஜ்**

**நியூமராலஜி - நேமாலஜி - சைன் - தொழில் வசியம்**




# கே.ஆர். பிரபாகர்ராஜ் M.A.,

**நல்லாந் தோட்டம், கனுவக்கரை (P.O) 638 459.**
**பு. புளியம்பட்டி (Via), கோவை (Dt.)**
**TAMIL NADU - INDIA. Ph: (04254) 287258.**
**Cell: (0) 94430 56366 Fax: 04254 - 287258**


வார விடுமுறை : புதன், வியாழன்




# நீங்கள் நினைப்பதை அடையலாம்.



**வே**லூர் மாவட்டத்தில் இராணிப்பேட்டையைச் சுற்றியுள்ள ஏழு ஊராட்சி ஒன்றியங்களில், சுமார் 350கிராமங்களில் தமது வாழ்க்கைத் தரத்தையும், தம்முடைய கிராமங்களின் நிலையையும் உயர்த்த வேண்டும் என்ற திண்ணிய எண்ணத்துடன் தமது சங்கங்களின் மூலம் ஒரு மௌனப் புரட்சியை ஏற்படுத்திக் கொண்டு வருகின்றார்கள் கிராமத்துப் பெண்கள்.

# உழைக்கும் உருவாக்கும்

இவர்கள் வாழ்க்கைக்கு வழிகாட்ட தன்னார்வத்துடன் பொறுப்பேற்றுள்ள TCT என்ற திருமலை அறக்கட்டளை இவர்கள் பின் நின்று ஊக்குவித்து வழிநடத்துகின்றது. கிட்டத்தட்ட 100 முழு நேரப் பணியாளர்களையும், 1500 கிராம நிலைப் பெண் தன்னார்வலர்களையும், தலைவிகளையும் கொண்டு இயங்கி வருகின்றது.

இந்த இயக்கத்தில் ஈடுபட்டு வரும் பெண் மணிகளின் தன்னம்பிக்கை சாதாரண தெளிவான சிந்தனை, பேச்சு, அவர்கள் தொடங்கி நடத்துகின்ற தொழில்கள், நலத்திட்டங்கள் இவை அனைத்தும் பிரமிக்க வைப்பனவாய் உள்ளன. எப்பொழுதும் நாட்டைப் பற்றி குறைகூறிக் கொண்டிருக்கும் ஒரு நகரவாசி கூட இவர்களைச் சந்தித்தால், நம் நாடு கண்டிப்பாக முன்னேறும் என்ற நம்பிக்கையுடன் திரும்பி விடுவார் என்று தோன்றுகின்றது.



1983 ஆம் ஆண்டு இத் திட்டத்தைத் தொடங்கிய பூமா பார்த்தசாரதி 'செய்து பார்க்கலாம்' என்ற அடிப்படையில் ஒரு சுகாதாரத் திட்டத்தைக் கிராமத்தில் நிறுவ, அதன் மூலம் பல பாடங்களை கிராம மக்களிடமிருந்து கற்றுக் கொண்டு பல சிறியத் திட்டங்களை கிராமங்களுக்குப் பெண்களை மையமாகவே வைத்து நடத்தி வருகின்றார்.

கிராம சுகாதாரம், கால்நடை, பெண்கள் சிறு சேமிப்பு மற்றும்




◆ எப்பொழுதும் நாட்டைப் பற்றி குறைகூறிக் கொண்டிருக்கும் ஒரு நகரவாசி கூட இவர்களைச் சந்தித்தால், நம் நாடு கண்டிப்பாக முன்னேறும் என்ற நம்பிக்கையுடன் திரும்பி விடுவார்!



கடன் திட்டம், சுயவேலை திட்டங்கள், குழந்தைகள் படிப்பு மையங்கள், குடிநோயாளிகள் மறுவாழ்வு, எய்ட்ஸ் கல்வி, ஊனமுற்றோர் நலன் ஆகியவற்றை உள்ளடக்கிய ஒரு ஒருங்கிணைந்த

# பெண்களே கைகளே!

திட்டத்தை இன்று திருமலை அறக்கட்டளை தரமாக இயக்கி வருகின்றது.

"பெண் தன்னார்வலர்கள், தலைவிகள் ஊக்கம் மற்றும் செயல்பாடுதான் இத்திட்டத்திற்கு உயிர் மற்றும், வெற்றிக்குக் காரணம்'' என்று பெருமைப்படுகிறார் பூமா. கிராம மக்களே திட்டங்களில் ஈடுபட்டுச் செய்வதால் அவர்களின் தேவைக்கேற்ற திட்டமாக ஒவ்வொரு திட்டமும் அமைகின்றது என்கிறார்.



இயக்குநர் பூமா மணி

இந்த கிராமங்களில் சுமார் 6,000 பெண்கள் சிறிய தொழில்கள் ஆரம்பித்துள்ளனர். ஆடு, மாடு, கோழி வளர்ப்பு மட்டு







**வீட்டில் அவர்கள் அந்தஸ்து உயர்கின்றது. சமூகத்தில் அவர்கள் பஞ்சாயத்துத் தலைவர், எம்.எல்.ஏ., கலெக்டர் யாராக இருந்தாலும் சரி, சரிக்குச் சரியாக அவர்களுடன் திறம்பட உரையாடுகின்றனர்.**



மில்லை, பெட்டிக்கடை, சிறு வியாபாரம், அகர்பத்தி தேய்த்தல்... ஏன்! கேபிள் டீவி, டெலிபோன் பூத் உட்பட பலவகை தொழில்களை கிராமத்துப் பெண்கள் ஆரம்பித்து நம்பிக்கையுடன் செயல்படுவதைப் பார்த்து, பார்ப்பவர்கள் பூரித்துப் போகின்றனர்.

இந்தய இயக்கத்துப் பெண்கள் வீட்டிற்கு பணம் கொண்டு செல்கின்றனர். சங்கத்திற்கு என்று அவர்கள் நேரம் கொடுக்கின்றனர். குடும்பத்திற்கு வருமானம் ஈட்டும் தொழில் இயங்க அவர்கள் முக்கியக் காரணமாகின்றனர். மற்ற பெண்களைப் பார்த்துப் பழகுவதினாலும், வெளி உலக அனுபவங்களினாலும், அவர்கள் விழிப்புணர்வு அடைகின்றனர். வீட்டில் அவர்கள் அந்தஸ்து உயர்கின்றது. சமூகத்தில் அவர்கள் பஞ்சாயத்துத் தலைவர், எம்.எல்.ஏ., கலெக்டர் யாராக இருந்தாலும் சரி, சரிக்குச் சரியாக அவர்களுடன் திறம்பட உரையாடுகின்றனர். தமது தேவைகளை அழகாக எடுத்தியம்பி காரியத்தைச் சாதித்துக் கொள்கின்றனர். கிராமங்களில் சங்கத்தின் 'இருப்பு' தெரிகின்றது. சங்கத்தின் மூலம் கிராமப் பஞ்சாயத்துகள், பள்ளிக்கூடங்கள் அவற்றின் தேவைகளையும் பூர்த்தி செய்து கொள்கின்றனர்!

பல பணிகளை உள்ளடக்கி அமைதியாக வேலை செய்து வரும் இந்தத் திருமலை அறக்கட்டளைக்கு சில தேசிய நிறுவனங்கள் விருதுகள் அளித்து கௌரவித்துள்ளன.

பெண்களின் தொழில்கள், சங்கங்களின் செயல்கள், சுகாதார மையங்களின் நடவடிக்கைகள் மட்டுமல்ல; அங்குள்ள பெண்களின் பூரிப்பு, மிளிருகின்ற தன்னம்பிக்கை, கற்றுக் கொள்ள விழையும் ஆர்வம் நம்மைப் பிரமிக்கச் செய்கிறது. இந்தியக் கனவை நனவாக்க ஊக்க மூட்டும் இப் பெண்கள் வாழ்வு சிறக்க நாம் வாழ்த்துவோம்.

- மஹிமா



**பனீர் துண்டுகள் அதிக மென்மையாக இருக்க வேண்டுமா?**

பனீரைக் குழம்பு, புலாவ் ஆகியவற்றில் சேர்க்கப் போகிறீர்களா? அவ்வாறு சேர்ப்பதற்கு முன் அந்தத் துண்டு பனீரை இலேசான சுடுநீரில் ஐந்து நிமிடங்கள் முக்கி வையுங்கள். இவ்வாறு செய்தால் பனீர் துண்டுகள் அதிக மென்மையாக இருக்கும்.

- எச்.டி. முனவர் ஜஹான்

## கோடைத்தொல்லைகளை வெல்ல உதவிடும் வெட்டி வேர்...

# வெட்டி வேர் வாசம்

**கோ**டைக்காலத்தில் நாம் பல்வேறு தொல்லைகளை அனுபவிக்கிறோம். வெயிலின் வெம்மை, வெப்பக் காற்று, கண் எரிச்சல், வியர்வை, அரிப்பு, வியர்க்குரு, நாவறட்சி போன்றவைகள் நம்மைப் பாடாய்ப்படுத்தி விடும். இவைகளைப் பல்வேறு முறைகளால் வெல்ல முயற்சிக்கிறோம். குளிர்பானங்கள், இளநீர், மோர், பழங்கள் போன்றவைகள் கோடையைச் சமாளிக்க உதவுகின்றன. இவற்றையெல்லாம் விட கோடைத் தொல்லைகளை வெல்ல மிகவும் உதவுவது வெட்டிவேர் ஆகும். வெட்டிவேரானது வெம்மையை நீக்கி குளிர்ச்சியைத் தருவது மட்டுமின்றி சுகந்த நறுமணத்தைத் தருகிறது. பல்வேறு நோய்களைக் குணப்படுத்தும் வல்லமையுடையது.



**வெட்டிவேர்த் தட்டியை வீடுகளில் கட்டி நீரால் நனைக்க ஏர்கண்டிஷன், ஏர்கூலர் போல குளிர்ச்சியைத் தரும்.**

### மருத்துவப் பயன்கள்

- வெட்டிவேரை நீரிலிட்டு காய்ச்சி நீரை வடிகட்டி அரை கப் வீதம் மூன்று வேளை அருந்த வயிற்றுவலி, வயிற்றுக் கடுப்புத் தீரும்.
- வேரை அரைத்து உடல் எரிச்சல், அரிப்பு உள்ள இடங்களில் தேய்க்க அரிப்பு, எரிச்சல் மாறும்.
- சந்தனப் பொடியுடன், வெட்டி வேர்ப் பொடி கலந்து உடலில் பூசிக் குளிக்க உடல் மணம் வீசும். தோல் நோய்கள் ஏற்படாது.
- வெட்டிவேர்ப் பொடியுடன், சந்தனப்பொடி கலந்து வைத்துக் கொண்டு ஒரு ஸ்பூன் பொடியை இளநீரில் கலந்து வேர்க்குரு, வேனல் கட்டி மேல் பூசி அரை மணி நேரம் ஊறியபின் குளிக்க வேர்க்குரு, வேனல் கட்டி மாறும்.



● இரவில் வெட்டிவேரை தண்ணீரில் ஊறவைத்து காலையில் வடிகட்டி சாப்பிட கோடைத் தொல்லைகளான நாவறட்சி, அதிக தாகம் போன்றவை தீரும்.

● வெட்டிவேர்ப் பொடியை பாலில் கலந்து இனிப்புச் சேர்த்து சாப்பிட கண் சூடு, தொண்டை வலி, நாவறட்சி, அதிதாகம் தீரும்.

● மண்பானை நீரில் சிறிதளவு வெட்டிவேரைப் போட்டு வைத்துக் குடித்தால் உடல் வெம்மை தீரும். தேக அனல், நீர்ச்சுருக்கு மாறும்.

● வெட்டிவேர்ப்பொடியை, நீரில் கலந்து சாப்பிட அஜீரணம் தீரும்.

● பொடியைத் தேனில் குழைத்து உண்ண வயிற்றுப் பிணிகள் தீரும்

● வெட்டிவேர் விசிறி குளிர்ச்சியை ஊட்டும்.

● வெட்டிவேர்த் தட்டியை வீடுகளில் கட்டி நீரால் நனைக்க ஏர்கண்டிஷன், ஏர்கூலர் போலக் குளிர்ச்சியைத் தரும்.

● மின்விசிறியின் கீழ் வெட்டிவேர்ப் பாய் அல்லது வெட்டிவேர் தட்டியை நனைத்து வைத்தால் அறை முழுவதும் குளிர்ச்சி பெறும்.

● வெட்டிவேர், சந்தனம், மஞ்சள் இம்மூன்றையும் சேர்த்து அரைத்து கொப்புளம், கட்டி மேல் தடவி வர கொப்புளம், கட்டி இவை ஆறி விடும்.

● வெட்டிவேர் வாசம் மன மகிழ்ச்சியை உண்டுபண்ணும்.

**- அ. சித்ரா அனந்தகுமார்**

## உருளைக்கிழங்கு ஜாமூன்

**தேவையான பொருள்கள் :**

உருளைக்கிழங்கு - 500 கிராம், சர்க்கரை - 100 கிராம், நெய் அல்லது டால்டா - 400 கிராம், மைதா மாவு - 100 கிராம், பால் - 1 லிட்டர், உப்பு - 2 சிட்டிகை.

**செய்முறை :**

உருளைக்கிழங்கை வேகவைத்து கட்டியில்லாமல் பிசைந்து கொள்ளவும். அடுப்பில் ஒரு பாத்திரத்தை வைத்து மிதமான தீயில் பாலை கோவா பதத்திற்குக் காய்ச்ச வேண்டும். பின்பு, ஒரு பாத்திரத்தில் சர்க்கரையைக் கொட்டி சிறிது தண்ணீர் விட்டுக் கம்பிப் பதத்திற்கு ஜீரா காய்ச்சி இறக்கிக் கொள்ளவும். அதன் பிறகு, கோவா, உப்பு, உருளைக்கிழங்கு, மைதா மாவு ஆகியவற்றைச் சேர்த்து நன்கு கலந்து கொண்டு சிறு சிறு உருண்டைகளாகச் செய்து கொள்ள வேண்டும்.

வாணலியில் நெய் அல்லது டால்டாவை விட்டுக் காய்ந்ததும் பொன்னிறமாகப் பொரித்து எடுத்து ஜீரா பாகில் ஊறவைத்து பின்பு பரிமாறலாம். பண்டிகைகளின் ஸ்பெஷல் இனிப்பு.

**- அ.ப.ஜெ. சசிகலா.**

# அப்பாவி*

(*அப்பா + ஆவி=அப்பாவி)

'அப்பாவி'யின் விண்ணப்பத்தைப் படித்துக் குழம்பிப் போன தேவேந்திரன் தலைநிமிர்ந்தான். "என்னது! ஜாமீனில் பூலோகத்துக்கு ஒரு நடை போய்வர அனுமதி வேண்டுமா? வந்து ஒரு வருடம்தான் ஆகிறது; அதற்குள் இந்த சொர்க்கலோகம் அலுத்துப் போய் விட்டதா?"

நேர்முகப் பேட்டிக்கு விண்ணப்பித்து வந்திருந்த அப்பாவி அவசரமாகக் குறுக்கிட்டார். "ப்ளீஸ் டோன்ட் மிஸ்டேக் மீ, தேவேந்திரா! செல்ஃப் ஃபினான்ஸிங் கல்லூரியில் என்ஜினியரிங் படித்த மகனோ வேலை கிடைக்காமல் அலைந்து கொண்டிருந்தான். கல்யாணத்திற்கு நின்ற மகளுக்கும் எதுவும் செய்து வைக்கவில்லை. மனைவிக்கும் விவரம் போதாது. வந்த நாளிலிருந்து மனம் அலைபாய்ந்த வண்ணம் இருக்கிறது. அவர்களைப் போய் ஒரு தடவை பார்த்துவிட்டு வந்தால் கொஞ்சம் நிம்மதியாக இருக்கும்."

"நீர் சொர்க்கலோக பாஸ்போர்ட் ஹோல்டர். போய்வருவதில் பிரச்னை ஒன்றும் இல்லை. ஆனால் ஒன்று. அங்கே





போய் உம்மால் யாரோடும் எந்தவிதத்தி லும் கம்யூனிகேட் பண்ண முடியாது. 'முதல் தேதி' சிவாஜிகணேசன் ஒரு தொள தொள வெள்ளை ஜிப்பாவை மாட்டிக் கொண்டு 'ஆவி'யாக பெண்டாட்டி பிள்ளைகளோடு பேசிக் கொள்ளவோ அவர்களைத் தொட்டுக் கொள்ளவோ முடியாமல் அல்லாடியது போல் அலையப் போகிறீர். பரவாயில்லை என்றால், உம் விருப்பம் போல் ஆகட்டும்." தேவேந்திரன் அப்பாவியின் விருப்பத்திற்கு நிபந்தனையோடு இசைவு தெரிவித்தான்.

அடுத்த வினாடி, அப்பாவி சென்னையின் புறநகர்ப் பகுதியிலிருந்த தன் வீட்டின் முன்பாக மிகவும் மெதுவாக 'லேண்ட்' செய்தார். அவருக்கு ஒரே ஆச்சரியம். ஒரு வருஷத்தில் இந்தப் புறநகர் அகநகர் ஆகிவிட்டதா? ஏராள மான கட்டுமானங்களும் விஸ்தரிப்புக் களுமாக இடம் அடையாளம் தெரியா




கோமி




மல் மாறிப் போயிருந்தது. காலை நேர பரபரப்பில் ஜனங்களும் வாகனங்களும் அவசரத்தில் இருந்தார்கள்.

வீட்டின் வாசல் பக்கமாக அப்பாவி நகர்ந்த போது உள்ளேயிருந்து குமார் அருமையாக உடுத்திக் கொண்டு கழுத்தில் 'டை'யும் கையில் பையுமாக வெளியில் வந்தான். அப்பாவிக்கு மனம் சிலிர்த்துப் போனது. "என் மகனா இவன்? பார்த்தா தெரியலியே, அவன் கௌரவமும் வருமானமும் உள்ள ஏதோ பெரிய உத்தியோகத்தில் இருப்பது போல் தெரிகிறதே!" அப்பாவி மலைத்துப் போய் நின்று கொண்டிருக்கும்போதே, விர்ரென்று வந்து நின்ற 'டாடா சுமோ'வில் குமார் ஏறிக் கொள்ள வாகனம் சீறிக் கொண்டு புறப்பட்டது. வாகனத்தோடு கொஞ்ச தூரம் பறந்து போய் உள்ளே எட்டிப் பார்த்த அப்பாவிக்கு குமாருடன் ஏதோ பிஸினஸ் பேப்பர்களைக் காட்டி உற்சாகமாகப் பேசிக் கொண்டிருந்த மூன்று ஸ்மார்ட்டான இளைஞர்களைக் கண்டதும் 'திக்'கென்றது. "குமார் படித்துக் கொண்டிருந்த காலத்தில், 'இந்தப் பணக்காரப் பசங்களுடைய சகவாசம் வேண்டாம். கெட்டுப் போகாதே. ஒழுங்காகப் படிக்கிற வழியைப் பார்.' என்று தினம் தினம் குமாருடன் முட்டிக் கொள்வேனே! அந்தப் பசங்களா இவர்கள்! வாழ்க்கையில் பெரிய அளவில் சாதிக்கிற தோரணை அவர்களிடம் தெரிகிறதே!" மகிழ்ச்சியான அதிர்ச்சிக்குள்ளான அப்பாவி கொஞ்சம் 'ஸ்லோ டௌன்' ஆனார். முன்னே போன 'டாடா சுமோ' வின் பின்புறம் 'குளோபல் பிஸினஸ் ப்ராசஸ்ஸிங் ஆர்கனைஸேஷன், டைடல் பார்க்' என்று எழுதியிருந்ததை அப்பாவி கவனிக்கத் தவறவில்லை.

வீட்டு வாசலுக்குத் திரும்பி வந்த அப்பாவி கதவில் 'மகளிர் கணினி மையம்' என்ற வாசகத்துடன் இருந்த சிறிதான பலகையை முதன் முதலாகக் கவனித்தார். கலகலவென்று பேசிச் சிரித்துக் கொண்டு வீட்டிற்குள் நுழைந்து கொண்டிருந்த இளம்பெண்களுடன் சேர்ந்து தானும் ஹாலுக்குள் பிரவேசித்தார். ஹால் உருமாற்றம் செய்யப்பட்டு ஆறு கம்ப்யூட்டர் ஸ்டேஷன்களுடன்

வித்தியாசமாக இருந்தது. உள்ளே வந்த மகளிர் கூட்டம் 'ஆன்ட்டி, ஆன்ட்டி' என்று ஆர்ப்பரித்துக் கொண்டு ஹாலில் இருந்த பெண்மணியைச் சூழ்ந்து கொண்டார்கள். "அறிவார்த்தமாகவும், நாசூக்குடனும் இவர்களுடன் உரையாடிக் கொண்டிருக்கும் பெண்மணி யார்? என்னுடைய ஸ்ரீமதியா? 'விவரம் இல்லாத ஜடம்' என்று தினம் தினம் கொட்டிக் கொட்டி ஒரு புழுவைப் போல நான் ஆக்கிவைத்திருந்த என் மனைவியா இவள்? நான் போனதும் தன்னுடைய அந்தக் காலத்து 'பிளஸ்ஸி (இரண்டாம் ஆண்டு)' அறிவைத் தூசி தட்டி கம்ப்யூட்டர் சென்டர் நடத்துகிற அளவுக்குத் தன்னை வளர்த்துக் கொண்டு விட்டாளா?'' அப்பாவியின் மனத்தில் பொங்கி எழுந்த பெருமிதத்தை இனம் தெரியாத குற்ற உணர்வு கீழே அமுக்கியது.

கம்ப்யூட்டர் அட்டைப் பெட்டிகளை அடுக்கி வைத்திருந்த பரணில் வசதியாக உட்கார்ந்து கொண்ட அப்பாவி ஸ்ரீமதியின் வகுப்பு நடத்தும் சாமர்த்தியத்தை வாய் பிளந்து ரசித்துக் கொண்டிருந்தார். அப்போது வாசலில் கார் வந்து நிற்கும் சப்தம் கேட்டது. உடனேயே மகாலட்சுமி போல ஒரு இளம்பெண் ஒரு இளைஞன் பின்தொடர உள்ளே வந்தாள். "ஓ, ஓ... இது என் செல்வியல்லவா? அவளுக்கு இந்தப் பையனுடன் கல்யாணம் ஆகி விட்டதா?" அப்பாவியின் மனத்தில் ஒரு 'ஃப்ளாஷ் பேக்' 'ஃபாஸ்ட் ஃபார்வர்ட்' ஆனது. வந்திருந்த இளைஞன் தூரத்து உறவுப் பையன்தான். செல்வியைத்தான் கல்யாணம் செய்து கொள்வேன் என்று அந்தக் காலத்தில் ஒற்றைக் காலில் நின்றான். ஆங்கிலத்தில் 33 சதவிகிதம் வாங்கி ப்ளஸ்-டூ பரீட்சையில் கோட்டை விட்டிருந்த அவனுக்கு பி.ஏ. (ஆங்கில இலக்கியம்) படித்திருந்த தன் பெண்ணைத் தர முடியாது என்று பிடிவாதமாகத் தான் முரண்டு பிடித்தது அப்பாவியின் நினைவுக்கு வந்தது.

"அத்தை! தம்ளர், தட்டு, கிண்ணம், மாதிரியாக பேப்பரில் சமாச்சாரங்களைத் தயாரிக்கிற அந்த ஃபேக்டரியை இன்றைக்கு வாங்கிப் போட்டு விட்டேன். பிளாஸ்டிக் சமாச்சாரங்களுக்குத் தடை வந்து விட்டதால் இந்தப் பேப்பர் பேக்கேஜிங் இன்டஸ்ட்ரிக்கு அதிகம் மவுசு வந்து விட்டது.'' வியாபார சாத்தியங்களை ஸ்ரீமதியிடம் விவரித்துக் கொண்டிருந்தார் மாப்பிள்ளை. இடைமறித்த செல்வி ஸ்ரீமதியிடம் சொன்னாள், "அம்மா, இன்றைக்கு நடந்த விழாவில், இவரைப் புகழ்ந்து தள்ளி விட்டார்கள். வட்டார லயன்ஸ் கிளப் பிரசிடென்ட் உன் மாப்பிள்ளைக்கு 'சிறு தொழில் இளவரசர்' என்று பட்டமே சூட்டி விட்டார்!" செல்வியின் முகத்தில் அத்தனை பூரிப்பையும் மகிழ்ச்சியையும் முன்பு பார்த்திருந்ததாக அப்பாவிக்கு ஞாபகம் இல்லை!

தாங்க முடியாத கழிவிரக்கம் மேலிட வீட்டை விட்டு வெளியில் வந்தார் அப்பாவி. "எல்லோருக்கும் படிக்கல்லாக இருப்பதாக நினைத்துக் கொண்டு பெரும் தடைக்கல்லாக அல்லவா இருந்திருக்கிறேன். என் முடிவு அத்தனை பேருக்கும் இப்படி விடிவு தருமென்று தெரிந்திருந்தால் பல வருஷங்களுக்கு முன்னதாகவே சந்தோஷமாக மண்டையைப் போட்டிருப்பேனே! கடவுளே! ஸ்ரீமதியும், குமாரும், செல்வியும் என்னைப் புரிந்து கொண்டு மன்னிக்க நீதான் அருள் செய்ய வேண்டும்.''

இலேசாகிப் போன மனத்தோடு அப்பாவி சொர்க்கத்தை நோக்கித் தன் பயணத்தைத் தொடங்கினார்.



ஸ்ரீ ஆதிசங்கரர் அருளிய கனகதாரா ஸ்தோத்ரம்

# பொன்மழை பொழியத் துதி

5. பாஹ்வந்தரே மதுஜித : ச்ரிதகௌஸ்துபேயா
ஹாராவலீவ ஹரிநீலமயீ விபாதி ।
காமப்ரதா பகவதோ-(அ)பி கடாக்ஷமாலா
கல்யாண-மாவஹது மே கமலாலயாயா : ॥

6. காலாம்புதாலி-லலிதோரஸி கைடபாரே:
தாராதரே ஸ்புரதி யா தடிதங்க நேவ ।
மாது: ஸமஸ்த-ஜகதாம் மஹநீயமூர்தி :
பத்ராணி மே தி சது பார்கவநந்தநாயா : ॥

7. ப்ராப்தம் பதம் ப்ரதமத:கலு யத்-ப்ரபாவாத்
மாங்கல்யபாஜி மதுமாதிநி மந்மதேந ।
மய்யாபதேத்-ததி ஹ மந்தர-மீக்ஷணார்தம்
மந்தாலஸம் ச மகராலய-கந்யாகாயா : ॥

8. தத்யாத்-தயாநுபவநோ த்ரவிணாம்புதாரா :
அஸ்மிந்-நகிஞ்சந வி ஹங்கசிசௌ விஷண்ணே ।
துஷ்கர்ம-கர்ம-மபநீய சிராய தூரம்
நாராயண-ப்ரணயிநீ நயநாம்புவாஹ : ॥



5. மது எனும் அரக்கன் தன்னை வதம்செய்த அரியின் மார்பில்
இது செல்வம் என விளங்கும் எழில்கௌத்துவ மணியது போல
துதிப்போர்க்குச் செல்வம் அருளும் துணையே! திருமகளே உந்தன் பதம்
கதியென்றேன், அடைந்தேன்; என்பால் உனது கருணைவிழி காட்டுவையே!

6. மேகம் அன்ன மாலவன் மார்பில் மின்னலென ஒளிரும் அழகே
ஆகமங்கள் போற்றும் பார்க்கவ ஆதி முனிவன் மகளே!
அகில உலகாளும் அன்னையே! அருட்கடலே!
அடியவனுக்கருள் பெருங்கருணைதன்னை அனுதினமும் போற்றுவமே!

7. மது என்னும் அரக்கன்தன்னை வென்ற மாலவன் தன் மனதில் இடம்
மதனுக்கும் பெற்றுத்தந்த மங்கல நாயகி பார்வையின் சிறப்பு
இதுவென்று அறிந்ததனாலே ஏழையேன் யானும் தயம் மகிழ்ந்து
துதி செய்து வேண்டுதும் அவள் துணை யொன்றுதானே!

8. கருணை மா மழைமுகிலே; என்தாயே உன்தாள் பணிந்தேன்;
தருணமிது அருள்வாய்! தவிக்கும் சக்கரவாகப் புள்ளெனவே யானுமுன்
அருள் வேண்டித் தவம் கிடந்தேன் அகமகிழ்ந்தே யான் வேண்டும்
பொருள் தன்னைப் பொன்மழையாய்ப் பொழி!

தமிழாக்கம் : **செ.ப. ராமமூர்த்தி**

(பொன்மழை தொடரும்)



# மருந்துகள் : தேவை கவனம்!

மருந்துகளைச் சாப்பிடும் பொழுது நாம் மிகவும் கவனமாக இருக்க வேண்டும். மருந்துகளைப் பயன்படுத்தும் முறைகளை முழுமையாக அறிந்து கொண்டு பயன்படுத்தும் பொழுது நமக்கு விரைவில் நல்ல குணம் தெரியும்.



**மருந்துகளைச் சாப்பிடும் முன் கவனத்தில் கொள்ள வேண்டியவை :**

- மருத்துவர் உங்களைப் பரிசோதித்து உங்களுக்கான மருந்தை பரிந்துரைக்கும் முன் அவரிடம் உங்களுக்குள்ள மற்ற பிரச்னைகளையும், சந்தேகங்களையும் தெளிவுபடுத்திக் கொள்ளுங்கள்.
- உங்களுக்கு ஏதாவது மருந்துகள், உணவுப் பொருள்கள் ஒவ்வாமை இருப்பின் தெளிவுபடுத்தவும்.
- மருத்துவக் காரணங்களால் அல்லது உடல் எடை குறைக்க வேண்டி உணவுப் பழக்க வழக்கங்களை மாற்றி, குறைந்த உப்பு, குறைந்த சர்க்கரை உபயோகப்படுத்தினால் மருத்துவரிடம் தெரிவிக்கவும். ஏனெனில் சில மருந்துகள் அதிக வீரியத் தன்மையுடையதாக இருக்கும். சில மருந்துகளில் ஆல்கஹால் கலக்கப்பட்டிருக்கும். இவை சில விளைவுகளை ஏற்படுத்தலாம்.



- கர்ப்பமுற்றிருக்கும் பொழுது கட்டாயம் மருத்துவரிடம் தெளிவுபடுத்தவும். கர்ப்பமுண்டாவதற்கான ஏற்பாடுகளில் இருப்பினும் தெரியப்படுத்த வேண்டும். சில மருந்துகள்

கர்ப்பிணிப் பெண்களுக்கு ஏற்றவை அல்ல.

● அதே போல் குழந்தைகளுக்குத் தாய்ப்பால் கொடுக்கும் பெண்களும் மருத்துவரிடம் கட்டாயம் தெரிவிக்க வேண்டும். சில மருந்துகள் தாய்ப்பாலு டன் குழந்தைக்குச் சென்று விட வாய்ப்புகள் உண்டு.

● மருத்துவரை சந்திப்பதற்கு முன் எடுத்துக் கொண்ட மருந்துகள் அல்லது வேறு ஏதாவது பிரச்னைகளுக்காக மருந்து கள் சாப்பிட்டுக் கொண்டிருந்தால் கட்டா யம் அவரிடம் தெரியப்படுத்த வேண்டும்.

● மருத்துவர் உங்களுக்கான மருந்து களை எழுதும் தாளில் அவர் எழுதிக் கொடுக்கும் சாப்பிடும் முறைகள் புரியா விட்டால் உடனுக்குடன் தெளிவுபடுத் திக் கொள்ளுங்கள். மருத்துவர்களுக்கு நேரம் இல்லாது இருப்பின் அவர் உதவியாளர்களைக் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள்.

**மருந்துகளைப் பாதுகாக்கும் முறை :**

● மருந்துகளை வாங்கி வந்த பின் அவற்றை ஒழுங்காகப் பாதுகாக்க வேண் டும்.

● குழந்தைகளின் கைக்கு எட்டாத இடத்தில் மருந்துகளை வைக்க வேண்டும்.

● மருந்துகளை எந்தக் காரணத்தைக் கொண்டும் அதற்குரிய பாட்டில்களில் இருந்து மற்ற பாட்டில்களுக்கு மாற்றாதீர் கள்.

● மருந்துகளை நேரடியான சூடு, வெளிச்சத்திலிருந்து பாதுகாப்பாக வைத் திருங்கள்.

● மாத்திரைகளை ஈரப்பதத்தில் இல் லாமல் பத்திரமாகப் பாதுகாக்க வேண் டும்.

● மருந்துகளை குளிர்சாதனப் பெட்டி யில் வைக்கச் சொல்லியிருந்தால் மட்டுமே வைக்க வேண்டும். இல்லாவிடில் வைக்கக் கூடாது.

## கிச்சன் கி(கு)றள்கள் :

● காபி என்ப ஏனை டிபன் என்ப - இவ்விரண்டும்
காலை நேரத் தேவை நமக்கு.
● ஆவியில் வெந்த உணவு நலமாகும் ஆகாதே
ஆயிலில் பொரித்தது.
● சமைத்த தனாலாய பயன் என்கொல் யாரும்
சாப்பிடவில்லை யெனின்
● அரிசி முதல் மளிகையெல்லாம் வேணும்
அறுசுவை உணவுக்கு.
● சுவை, நிறம், சூடு, சுகம், வாசம் என்றைந்தின்
வகை கொண்டதே உணவு.
● கிச்சனுக்குள் மாசிலன் ஆதல் அவசியம்
துச்சம் நீர பிற.
● சுவையும், மணமும் உடைத்தாயின் சமையல்
பசியும் தீர்க்கும் அது.
● அன்னை மகளுக்காற்றும் உதவி சமையல்
அறுசுவை கற்றுத் தரல்.
● செய்தபொழுதிற் பெரிதுவக்கும் அவ்வுணவை
சிறந்த தெனக் கேட்ட தாய்.
● பஜ்ஜி இனிது போண்டா இனிதென்பர் தம் வீட்டில்
சொஜ்ஜி சாப்பிடாதவர்.

*திருவள்ளுவர் என்னை மன்னிப்பாராக!*

**- ஆர். ராஜலட்சுமி**

நீண்ட நேரம் வெயிலில் சுற்றி விட்டு வீடு திரும்பியவுடன் வியர்வை வெளிப்படும்போது சிறிதளவு உப்பும் வெளிப்படும். இழந்த உப்பைச் சரிகட்ட வெறும் தண்ணீரைக் குடிப்பதை விட, சிறிதளவு உப்பு கலந்த மோரைக் குடிப்பது நல்லது.

- ஜரினா பானு



● மருந்துகளை கார், மற்றும் இரு சக்கர வாகனங்களில் அதிக நாள் வைக்கக் கூடாது.

● வாங்கி அதிக நாட்களான மருந்துகளை ஒரு காகிதக் கவரில் இட்டு, நன்கு ஒட்டி குப்பையில் சேர்த்து உடனுக்குடன் அப்புறப்படுத்தவும்.

**சரியான முறையில் மருந்துகளைப் பயன்படுத்துங்கள்**

● உங்கள் மருத்துவர் பரிந்துரைத்த மருந்துகளை சரியான அளவை சரியான நேரத்தில் அவர் குறிப்பிட்டுள்ள காலம் வரை உபயோகிக்க வேண்டும்.

● மருந்து பாட்டில், டப்பாக்களை நன்கு அழுத்தி மூடி வைக்கவும். மருந்துகளுடன் வரும் உபயோகப்படுத்தும் முறைகளுடன் வரும் தாள்களை மருந்து சாப்பிடும் காலம் வரை பத்திரமாக வைத்திருக்கவும். அதில் அந்த மருந்துகளைப் பற்றிய முக்கியக் குறிப்புகள் கொடுக்கப்பட்டிருப்பதால் அது மிக முக்கியம்.

**மருந்துகள் உட்கொள்ளும் முறை :**

● பொதுவாக மருந்துகளை ஒரு தம்ளர் நீருடன் சாப்பிடுவதே சிறந்தது. சில மருந்துகளைச் சாப்பாட்டிற்கு முன் அல்லது பின் சாப்பிட வேண்டி இருக்கும். அதைக் கவனத்தில் கொண்டு சாப்பிட வேண்டும்.

● மருந்துகளை பொடி செய்தோ, உடைத்தோ அல்லது கடித்தோ சாப்பிடக் கூடாது. மருந்துகளை நீருடன் விழுங்கிச் சாப்பிடுவதே சரியான முறை.

● டானிக், சிரப் வகை மருந்துகளைச் சாப்பிடும் பொழுது மருந்து பாட்டில்களில் குலுக்கி உபயோகிக்கச் சொல்லியிருக்கிறதா எனப் பார்த்து அதன்படி குலுக்கி அந்த பாட்டில்களுடன் கொடுக்கப்பட்டுள்ள அளக்கும் மூடியைக் கொண்டு அளந்து சாப்பிட வேண்டும்.

● மூடியில் ஊற்றிச் சாப்பிடுவதோ, உத்தேசமாக ஊற்றிச் சாப்பிடுவதோ கூடாது. அளக்கும் மூடியோ, கரண்டியோ இல்லாமல் இருந்தால் மருந்துக் கடைக்காரரிடம் கேட்டு வாங்கி வைத்துக் கொள்ளவும்.

● மருந்துகளை விழுங்குவதில் சிரமம் இருந்தால் மருத்துவரிடம் தெரிவித்து சிரப் வகையான மருந்துகளை வாங்கிக் கொள்ளவும்.

**பாதுகாப்பு அவசியம் :**

● நீங்கள் பயன்படுத்தும் மருந்துகளை மற்றவர்களுக்குப் பரிந்துரைப்பதோ, கொடுப்பதோ மிகவும் தவறான ஒரு செயல்.

● மருந்துகளைத் தண்ணீருடன் சாப்பிடவும். டீ, காப்பி மற்றும் பலவிதமான பானங்களுடன் சாப்பிடவே கூடாது.

● ஏதாவது அவசர சிகிச்சை பெற்றுக் கொள்ள வேண்டிய நிலைமை ஏற்பட்டால் நீங்கள் பயன்படுத்தும் மருந்துகளை மருத்துவரிடம் மறக்காமல் சொல்லவும். பல் மருத்துவம் செய்யும் சமயத்திலும் பல் மருத்துவரிடம் மறக்காமல் சொல்லவும்.

● தவறு காரணமாக தவறான மருந்துகளை உட்கொண்டாலோ அல்லது அதிகமான அளவு எடுத்துக் கொண்டாலோ உடனடியாக மருத்துவ உதவியை நாடவும்.

- டாக்டர். இராம.பத்மப்ரியா

# கர்ணன்



கம்பீரமே சுட்டியங்கூற அங்கே வந்து நின்றான் கர்ணன்.

துரோணரின் மரணத்திற்குப் பின் கர்ணன் தளபதியாக நியமிக்கப்பட்டு மூன்று நாட்களாகியிருந்தன.

கர்ணனின் அரண்மனையில் உள்ளும் புறமும் பரபரப்பு அலைமோதிக் கொண்டிருந்தது.

அன்றைய நல்லோரையில் போர்க்களத்திற்கு தளபதியை அழைத்துச் செல்ல, தேரும் பின்னால் சில குதிரைப் படை வீரர்களும், மாளிகையின் முன்பாக அணிவகுத்து நின்று கொண்டிருந்தார்கள்.

உள்ளே முகப்பில் உள்ள மேடையில், மங்கலத் தாம்பாளத்தில் ஆரத்தியும் மாலையும் திலகக் கிண்ணங்களும் போர்வாளும் வைக்கப்பட்டிருந்தன...

சில விநாடிகளில், போர் தளபதிக்குரிய மகுடம், கவச உடைகளோடு

அன்று குருக்ஷேத்திரத்தில் பதினேழாம் நாட்போர்...

சிறிது நேரத்தில் அந்தப்புரத்திலிருந்து அரசி காஞ்சனமாலை, பணிப்பெண்கள் புடைசூழ வந்து, கணவனின் முன்னே அமைதியாக நின்றாள்.

இயற்கையான சாமுத்ரிகா

லட்சணங்களோடு இயைந்த சிவந்த உடலும், செயற்கைப் புனைவு இல்லா மலே அழகுப் பொலிவு ஒளிரும் முகமும், பிறையை ஒக்கும் நெற்றியும், தாமரையாக மலர்ந்த அகன்ற நெடுவிழிகளும், எடுப்பான எட்பூவாய் எழும்பிப் பூத்த மூக்கும், நடுத்தர வயதை எட்டியும் செழுமை குன்றாத கொழுவிய கன் னங்களும், மன உறுதியை வெளிக்காட்டும் இறுகிய செவ்விதழ்களும், வெண்சங்காய் வளவிய கழுத்துமாய், க்ஷத்திரியப் பெண்மைக்குரிய காம்பீர்யச் சாயலுடன் நின்ற அவளைக் கூர்ந்து பார்த்தபடி நின் றான் கர்ணன்.

வெளியே, தளபதியின் பராபரச் சங்கின் ஒலி மெல்ல முழங்கியது.

மங்கலத் தட்டி விருந்த ஆரத்தியை எடுத்து, அவன் முன்னே நின்று மூன்று முறை



# சிறப்புச் சிறுகதை

அய்க்கண்




டெட்டால், பினாயில் பாட்டில் வாங்கி வந்தவுடனேயே சீலையே திறக்காமல் பவுடர் டப்பா மாதிரி மேல் மூடியின் மேல் 4, 5 துளைகள் போட்டு விட்டால் உபயோகப்படுத்தும் போது சிக்கனமாக இருப்பதுடன், கையாள்வதும் எளிதாக இருக்கும்.

- உஷா நாராயணன்.

சுற்றி விட்டு, மஞ்சள் நீரை அவனது கால்களிலே ஊற்றி நனைத்தாள் காஞ்சனா.

பின்பு, பூமாலையை எடுத்து அவனது தோளிலே அணிவித்து, வெற்றித் திலகமிட்டு வாழ்த்தினாள் அவள்.

கணவனைப் போர்க்களத்திற்கு அனுப்பும் அந்த நேரத்திலும், அவளுடைய முகத்தில் எந்தவித உணர்ச்சியின் சலனமும் ஏற்படாமல், இறுகிய பாறையாக உறைந்திருந்தது.

அரசியையும் தளபதியையும் சுற்றி நின்ற பணிப்பெண்களும் வீரர்களும் மெல்ல நகர்ந்து பின்வாங்கி, இருவரும் தனித்துப் பேசிக் கொள்ள வாய்ப்பளித்து, விலகிச் சென்று நின்றார்கள்.

''காஞ்சனா...! நான் போர்க்களம் போகிறேன்...'' என்று உணர்ச்சியும் அழுத்தமும் இயைந்த குரலில் சொன்னான் கர்ணன்.

திகைப்புடன் அவனை ஏறிட்டுப் பார்த்தாள் மனைவி. இதுவரை இறுகியிருந்த இதழ்கள் படபடப்புடன் அசைந்தன.

"ஒரு க்ஷத்திரியர் இப்படிச் சொல்ல மாட்டார். 'போய் வருகிறேன்' என்றுதான் சொல்வார்'' என்ற அவளுடைய வார்த்தைகள், கர்ணனுடைய இதயத்தில் வடுப்பட்டுப் போன இடத்தில் சுரீர் என்று சாட்டையடியாக விழுந்தன.

"அப்படித்தான் சொல்ல நினைத்தேன், காஞ்சனா! கடந்த மூன்று நாட்களிலும் அப்படித்தானே சொல்லி விடைபெற்றேன்? ஆனால், இன்று ஏனோ, என் உள்ளுணர்வு என்னையும் அறியாமல் இப்படிச் சொல்லிவிட்டது...'' என்று நலிந்த குரலை மீண்டும் உறுதியாக்கிக் கொண்டு தொடர்ந்தான் தளபதி.

"இன்றுடன் போரை முடித்து விடலாம் என்ற நம்பிக்கை இருக்கிறது காஞ்சனா! குருக்ஷேத்திரப் போர் பதினேழு நாட்களில் முடியப் போகிறது : இன்றோடு போரை, துரியோதன மன்னருக்கு வெற்றியாக முடிக்கப் போகிறேன் நான்...''

"இல்லை... துரியோதனருக்கு வெற்றியாக இருக்க முடியாது. தர்மத்திற்கு வெற்றி என்று சொல்லுங்கள்!'' என்று கோபம் வெடிக்கும் முகத்தில் வெறுப்பு மீதூர முணுமுணுத்தாள் காஞ்சனமாலை.

துரியோதனன் மேல், அவளுக்கு உள்ளூர அளவற்ற வெறுப்பும் சினமும் நெடுங்காலமாக வேர் ஊன்றிப் பரவியிருந்தன.

அவளுடைய இல்லற வாழ்க்கையின் ஆழமான வேதனைக்குக் காரணமானவன் அவன்தான் என்பதை அவள் இன்னும் மறக்கவில்லை.

அதை எப்படி மறக்க முடியும் அவளால்...?

அன்று, திடீரென மன்னர் சார்த்தகேசியின் அரண்மனைக்கு, துரியோதனன் உறவோடும் பரிவாரங்களோடும் விஜயம் செய்தான் :

''அரசே! உங்கள் மகள் காஞ்சனமாலையை என் நண்பன் கர்ணனுக்குப் பெண் கேட்டு வந்திருக்கிறோம்...'' என்று அஸ்தினாபுரப் பேரரசர் தெரிவித்ததும்,

திகைத்துப் போய் விட்டார் சார்த்தகேசி.

"என்ன சொல்கிறீர்கள், மன்னர்பெருமானே...? கர்ணனுக்குப் பெண் கேட்டு வந்திருக்கிறீர்களா?"

"ஆம்... அங்கதேசத்து மன்னன் கர்ணனுக்குத்தான்!..." என்று அழுத்தமாகத் துரியன் உறுதிப்படுத்திய போது, சார்த்தகேசிக்கு சிறிது நேரம் பேச்சே எழவில்லை. அமைச்சர்தான், மன்னரின் அறிவிப்பாளராக அமைதியாகப் பேசினார் :

"பேரரசே! உங்கள் நண்பரை மருமகனாக அடைய எங்கள் அரசர் பெரும்பேறு பெற்றிருக்க வேண்டும்... உங்கள் விருப்பப்படியே எல்லாம் நடக்கும்..." என்றார் பெரும் அனுபவஸ்தரான அமைச்சர்.

திருமண நிச்சயம் அரண்மனை மண்டபத்தில் சிறப்பாக நடந்து முடிந்ததும், துரியோதனும் பரிவாரங்களும் மகிழ்ச்சியுடன் புறப்பட்டுச் சென்றனர்... சார்த்தகேசி, மகளிடம் திருமணச் செய்தியை அறிவித்ததும், அவள் ஆழிப் பேரலையாகப் பொங்கி விட்டாள்.

"முடியாது, அப்பா! நான் இந்தத் திருமணத்திற்குச் சம்மதிக்க மாட்டேன்... ஒரு தேரோட்டியின் மகனை நான் திருமணம் செய்து கொள்ள மாட்டேன்... நம் நாட்டை விட, சிறிய நாடாக இருந்தாலும் பரவாயில்லை. அந்த நாட்டின் க்ஷத்திரிய மன்னனை நான் மணந்து கொள்ளத் தயார்..." என்று காஞ்சனமாலை உறுதியாக மறுத்ததும், மன்னர் திடுக்கிட்டுப் போய் நின்றார்.

"காஞ்சனா! உனக்குத் தெரியாதா? கர்ணன், இப்போது தேரோட்டியின் மகன் அல்ல. அங்கதேசத்தின் முடிசூடிய மன்னன்."

"மாமன்னர் துரியோதனர், கர்ணனை அரசனாக்கலாம். ஆனால் க்ஷத்திரியனாக்க முடியாது...! எனக்குத் தெரியும். கர்ணன், பிறப்பால் சூதகுலம்தான். தேரோட்டி அதிரதனுக்கும் ராதேக்கும் பிறந்தவன்தான்..."

மன்னர் - இளவரசிக்கிடையே ஏற்பட்ட வாக்குவாதத்தில், அமைச்சர் தலையிட வேண்டிய அரசியல் பொறுப்பு தோன்றி விட்டது.

"இளவரசி! கர்ணன், தேரோட்டியின் வளர்ப்பு மகன்தான். ஆற்றிலே மிதந்த பெட்டியில் ரத்ன நகைகளோடு சேர்ந்து வந்ததால், அந்தக் குழந்தைக்கு வசுசேனன் என்று தேரோட்டி பெயர் சூட்டினான். ஆனால் அப்போது, வானத்திலிருந்து அசரீரியாக, 'கர்ணன்' என்ற பெயர் ஒலித்தது. கவசகுண்டலத்தோடு பிறந்திருந்த அந்தக் குழந்தை, க்ஷத்திரிய குலமாக இருப்பதற்கு வாய்ப்பு உள்ளது..." என்று அறிவுபூர்வமாக எடுத்துரைத்தார் அமைச்சர்.

"இல்லை... ஆற்றில் வந்த பெட்டி, ரத்ன நகைகள், அசரீரி எல்லாமே கட்டுக் கதைகள்.... பாண்டவர்களை எதிர்த்து நிற்பதற்குப் பலசாலிகளின் துணை வேண்டும் துரியோதனருக்கு. ஆகவே பலம் நிறைந்த கர்ணனை அவர், சூதகுலத்திலிருந்து மேலே உயர்த்தி, நண்பராக்கிக் கொண்டு, அங்க நாட்டுக்கும் அரசனாக்கி விட்டார்... அந்தத் தேரோட்டி மகனை நான் கணவராக ஏற்றுக் கொள்ள முடியாது..." என்று தொடர்ந்து எதிர்ப்புக் குரலை வலிமையாக எழுப்பிக்

என்னுடைய பிரஷ், என் பையனுடைய டூத்-பிரஷ் இரண்டும் ஒரே கலரில் இருந்ததால் சங்கடத்தைத் தவிர்க்க என்னுடைய டூத் பிரஷ்ஷில் ஒரு ஸ்டிக்கர் பொட்டை அடையாளத்துக்கு வைத்தேன். அடுத்த முறை வாங்கும் போது கலரை மற்றிக் கொண்டேன்.

-என்.வி. லக்ஷ்மி.



கொண்டிருந்தாள் இளவரசி..

**சி**று வயதிலிருந்தே அவளுக்கு, தான் க்ஷத்திரியப் பெண் என்பதில் ஒரு பெருமித உணர்வும் கர்வமும் இரத்தத்தில் ஊறி வலுந்திருந்தன.

தன்னோடு ஒத்த அரச குலத்தவரோடுதான் நெருங்கிப் பேசிப் பழகுவாள். இளவயதில் விளையாடும் போது கூட, அரசகுலம் அல்லாத பெண்களைத் தொட்டுப் பேசி விளையாடமாட்டாள். அவர்களைத் தீண்டாமலே, சற்று தொலைவிலிருந்தேதான் விளையாடுவாள்!

அப்படிப்பட்ட பெருமித உணர்வு கொண்ட இளவரசிக்கு, சூதகுலத்தில் பிறந்த ஒருவன் மாலையிட்டுக் கணவன் ஆவதா...?

அந்தத் திருமணத்தை நினைத்துப் பார்க்கவே, அவள் நெஞ்சம் தானாமல் எரிமலையாய் வெடித்து அதிர்ந்து கொண்டிருந்தது...

அதிர்வின் பரிமாணத்தைச் சமநிலைக்குக் கொண்டு வர, சில நொடிப் பொழுதை அமைதியில் கரைத்து விட்டு அமைச்சர் நிதானமான குரலில் தொடர்ந்தார் :

"இளவரசி! ஒரு சாதாரணப் பெண்ணின் திருமணம், அவள் சம்பந்தப்பட்ட சொந்த விஷயம். ஆனால் ஒரு க்ஷத்திரியப் பெண்ணின் திருமணம், அரசியல் விவகாரம்...! ஒரு நாட்டின் இளவரசி, சதுரங்கக் காய் போல... அவள், தானாக நகர்த்திக் கொள்ள முடியாது. ஆட்சியாளர்கள்தான் நகர்த்துவார்கள்... அஸ்தினாபுரப் பேரரசரின் விருப்பத்தை, நம் சிறு நாடு எதிர்த்து நிற்க முடியாது, இளவரசி! அதிலும், துரியோதனரைப் பற்றி உங்களுக்குத் தெரியும்...'' என்று அமைச்சர், அரசியல் நிர்ப்பந்தங்களை விளக்கிச் சொன்னார்...



நாம் வழிப் பயணங்களுக்கு உபயோகிக்கும் ஏர்-பில்லோ(ஊதி நிரப்பும் தலையணை) லீக் ஆனாலோ அல்லது ஒட்டிக் கொள்ளத் துவங்கினாலோ அதைத் தூக்கி எறிகிறோம். மிக்ஸி அல்லது கிரைண்டருக்குக் கீழே அதனை விரித்து அதன் மேல் மிக்ஸி, கிரைண்டர் வைத்தல் அவை சேதமடையாமல் இருக்கும். அவ்வப் பொழுது அதை கிளீன் செய்வதும் சௌகர்யம்.

- லலிதா ஸ்ரீநிவாசன்.

**து**ரியோதனன் குறித்த சுபநாளில், சுப ஓரையில், கர்ணன் - காஞ்சன மாலை திருமணம், கோலாகலமாக நடந்தது.

வெளியுலகுக்கு, கர்ணனின் அரசியாகக் காஞ்சனா நடந்து கொண்டாலும், மனதிற்குள் அவளுடைய உயர்வு மனப்பான்மை குறையவே இல்லை.

உலகத்திற்கு, கர்ணன் அங்கநாட்டுக்கு அரசன். புகழ்மிக்க கொடை வள்ளல். ஆனால் காஞ்சனாவின் உள்ளத்தில் அவனுக்குத் தேரோட்டியின் மகன் ஸ்தானம் தான். வாய்ப்புக் கிடைக்கும்போதெல்லாம், அவனுடைய சூதகுலத்தைச் சுட்டிக் காட்டி வெறுப்பை உமிழ அவள் தவறு

வதில்லை.

ஒருநாள், துரியனின் அரண்மனையிலிருந்து வந்த கர்ணன், பட்டத்தரசி பானுமதியின் பெருங்குணத்தையும் பேரரசரின நட்புணர்வையும் பரவசத்தோடு தெரிவித்தான் :

"காஞ்சனா! இன்று நானும் அரசி பானுமதியும், அரசரின் படுக்கையறையில் தனியாகச் சதுரங்கம் விளையாடிக் கொண்டிருந்தோம் : ஆட்டத்தில் அரசி, தோற்கும் நிலையில் இருந்தார்கள். அப்போது, அவர்களுக்கு எதிரில், எனது முதுகுப் பக்கமாக அரசர் உள்ளே வந்து கொண்டிருந்திருக்கிறார். அவரைப் பார்த்ததும், சட்டென்று அரசி எழுந்திருந்தார்கள். ஆட்டத்தில் தோல்விக்குப் பயந்து பாதி விளையாட்டில் எழுந்திருக்கிறார்கள் என்று நினைத்து நான், அவர்களை உட்காரச் சொல்லிக் கையை நீட்டினேன். அப்போது என் கை, அவர்களது இடுப்பில் பட்டு, மேகலை அணி அறுந்து அதிலுள்ள முத்துக்கள் கீழே சிதறின. எதிரே அரசரைப் பார்த்ததும் நான் திடுக்கிட்டுப் போய் நின்றேன். அப்போது அரசர், சிறிதும் பதற்றமோ, கோபமோ இல்லாமல் 'முத்துக்களை எடுக்கவோ, கோக்கவோ?' என்று கேட்டபடி முத்துகளைப் பொறுக்கினார். நான் மெய் சிலிர்த்துப் போய்விட்டேன், காஞ்சனா...! இப்படி ஒரு நட்பை, நீ கற்பனை செய்து கூடப் பார்க்க முடியாது..." என்று, அந்த அற்புத நிகழ்வின் தாக்கத்திலிருந்து இன்னும் பூரணமாக விடுபடாத லயிப்பில் சொல்லிக் கொண்டிருந்தான் கர்ணன்...

எந்த மனித உள்ளத்தையும் நெகிழச் செய்து விடும் அந்த மகோன்னத நட்பின் நிதர்ஸனம், காஞ்சனாவின் மனதிற்குள் எரிச்சலையே எழுப்பியது.

"நான் பானுமதியின் இடத்தில் இருந்திருந்தால், என் இடுப்பைத் தீண்டிய அந்தச் சூதகுலத்தவரின் கையை வாளால் வெட்டியிருப்பேன்..." என்று உதடுகளில் வெறுப்பு கொப்பளிக்க முணுமுணுத்தான் அவள்...

மனைவியின் அலட்சியமும் உதாசினமும் கர்ணனுக்குப் பழகிப் போய் விட்டன.

உண்மையில், அவனுக்குள்ளேயே சிறு வயதிலேயிருந்து எழும்பியிருந்த அவமான

பஞ்சாமிர்தம்



பஞ்சாமிர்தம்

பஞ்சாமிர்தம்

• இராஜம்மாள், ஜெயலக்ஷ்மி, ஹேமா, சங்கீதா, ஷ்ரேயா

உணர்வைத்தானே அவள் எதிரொலிக்கிறாள் என்று நாளடைவில், தானே சமாதானப்படுத்திக் கொண்டு விடப் பழகியிருந்தான் கர்ணன்...

தன் தாய் குந்தி, இளவரசி பிருதையாக இருந்த போது, துர்வாச முனிவர் கொடுத்த வரத்தால் குழந்தை பெற்று, பழிக்கு அஞ்சி, அதை ஆற்றிலே விட்டு, அவனை அனாதையாக்கிய அவமானம், சீக்கிரமே குருக்ஷேத்திரப் போரின் முடிவில் நீங்கப் போகிறது - அவனுடைய குலம் பற்றிய மர்மமும் விரைவிலே வெளிப்படப் போகிறது - என்ற எண்ணங்கள், இப்போது தளபதியின் மனதிற்குள் மகிழ்ச்சியாக

ஆரோகணிக்கும் குரலில் தெரிவித்த காஞ்சனமாலை, மங்கலத் தட்டிலிருந்த போர்வாளை எடுத்துக் கணவன் கையில் வழங்கினாள்.

அப்போது மெல்லிய குரலில் அவள் தொடர்ந்து சொன்னது, அவனுடைய ஆத்திரத்தை மேலும் கிளறி விட்டது.

''உண்மையில் நீங்கள் மும்மடங்கு அதிர்ஷ்டசாலி... சூதகுலத்தில் பிறந்தும் அங்க நாட்டின் அரசரான அதிர்ஷ்டம்; அடுத்து, ஒரு க்ஷத்திரியப் பெண்ணே உங்களுக்கு அரசியான அதிர்ஷ்டம். இப்போது, பிறப்பால் தேரோட்டியான உங்களுக்கு, ஒரு க்ஷத்திரிய அரசரே தேரோட்டியாகியிருக்கிறார்... அனுபவமும் அறிவும் நிறைந்த சல்லிய மன்னருடைய அறிவுரையைக் கேட்டு நடந்து கொள்ளுங்கள்... புறப்படுங்கள்!''



*வெளியே கிளம்பும் முன், காஸ், மீட்டர் (கரண்ட்), பூட்டு (தாழ்ப்பாள்) போன்றவற்றைத் தவறாமல் கவனிக்கும் நாம் ஏனோ ஃபோன் வால்யூமை குறைத்து வைக்க வேண்டும் என்பதை மட்டும் மறந்து விடுகிறோம். வெளியே கிளம்பும் முன் ஃபோன் வால்யூமை குறைத்து விட்டுச் சென்றால் பலமுறை தொடர்ந்து அலறி, நாம் வீட்டில் இல்லாததை திருடர்களுக்கோ (அ) மற்றவர்களுக்கோ காட்டிக் கொடுக்காமல் இருக்கும்.*

*- வி. ராஜம் ராமன்*

அரும்பிக் கொண்டிருந்தன..

அரண்மனைக்கு வெளியே குதிரைப் படையின் ஆரவாரம், மெல்ல எழுந்தது...

"காஞ்சனா...! இன்றையப் போரில் நான் ஜெயித்தாலும் தோற்றாலும் உனக்கு அதிர்ச்சியளிக்கும் செய்தி வரும்..." என்று நெகிழ்ந்த குரலில் சொல்லியபடி புறப்பட ஆயத்தமானான் தளபதி.

"அங்க நாட்டின் அரசி, ஒரு சாதாரணப் பெண் அல்ல; க்ஷத்திரியப் பெண். அவளுக்கு எந்தச் செய்தியும் அதிர்ச்சியளிக்க முடியாது..." என்று பெருமிதம்

என்று விடைகொடுத்து அனுப்பி வைத்தாள் காஞ்சனமாலை.

அவள் முகத்தை எரிச்சலுடன் கூர்ந்து பார்த்த கர்ணனுக்கு ஏதோ அவளிடம் 'சுருக்'கென்று சொல்ல வேண்டும் போல் துடிப்பு எழுந்தது. ஆனாலும் வாயை இறுக மூடிக் கொண்டு விட்டான்.

அவள் சாதாரணப் பாம்பு அல்ல; க்ஷத்திரிய ராஜநாகம்... அதை அடிக்க முயற்சி செய்தால், வேகமாக எதிர்த்துத் திருப்பித் தாக்கும்.

(மீதி அடுத்த இதழில்...)

சுண்டைக்காய் என்றாலே காய்ந்த வற்றல், கூட்டு அல்லது துவாதசி அன்று செய்யும் பச்சை சுண்டைக்காய், வத்தக் குழம்புதான் நினைவுக்கு வரும். ஆனால் சுண்டைக்காயை வைத்து சூப்பர் துவையலும் செய்யலாம். மாறுதலாகச் செய்து பாருங்களேன். சுண்டைக்காய் விரும்பாதவர்கள் கூட இதை விரும்பி உண்பார்கள்.



# சுண்டைக்காய்த் துவையல்

## சுண்டைக்காய்த் துவையல் (அ) சுண்டைக்காய் மிக்ஸட் துவையல்

**தேவையான பொருள்கள் :**
பச்சை சுண்டைக்காய் - 1 கப்,
புளிச்ச கீரை - 2 கட்டு,
கறிவேப்பிலை - 2 கப்,
வற்றல் மிளகாய் - 10-12,
பெருங்காயம் - 1 கட்டி,
கடுகு - 1 டீஸ்பூன்,
எண்ணெய் - 8 டீஸ்பூன்,
வெல்லம் - 1 கட்டி (சிறியது),
உப்பு - தேவையான அளவு,
மஞ்சள் பொடி - ½ டீஸ்பூன்.

**செய்முறை :**
காம்பு நீக்கி ஆய்ந்த கோங்கூரா (புளிச்சக்கீரை), விதை நீக்கிய சுண்டைக்காய், கறிவேப்பிலை ஆகிய மூன்றையும் நன்றாகக் கழுவி வடிய வைக்கவும்.

வாணலியில் ஒரு டீஸ்பூன் எண்ணெய் விட்டு கோங்கூராவை நன்றாக வதக்கவும். சுண்டைக்காயையும் ஒரு டீஸ்பூன் எண்ணெயில் மஞ்சள் தூள் சேர்த்து வதக்கி எடுக்கவும்.

பெருங்காயத்தை இரண்டு டீஸ்பூன் எண்ணெயில் பொரித்து எடுத்துக் கொண்டு மீதம் உள்ள எண்ணெயில் மிளகாய் வற்றலை வறுக்கவும். அடுப்பை அணைத்து விட்டு உப்பு சேர்த்து பிரட்டவும்.

வதக்கிய சுண்டைக்காய், கோங்கூரா, பச்சை கறிவேப்பிலை (வதக்கத் தேவை யில்லை) வறுத்தெடுத்த சாமான்கள் எல்லாவற்றையும் மிக்ஸியில் போட்டு தேவையானால் சிறிது தண்ணீர் தெளித்து மை போல நைஸாக அரைத்து எடுக்கவும்.

வாணலியில் நான்கு டீஸ்பூன் எண்ணெய் விட்டு கடுகு தாளித்து, அரைத்த விழுதைச் சேர்த்துக் கிளறவும். சுருண்டு வரும் போது ஒரு சிறிய கட்டி வெல்லம் சேர்த்துக் கிளறி இறக்கவும். ஆறிய பிறகு ஈரமில்லாத சுத்தம் செய்யப்பட்ட பாட்டிலில் எடுத்து வைக்கவும். இத் துவையலை குளிர்சாதனப் பெட்டியில் வைத்தால் 10 நாட்கள் வரை கெடாமல் இருக்குமாம்.

அதிக அளவு செய்யும் போது துவையல் கெடாமல் இருக்க காய்ச்சி ஆறிய நல்லெண்ணெயை மேலாகத் துவையல் மூழ்கும்படி விட்டு வைக்கலாம். இத் துவையலின் சுவையே தனி. சுண்டைக்காயின் கசப்பு துளி கூடத் தெரியாது இத் துவையல் இருந்தால் பூரி, சப்பாத்தி இட்லி, தோசை, பிரட் ஆகியவை நிமிடத்தில் காலியாகி விடும். வெறும் சாதத்திலும் கலந்து சாப்பிடலாம்.

- டாக்டர். என். சித்ரா



**பொருள் : மாவு உருண்டை வகைகள்**

**முதல் பரிசு :**
**பட்டர்ஃபிளை வழங்கும் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பிரஷர் குக்கர் மற்றும் பிரஷர் பான்**

## தசாங்க பனங்கிழங்கு மாவு உருண்டை

**தேவையான பொருள்கள் :**
பனங்கிழங்கு - 10,
பனங்கருப்பட்டி - ! வட்டு (பெரியது)
தினை - 100 கிராம்,
பச்சைப் பயறு - 100 கிராம்,
கொள்ளு - 100 கிராம்,
என் - 100 கிராம்,
கம்பு - 100 கிராம்,
நிலக்கடலை - 100 கிராம்,
குண்டு பொட்டுக்கடலை - 100 கிராம்,
ஏலக்காய் - தேவையான அளவு.

**செய்முறை :**
பனங்கிழங்கை வேகவைத்து, மேல்


ஆர். பிரேமா


ஆ.மு. வெண்ணிலா


கே. பத்மாவதி


ருக்மணி

# இம்மாத இல்லத்தரசி

தோலை நீக்கி முற்றியிருக்கும் பருத்த பகுதியினை எடுத்துக் கொள்ளவும். அதனை உரலில் இட்டு இடித்து கைகளால் துழாவி நார்களை நீக்கவும். பின்னர் மேற்கண்ட பயறு மற்றும் கடலை வகைகளை எண்ணெய் விடாமல் வறுத்துக் கொள்ளவும். (தனித்தனியே). நன்றாக ஆறவைத்து மிக்ஸியில் இட்டு தூளாக்கிக் கொள்ள வேண்டும். இதனை இடித்து வைத்துள்ள பனங்கிழங்குத் தூளு டன் சேர்த்துக் கொள்ள வேண்டும். பனங் கருப்பட்டியில் பாகு காய்த்து தேவை யான கம்பிப்பதம் வந்தவுடன் இறக்கி ஏலக்காய் பொடிகளைச் சேர்த்து மாவில் ஊற்றி உருண்டைகளாகப் பிடிக்கவும்.

இது குழந்தைகள் முதல் பெரியோர் வரை அனைவரும் விரும்பி உண்ணக் கூடியது. பனங்கருப்பட்டியில் அதிக அளவு கால்சியம் உள்ளதால் எலும்பு வளர்ச்சி மற்றும் பற்களுக்கு வலுவூட்டக் கூடியது. உடல்நலத்திற்கு சிறந்தது. குறைவான செலவில் எளிதாகத் தயாரிக் கப்படும் சத்தான உருண்டை தசாங்க பனங்கிழங்கு மாவு உருண்டை.

- ஆ.மு. வெண்ணிலா,
சேலம்.



குளிர்சாதனப் பெட்டி புதுப் பொலிவுடன் இருக்க வேண்டுமா?

வெந்நீரில் சிறிது சோடா உப்பைக் கலக்குங் கள். இதை ஒரு துணியில் நனைத்து, குளிர்சாதனப் பெட்டியைத் துடையுங்கள். இவ்வாறு மாதம் ஒருமுறை செய்யுங்கள். உங்கள் குளிர்சாதனப் பெட்டி புதுப்பொலிவுடன் என்றும் இருக்கும்.

- எச்டி. முனவர் ஜஹான்.

## இரண்டாம் பரிசு ரூ. 300/-

### பல பல மாவு உருண்டை

தேவையான பொருள்கள் :
கம்பு - 300 கிராம்,
ராகி - 300 கிராம்,
வரகு - 300 கிராம்
பாசிப் பயறு - 100 கிராம்,
காராமணி - 100 கிராம்,
கொள்ளு - 300 கிராம்,
கொத்துக்கடலை - 100 கிராம்,
கோதுமை (சம்பா) - 300 கிராம்,
சோளம் - 200 கிராம்,
மக்காச்சோளம் - 100 கிராம்,
தினை - 300 கிராம்,
பாசிப் பருப்பு - 100 கிராம்,
கடலைப் பருப்பு - 50 கிராம்,
துவரம் பருப்பு - 50 கிராம்,
பட்டாணி - 50 கிராம்,
மொச்சைப் பயறு - 50 கிராம்,
சோயா - 200 கிராம்,
பொரிகடலை - 100 கிராம்,
உளுந்து (கறுப்பு) - 50 கிராம்,
காய்ந்த பட்டர்பீன்ஸ் - 50 கிராம்,
வேர்க்கடலை - 100 கிராம்,
எள்ளு - 50 கிராம்,
அரிசி - 200 கிராம்,
துவரை - 200 கிராம்,
முந்திரி - 100 கிராம்
பாதாம் - 100 கிராம்,
ஏலக்காய் - 50 கிராம்.

செய்முறை :
ஏலக்காய் தவிர மற்ற எல்லாவற்றையும், கல் இல்லாமல் பொறுக்கி எடுத்து அல்லது தண்ணீர் ஊற்றி அரித்து எடுத்து, உடனே இலுப்பைச் சட்டியில் நல்ல பொன்னிறமாக வறுக்கவும். பின்பு மிஷினில்

**து**ணிகளுக்குக் கஞ்சி போட அரிசிக் கஞ்சி பவுடரை உபயோகப்படுத்துகிறோம். அரிசிக் கஞ்சி துணிகளில் திட்டுத் திட்டாய் வெள்ளையாகத் தெரியும். ஜவ்வரிசியை மிக்ஸியில் மாவாக அரைத்து வைத்துக் கொண்டு, சிறிதளவு எடுத்து தண்ணீரில் கரைத்து காய்ச்சி அதில் துணிகளை நனைத்துக் காயவைத்தால் துணிகள் மொடமொடப்பாகவும், பளபளப்பாகவும் ஜொலிக்கும். விலையும் குறைவாக ஆகும்.

- ஏ. லக்ஷ்மிதேவி.



கொடுத்து அரைத்து வைத்துக் கொள்ளவும். ஏலக்காயைப் பொடி செய்து சேர்க்கவும். இந்த மாவுடன் தனி நெய்யோ, அல்லது கொஞ்சம் நெய்யில், முந்திரி, திராட்சை வறுத்து சேர்த்து பின் தேவையான அளவு சர்க்கரை (சீனி) பொடித்து கலந்து, சிறிது சூடான பால் கலந்து உருண்டை பிடிக்கவும்.

வெல்லப்பாகு சாந்து பொட்டு கணக்கில் வைத்து மாவுடன் சேர்த்து உருண்டை பிடிக்கவும்.

பின்குறிப்பு :

மிகவும் சத்து நிறைந்த மாவு உருண்டை. வெல்லம் சேர்க்கும் போது சிறிதளவு சுக்குப்பொடியும் சேர்த்தால் சுவை கூடுதலாக இருக்கும்.

ஒரு கப் மாவிற்கு ஒரு கப் வெல்லம் அல்லது சீனி சேர்க்க வேண்டும்.

- கே. பத்மாவதி, மதுரை.

## மூன்றாம் பரிசு ரூ. 200/-

## நவன்மா உருண்டை

**தேவையான பொருள்கள் :**

புழுங்கலரிசி - 100 கிராம்,
பொட்டுக்கடலை - 200 கிராம்,
கொள்ளு - 50 கிராம்,
சோயாபீன்ஸ் - 100 கிராம்,
சோளம் - 100 கிராம்,
வேர்க்கடலை - 100 கிராம்,
கோதுமை - 200 கிராம்,
கம்பு - 50 கிராம்,
கேழ்வரகு - 500 கிராம்,
பாதாம் பருப்பு - 50 கிராம்,
முந்திரிப் பருப்பு - 50 கிராம்,
ஏலக்காய் - 5,
சர்க்கரை - 1½ கிலோ,
நெய் - 400 கிராம்,
பச்சைப் பயறு - 50 கிராம்

**செய்முறை :**

கொள்ளு, கோதுமை, கம்பு, கேழ்வரகு, சோயாபீன்ஸ், சோளம் இவற்றை கழுவி, ஊறவைத்து முளைகட்ட வைத்து எடுத்து வைக்கவும். (ஒருநாள் நீரில் ஊறவைத்து, நீரை வடியவைத்து அன்று இரவு மூடி வைத்து மறுநாள் பார்த்தால் சிறு சிறு முளை வந்திருக்கும்).

முளைகட்டிய கோதுமை, பச்சைப் பயறு, கம்பு, கேழ்வரகு, சோயாபீன்ஸ், சோளம் இவற்றுடன் பொட்டுக்கடலை, புழுங்கலரிசி, வேர்க்கடலை, கொள்ளு இவற்றை வெறும் வாணலியில் வாசனை வருமளவு தனித்தனியாக வறுத்தெடுக்கவும். இந்தச் சூட்டுடன் ஏலக்காயையும் கலந்து மிஷினில் மாவாக அரைத்துக் கொள்ளவும். சர்க்கரையையும் மாவாக மெஷினில் அரைத்து எடுத்து வைக்கவும்.

பாதாம், முந்திரிப் பருப்பை சிறு சிறு கிள்ளல்களாக சீவிக் கொள்ளவும். அடுப்பில் நெய்யைக் காயவைத்து அதில் இந்தப் பருப்புக் கிள்ளல்களை வறுத்து மாவில் கொட்டவும். வறுத்த பொருள்கள் அரைத்த மாவுடன் சர்க்கரை மாவையும் கலந்து நன்றாகக் கிளறி தயாராக வைத்துக் கொண்டு நெய்யை அடுப்பில் வைத்து நன்றாகச் சூடாக்கி (புகை வருமுன்) மாவில் சேர்த்து கரண்டியால் கிளறி நன்கு மாவும் நெய்யும் பருப்புக் கிள்ளல்களும் கலந்ததும் தேவையான அளவில், சூடாக இருக்கும்போதே, பரபரவென்று உருண்டைகளைப் பிடித்து தட்டில் அடுக்கவும். ஆறியபின் டப்பாக்களில் அடுக்கி வைக்கவும். உருண்டை உடையாமல் கெட்டியாக நெருக்கி நெருக்கிப் பிடிக்கவும். உதிராமல் வரும். அப்படியும் உதிர்வதாகத் தோன்றினால் மாவில் சிறிது பால் தெளித்தும் பிடிக்கலாம். பால் தெளித்தால் 2, 3 நாட்களுக்குள் செலவு செய்து விட வேண்டும். தங்காது. முழுவதும் நெய் என்றால் நாள்பட இருக்கும் இந்த நவண்மா உருண்டைகள். இதில் நிறைந்திருக்கும் பொருள்கள் அத்தனையும் சத்தானவைகள். புரதச்சத்து நிறைந்த இந்த உருண்டைகள் பெரியவர் சிறியவர்களை மிகவும் விரும்பி உண்ண வைக்கும் சுவை மிகுந்தது. செய்வதும் எளிது. இந்தப் பொருள்களும் எளிதில் கிடைக்கக்கூடிய, அதிக செலவில்லாத பொருள்களால் செய்ய முடிந்த தரமான சத்தான தின்பண்டம். இந்த மாவின் கலப்பில் கஞ்சி செய்து பால் சேர்த்தும் குடிக்கலாம். கொழுக்கட்டை செய்து ஆவியில் வேக வைத்தும் குழந்தைகளுக்குக் கொடுக்கலாம் தேங்காய் சேர்த்து.

**- ஆர். பிரேமா, பெங்களூர்.**



சேப்பங்கிழங்கை இரவே வேகவைத்து தோல் உரித்து வில்லைகளாக நறுக்கி அதிலே காரப் பொடி, பெருங்காயம், உப்பு, 1 டீஸ்பூன் தயிரும் விட்டுப் பிசிறி ப்ரிஜ்ஜில் வைத்து விடவும். காலையில் நிமிஷமாகப் பொரியல் தயார் செய்து குழந்தைகளுடைய லஞ்ச் பாக்ஸில் வைக்கலாம். - மெலட்டூர் ஸாவித்ரீ.

# ஆறுதல் பரிசு ரூ. 100/-

## பாப்கார்ன் உருண்டை

***தேவையான பொருள்கள் :***

*பாப்கார்ன் - ½ கிலோ,*
*ரவை - ¼, ¼*
*சர்க்கரை - 800 கிராம்,*
*பு. அரிசி - 100 கிராம்,*
*நெய் - 150 கிராம்,*
*முந்திரி, திராட்சை, லவங்கம், சிறிய கற்கண்டு - தேவைக்கு.*
*ஏலக்காய் - 10,*
*பால் - ½ லிட்டர் (காய்ச்சியது)*

***செய்முறை :***

புழுங்கல் அரிசியை சிறிது நேரம் ஊற வைத்து, நிழலில் உலர வைக்கவும். ஈரப் பதம் நீங்கியதும் வாணலியில் போட்டுப் பொரியும் வரை வறுத்துக் கொள்ளவும். ஆறிய பிறகு மிக்ஸியில் போட்டு மாவாக்கிக் கொள்ளவும். பாப்கார்னை வறுப்பவர்களிடம் கொடுத்து நன்கு பொரித்துக் கொள்ளவும். பொரிந்த பாப்கார்னை, மிக்ஸியில் போட்டு மாவாக்கிக் கொள்ளவும். ரவையை பொன்னிறமாக வறுக்கவும். சர்க்கரையுடன் ஏலக்காயைப் போட்டு, மிக்ஸியில் அரைத்துக் கொள்ளவும். முந்திரி, திராட்சை, லவங்கம் இவைகளைச் சிறிது நெய் விட்டு வறுக்கவும். பாப்கார்ன் மாவு, ரவை, அரிசி மாவு, முந்திரி, திராட்சை, லவங்கம், கற்கண்டு, சர்க்கரை இவற்றுடன் நெய்யைச் சூடு செய்து நன்கு கலக்கவும். பாலைச் சூடுசெய்து, சிறிது சிறிதாகக் கலவையில் ஊற்றி, உருண்டை பிடிக்கவும். அதிக




மாகப் பாலை ஊற்றாமல் இறுக்கமாகப் பிடிக்கும் அளவுக்கு ஊற்றிப் பிடிக்கவும். அதிகமாகப் பால் ஊற்றினால் உருண்டை இறுகி விடும். இருக்க இருக்க மிகக் கெட்டிப்பட்டு விடும். அதனால் கொஞ்சம் ஊற்றி நன்கு கெட்டியாகப் பிடிக்கவும். உருண்டை நல்ல வாசனையுடன், ருசியாகவும் இருக்கும். மிகவும் சத்தானதும் கூட. செய்வதும் சுலபம்.

**- பி. ருக்மணி, சேலம்.**

## ஆறுதல் பரிசு ரூ. 100/-

### ராகி ட்ரை ஃப்ரூட் பால்ஸ்

**தேவையான பொருள்கள் :**

ராகி மாவு - 1 கப்,
பேரீட்சை (பொடியாக) - 1 கப்,
முந்திரி, பாதாம், பிஸ்தா,
அக்ரூட் பொடித்தது - 1 கப்,
மேரி பிஸ்கெட் பொடித்தது - 1 கப்,
மில்க் மெய்ட் - 1 கப்,
ஏலக்காய்ப் பொடி- 1 ஸ்பூன்.

*செய்முறை :*

ராகி மாவை பச்சை வாசனை போகும் வரை நன்கு வறுத்து ஆறவைக்கவும்.

பின் ஒரு கிண்ணத்தில் அனைத்துப் பொருள்களையும் போட்டு நன்கு கலந்து மில்க்மெய்டை சிறிது சிறிதாக விட்டுக் கலந்து உருண்டையாகப் பிடித்துக் கொண்டு பிரிட்ஜில் வைத்தால் 1 மணி நேரத்தில் அழகாக செட்டாகி விடும். தளராது பார்த்துக் கொள்ளவும். அப்பொழுதுதான் உருண்டை பிடிக்க வரும்.

பெரியவர்களுக்கும் குழந்தைகளுக்கும் ஏற்ற கோடைக் கால ஸ்பெஷல். மிகவும் சத்தான உருண்டை.

குழந்தைகள் கூட தானே தயார் செய்து வீட்டில் உள்ளவர்களை அசத்தலாம். மிகவும் எளிதில் செய்யக்கூடியது. கேழ்வரகு மாவுக்குப் பதில் இதில் வறுத்த சோயா மாவையும் சேர்த்துக் கொள்ளவும். அதுவும் இல்லாவிட்டால் பொட்டுக் கடலை மாவை வைத்தும் பண்ணலாம்.

**- லலிதா ராம்குமார்,**
**சென்னை - 61.**

# திருமண மலர்

##  மணமகள் தேவை

◆ செங்குந்த முதலியார், திருவாதிரை, 30, பி.ஈ., 15,000/- சென்னையில் வேலையில் உள்ள பையனுக்குப் படித்த சென்னையில் உள்ள மணமகள் 26-27 வயதிற்குள் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். மகம், பூரம், உத்திரம், சித்திரை, உத்திராடம், பூரட்டாதி, மிருகசீரிஷம், பூராடம், அவிட்டம் 3ம் பாதம், 4ம் பாதம், உத்திரட்டாதி நட்சத்திரங்கள் பொருத்தமானவை. பெட்டி எண் : 11465

◆ தமிழ் யாதவ், வயது 31, டி.எம்.ஈ., ரோகிணி நட்சத்திரம், சென்னை அம்பத்தூர் தொழிற்பேட்டையில் சொந்தத் தொழில், சொந்த வீடு, நல்ல வருமானம் உள்ள மணமகனுக்கு, நன்கு படித்த மணமகள் தேவை. பெட்டி எண் : 11466

◆ **MNC employed Iyer, well paid, Engineer, Chitirai (2), Kausikam, 30/177, seeks pretty, slim, educated girl around 25/5.5', Respond with horoscope and biodata to anandaav_2004@yahoo.co.in or Box No. 11467**

◆ தஞ்சாவூர், வடமாள், ஷடமர்ஷணம் கேட்டை, 42/5.4', பி.காம்., நாக்பூரில் தனியார் லாரி கம்பெனியில் மானேஜர், இடது கால் சிறிது போலியோ பாதிப்பு இருந்தும் நன்றாக டூ-வீலர் ஓட்டும் வரனுக்கு +2, குடும்பப்பாங்கான வேலை/வேலையில்லாத நாக்பூரில் வசிக்க விருப்பமுள்ள மணமகள் தேவை. லேசான உடல் ஊனமுற்றவர்களும் விண்ணப்பிக்கலாம். 0251/2448113 பெட்டி எண் : 11468

◆ **Iyer, Brahacharanam, Harita, Punarpoosam, 41/5.3', Pvt. Co., 12,000/- seeks suitable bride. Send details horoscope. Contact : K.Viswanathan, Phone : 22238884 Box No. 11469**

◆ வடமாள், வாதூல கோத்திரம், மாநிறம், உத்திரட்டாதி, 21.1.1961, **M.Com., Astrologer, 15,000 p.m.** மாத வருமானம், இடக்கை பழக்கமுள்ள பையனுக்கு வேலைக்குப் போகாத +2, டிகிரி படித்த வடமாள் பிரிவில் இருந்து 1963-70ல் பிறந்த மணமகள் தேவை. **(5 sisters got married and settled)** பெட்டி எண் : 11470

◆ **Tamil Iyer, Vadamal, Bharathwajam, Uthiradam-3, 38/5.4', slim and fair, State Govt. Primary School Headmaster, near Cheyyar, Rs. 11,000/- p.m., seeks +2/Degree employed/unemployed girls. Subsect no bar. Phone : 954182/224234. Box No. 11471**

◆ **Iyer, Brahacharanam, Haritham, Kirthigai, age 40, M.A. doing Business 3 to 5 Lac pa well settled Boy seeks homely girl. Contact : 044-26510446 9444265228 Box No. 11472**

◆ **Iyer, Vadamal, Kousikam, Tiruvonam, 1971, 160cm, B.E. Software Engineer, Bangalore Rs.7 lacs p.a. seeks suitably educated girl. Phone No. 09811632641 Box No. 11473**

◆ வடமாள், நெய்த்திருப காச்யப கோத்திரம், ரோகிணி, 34 வயது, 5.9, பி.காம்., டிப்ளமோ இன் கம்ப்யூட்டர், சொந்த வீடு, சொந்தத் தொழில் புரியும் நல்ல வருமானம் உள்ள பையனுக்கு மணப்பெண் தேவை. தொடர்பு : 044-23772063, 9444016353. பெட்டி எண் : 11474

◆ **Tanjore Brahmin, Bharathwajam, Ashtasahasram, Boy Moolam IV, 32-169, BE, Engineer State Highway requires graduate/post-graduate professional employed/unemployed girl with good family backgrounds. Subsect no bar. Ph : 04565-221618 Box No. 11475**

◆ **Iyer, Vadamal, Haritha Revathi, 43, Never Married, Highly qualified Own Industry and Real Estate Promoter high income Own Factory & Property seeks employed graduate girls preferably Hyderabad. Apply with horoscope, Bio-data to Box No. 11476 T.No. 040-27075382**

◆ Iyer, Brahacharanam, Haritha, Mirgashrisham, 2nd padam, Rishapam DEEE/34, 165 cm, Software Engineer, Project Leader MNC 5 Lakh p.a. seeks suitable girl. Contact Box No. 11477

◆ ஐயர், வாதூல கோத்ரம், வடமா, +2 படித்து தனியார், 8000/- சம்பாதிக்கும் 38 வயது, எந்தக் கெட்டப் பழக்கமும் இல்லாத நல்ல குடும்பத்தைச் சேர்ந்த மணமகனுக்கு பெண் தேவை. வரதட்சணை இல்லை. ஃபோன் : 2461 2783. பெட்டி எண் : 11478

◆ ஐயர், பிரஹசரணம், காஸ்யப கோத்திரம், பூசம் -3, 5.8', வயது 30, சுத்த ஜாதகம், DEEE, BCA, DCS, PDCA, ADCHM, தனியார் கம்பெனியில் சேல்ஸ் எக்ஸிகியூடிவ் வரனுக்கு, படித்த, வேலைக்குச் செல்லும்/செல்லாத பெண் தேவை. ஃபோன்:04298/244681. பெட்டி எண் : 11479

◆ Iyer, Haritham, Brahacharnam, Rohini-IV, fair looking, B.Sc., (Bio-chem), PGD (Micro), Sr. QA Executive, Germen Firm, Chennai, Rs. 25,000/-p.m. 27, 5.7', Own House, only son seeks fair looking graduate preferably employed from respectable family. Box No. 11480

◆ ஐயர், அஷ்டசகஸ்ரம், வாதூலம், திருவாதிரை, 1974, 182 உயரம், மத்திய அரசு அதிகாரி, சம்பளம் ரூ. 17,000/- B.Sc., GNIIT, பையனுக்கு தகுந்த மணமகள் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். தொடர்பு : எ. சுவாமிநாதன், 044-26390370. பெட்டி எண் : 11481

◆ ஐயர், வடமாள், கௌசிக கோத்திரம், அவிட்டம், 30, 170cm, M.B.A. Assistant Manager (Reputed Management Consultancy) வரனுக்கு பட்டதாரி, ஆசிரியை, தனியார் நிறுவனத்தில் சென்னையில் பணிபுரியும் தகுந்த மணமகள் தேவை. ஃபோன் : 2247 8294. பெட்டி எண் : 11482

◆ ஐயர், வடமாள், கௌசிக கோத்திரம், உத்திரட்டாதி, 35, 162 செ.மீ., எம்.காம்., காமர்ஸ் டீச்சர் வரனுக்கு, சென்னையில் நல்ல வேலையிலுள்ள தகுந்த மணமகள் தேவை. ஃபோன் : 2247 8294. பெட்டி எண் : 11483

**◆ Tamil Iyer, Vadama, Kaushikam, Thiruvadirai, 27, 5.9', B.Sc., MCA working Sr. Software Engineer, Satyam Computers, Chennai seeks well educated Hindi Knowing Vadama girl. Contact : 044-52110298. email vis_up@yahoo.com Box No. 11484**

◆ ஐயர், வடமாள், பாரத்வாஜ கோத்திரம், ரோஹிணி நட்சத்திரம், வயது 39, பி.எஸ்ஸி., பட்டதாரி, தனியார் நிறுவனத்தில் பணிபுரியும் மணமகனுக்கு குடும்பப்பாங்கான வேலைக்குச் செல்லும்/செல்லாத மணமகள் தேவை. தொடர்பு கொள்ள : செல் : 09360301333 P.P. No. 9840104859. பெட்டி எண் : 11485

**◆ Iyer, Vadamal, Naithruba Kashyaba, Karthigai-4, 1971, B.Sc., 168 cm, Pvt.co., Chennai, Rs. 8000/- seeks fair graduate Vadamal girl with good family background. Contact parents. Phone : (044)-2474 1542. Box No. 11486**

◆ Vadagalai Iyengar, Srivathsam, Punarpoosam, 1963, 5.6, +2, ITI (M.A. Sociology) now at Bahrain, seeks suitable bride. Ph : 22530782 Box No. 11487

◆ இந்து, முத்தரையர், 29, 5.6, மாநிறம், MBBS, MRCP லண்டனுக்கு அருகில் டாக்டராக பணிபுரிபவர், MBBS, BE, M.C.A. படித்த தகுந்த மணப்பெண் தேவை. ஜாதி தடையில்லை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். முருகேசன், B29, முதல் மெயின் ரோடு, ராமலிங்க நகர், உறையூர், திருச்சி - 620 003. ஃபோன் : 0431-2775289 mani82000@yahoo.com Box No. 11488

**◆ Iyer, Ashtasahasram, Haritha, Moolam-I, 1976/5.9', B.B.A., M.B.A., GNIIT, MNC 70,000/- Dubai, seeks well settled, good-looking bride, subsects no bar. Send horoscope, photo. Ph : 26730882/9840450160 Box No. 11489**

◆ Iyer, Vadamal, Vathoolam, Thiruvonam 30, 5.9' B.Sc.; M.A., BLIS, D.L.L. DPC Rs. 7500/- State Govt. Seeks graduate employed/unemployed girl. Phone : 044-22443015. Box No. 11490

**◆ Madhwa, Kannada, Bharadwajam, Kritikai, 27, 5.6', B.E., Software Engineer, Mumbai Boy seeks professionally qualified working Madwa girl. Girl should be willing to take transfer and settle in Mumbai. Reply to Box No. 11491**

◆ ஐயர், வடமாள், விசுவாமித்திரம், ஆயில்யம், 32, 6.2, எம்.பி.ஏ., சீனியர் எக்ஸிகியூடிவ், தனியார் நிறுவனம், மாத சம்பளம் ரூ. 15,000+ நல்ல சிவப்பு நிறம், நல்ல குடும்பத்தைச் சார்ந்த பட்டதாரி மணமகள் தேவை. உட்பிரிவு சம்மதம். ஃபோன் : 0422-2593952 பெட்டி எண் : 11492

◆ கௌண்டன்யம், பிரஹசரணம், அஸ்வினி, எம்.காம்., படித்து விவசாயத்தில் ஈடுபட்டுள்ள 31 வயது மணமகனுக்கு குடும்பப்பாங்கான வேலைக்குப் போக விருப்பம் இல்லாத மணமகள் தேவை. பெட்டி எண் : 11493

◆ வடமாள், பாரத்வாஜம், திருவோணம்-3, 31, 5.8', Dip in Autocad, BBM, தற்போது சென்னையில் Sr. Cad Engr. Pvt. firm 10,000/- p.m.,

